# கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்







மறைதிரு. S.W. சவரிமுத்து

202

# கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்

ஒரு திறனாய்வு

எழுதியவர்:

" இரட்சணிய யாத்திரிகச் சான்றோர் "

மறைத்திரு. S. W. சவரிமுத்து

பதிப்பு :

குருக்குல இறை இயல் ஆய்வுக்குழு

கீழ்ப்பாக்கம், சென்னை - 600010.

GURUKUL gratefully acknowledges the grant from the Asia Desk of the Lutheran World Federation for the publication of this research work by Rev. S. W. SAVARIMUTHU, graduate of Gurukul in its first set of fifty years ago.

**Herbert Hoefer**

*Director*. Gurukul.

First Edition—March 1978



*Copies can be had from :*

1. Gurukul Research Institute, The Publishers.
   Kilpauk, Madras - 600 010.

2. Rev. Fr. S. W. SAVARIMUTHU,
   41/1268, S. R. M. Road,
   Cochin - 682 018, KERALA.

3. Tranquebar Publishing House,
   9, Abirami Street, Madras - 600 084.

**Price Rs. 6-00**
(Postage Extra)

*Printed by:*
The Tranquebar Printing & Publishing House
9, Abirami Street,
Madras-84.

# கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்

## உள்ளடக்கம்

மகா வித்துவான்
'கலை மா மணி'

# மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள்,

## அணிந்துரை

"நற்ரு மரைக்கயத்தில் நல்லன்னஞ் சேர்ந்தாற்போற்
கற்ருரைக் கற்ருரே காமுறுவர்"

என்பது முன்னேர் உரை.

தாமரைக் குளத்தை அழகிய அன்னம் சென்றடைவது போலக் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த பெரியோரை அவரனைய பெரியோரே சார்ந்து அவர்தம் கல்வி அறிவு ஒழுக்கங்களைத் தாமும் மேற்கொண்டு ஒழுகுவர் என்பது இதன் பொழிப்பு.

பெருங்கவிஞர் எச். ஏ. கிருஷ்ணப்பிள்ளையவர்கள், கிறிஸ்துவ மதத்தைத் தழுவுதற்குமுன் தமிழ் மொழியிலுள்ள இலக்கிய இலக்கணங்களை இனிது பயின்று, கவிபுனையும் ஆற்றலிற் சிறந்து விளங்கி, விருத்தமென்னும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்எனப் போற்றப்படும் கம்பநாடர் இயற்றிய 'இராமாவதாரம்' என்னும் கம்பராமாயணத்தைத் தமக்கு மேல்வரிச் சட்டமாகக் கொண்டு, ஆங்கில மொழியில் ஜான்பன்யன் என்பவர் இயற்றிய'யாத்திரிகன் முன்னேற்றம்' எனப் பொருள்படும் 'Pilgrim's Progress' என்னும் நூலைத் தழுவி 'இரட்சணிய யாத்திரிகம்' என்னும் தமிழ்க்காப்பியத்தைப் படைத்துக் 'கிறித்தவக் கம்பர்' என்று தமிழ்ப்பேரறிஞர்களாற் பாராட்டப்படுவாராயினர்.

எனது பெருமதிப்பிற்குரிய மறைத்திரு. S. W. சவரிமுத்து அவர்கள், கம்பராமாயணத்தையும் இரட்சணிய யாத்திரிகத்தையும் நன்கு ஆராய்ந்து இவ்வொப்பாய்வு நூலை உவந்தியற்றித் தம் மதத்திற்கும் தாய்மொழிக்கும் தொண்டாற்றியுள்ளமை தமிழறிஞர் பெரிதும் பாராட்டுதற்குரியது!

இந்நூலை யான் முற்றும் படித்துப் பெரிதும் மகிழ்ந்தேன்! 'யான் பெற்ற இன்பம் பெறுக இத்தமிழகம்!' எனக் கொங்குதேர் வாழ்க்கை அறிவுடைத்தும்பிகளை அழைத்து ஆற்றுப்படுத்துகின்றேன்!

சன்னை-7
10-10-1977

ஓம் மே. வீ. வே.

# பாராட்டுரைகள்

மா. மறைத்திரு. ஜெயசீலன் ஜேக்கப், B.D., M.Th., (U.S.A.)
லுத்தரன் சபைகுரு, மதுரை-10
உறுப்பினர், T. E. L. C. Church Council.

கிறிஸ்தவத் தமிழுலகம் போற்றிடும் இலக்கியத் தாரகை மூதறிஞர் மறைத்திரு. S. W. சவரிமுத்து அவர்கள் தமது பழுத்த அனுபவத்தைக்கொண்டு தமிழ் மக்களுக்கு அளித்துள்ள 'கிருஷ்ணபிள்ளையும் கம்பரும்' என்ற சிறப்பு நூலைப் படித்துப் பெருமகிழ்ச்சி கொண்டேன். கம்பனுள் கம்பனாய் நுழைந்து, கிருஷ்ணபிள்ளையின் சிந்தையுள் இருந்து. கம்பர், கிருஷ்ணப்பிள்ளை ஆகிய இருவரும் ஆற்றியுள்ள இலக்கிய ஆற்றினில் கிறிஸ்தவம் என்ற தெப்பத்தை மிதக்கவிட்டு, 'ஒப்பிட்டு நோக்கல்' என்ற பாலம் அமைத்திட்ட, நம் நாவலரது முயற்சி பாராட்டுதற்குரியது.

இந்நூலாசிரியர் பன்மொழிப்புலவர் என்பதை வெளிப்படுத்தியிருப்பதுடன், இலக்கியம் என்பது எம்மொழியினர்க்கும் எந்நாட்டவர்க்கும் உரித்தான சொத்து என்பதனைக் காட்டியிருக்கிறார். எடுத்துக் காட்டு: Kerygma, Doxa என்ற கிரேக்கச் சொற்களின் விளக்கத்தை 11 ஆம் 15 ஆம் பக்கங்களிற் காண்க.

கரும்பு ருசிக்கின்றதென்பது அதைச் சுவைத்தவரே அறிவர். இந்நூலாசிரியர் முதுமையடைந்திருந்தும், கன்னித் தமிழால் கன்னலன்ன நற்செய்தியை இலக்கியச் சுவையுடன் தமிழ் நாட்டவர்க்குப் படைப்பதையே தமது பேச்சும் மூச்சுமாகக் கொண்டு பல்லாண்டு காலம் பணிபுரிந்து வருகின்றார்.

அண்மையில். கடல் பாடும் கடலூரில் அமையப் பெற்ற சருத்தரங்கில், இந்நூலை எங்களுக்கு வழங்கி, தமது பழுத்த அனுபவ அலைகளில் கூடிவந்த எங்களைக் களிப்புக்கடலில் ஆழ்த்தி நீந்தப் பழக்கியவர். இத்தகைய அறிஞர் மறைத்திரு. சவரிமுத்து அவர்களின் சேவை வளர்பிறைபோல வளர்ந்து ஒளிர்ந்திட வாழ்த்துகின்றேன்; இறைவனிடம் இறைஞ்சுகின்றேன்!

---

உயர் மறைத்திரு ஜெயசீலன் ஜேக்கப் அவர்கள் 14-1-1978–இல் தரங்கைப் பேராயராகப் பட்டாபிஷேகம் செய்யப் பெற்றனர்.

சாமி அய்யா, தலைமைத் தமிழாசிரியர்,

பி. சி. ஒச்சாத்தேவர், B.A., B.T., உதவித் தலைமை ஆசிரியர்,

ஐ. கி. உயர்நிலைப்பள்ளி, மதுரை.

"கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்" என்ற ஆய்வுரை நூலை இயற்றிய ஆசிரியர் மறைத்திரு S. W. சவரிமுத்து அடிகளார் தம் முன்னுரையில் கூறியுள்ள அவையடக்கம் சான்றோர்க்குரிய இலக்கணத்தை வெள்ளிடை மலையென எடுத்துக்காட்டியுள்ளது (பக்.4). இது, "ஆன்றவிந்தடங்கிய சான்றோர் பலர் யான் வாழும் ஊரே" என்ற பிசிராந்தையாரின் ஆன்றவிந்தடங்கிய சான்றோரின் இலக்கணத்தோடு ஒத்துள்ளது.

கி.பி. 886-ல் அரங்கேறிய கம்பராமாயணத்தின் கவிநயத்துடன், கி.பி. 1894-ல் வெளி வந்த கிருஷ்ணப்பிள்ளையின் இரட்சணிய யாத்திரிகத்தின் கவிச்சுவையை ஆசிரியர் நன்கு உணர்ந்து ஒப்புமை காட்டியுள்ளது பாராட்டிற்குரியது.

"உலகம் யாவையும் தாம் உளவாக்கலும்" என்ற கம்பரது கடவுள் வாழ்த்துடன், "ஆக்கவும் வல்லவன் நீ" என்ற கிருஷ்ணப்பிள்ளையின் கவிக்கு ஆசிரியர் தந்துள்ள விளக்கம் பாராட்டிற்குரியது. (பக். 15)

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பரம்பொருளே" என்ற கருத்தையும், "மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய" என்ற கம்பர் பாடலுடன் இணைத்துள்ளதும், விளக்கம் கொடுத்துள்ளதும் மிகவும் பாராட்டிற்குரியன (பக். 19-20).

ஆசிரியர் மறைத்திரு. சவரிமுத்து அவர்களின் தொண்டு சிறந்து வாழ வாழ்த்துகிறோம்!



C. RAMALINGAM, M.A., M.Litt.,
Reader in Philosophy,
Annamalai University.

'கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்' என்ற உங்களது அருமையான நூலைப் படித்தேன்.

பக்கம் 10–12- ல், புகழ்தலுக்கும் பரவலுக்கும் உள்ள வேறுபாட்டைத் தாங்கள் புலப்படுத்தி, கிருஷ்ணப்பிள்ளை காட்டியுள்ளதையும் நன்கு எடுத்து எழுதியுள்ளீர்கள்.

உடல், பொருள், ஆவி என்ற மூன்றையும் அவர்க்குத் தக்கணையாக அளித்து வினை நீக்கமும் வீடுபேறும் வேண்டுமென்ற வேண்டுகோளோடு முடித்திருப்பது பெருவிருந்தாய் உள்ளது. (பக். 23-24.)

நீங்கள் திருவாசகத்தை ஆழமாகப் பயின்றுள்ள காரணத்தால் 'அவன் பெருமையும் நமது சிறுமையும்' என்ற உண்மையை வெளிப்படுத்திய இடங்கள் பயனுள்ளவை.

பக்கம் 20-இல் "சொல்லொன்றுல்" என்ற பகுதிக்கும் "The Gospel according to John: The Coming of Christ" என்றதின் முதல் வசனங்களுக்கும் பொருத்தம் காணலாம் என்று தோன்றுகின்றது.

உங்கள் பணி சீரிய பணி,
அறிவிற்குப் பெருவிருந்து!

---

குறிப்பு :

இப்பாராட்டுரைகள், எமது நூலின் முதல் ஐம்பது பக்கங்களை மட்டும் படித்து எழுதப்பட்டவையாகும். இவற்றை வழங்கியவர்களுக்கு எமது அன்பு கலந்த நன்றி.

ஆசிரியர்.



## நன்றியுரை

Our warm thanks are due to Dr. K. Rajaratnam, Asia Secretary of the Lutheran World Federation and Rev. H. Hoefer, Director of the Gurukul Research Institute, for their generous help in more ways than one.

**S. W. Savarimuthu**

அன்பு மனைவியார் அன்னபூரணம்
அம்மையார்க்கும் செல்வ மகளார் டாக்டர்
திலகவதி அம்மையார்க்கும்

அன்பளிப்பு

# கிருஷ்ணப்பிள்ளையும் கம்பரும்

## இயற்றியவர் : மறைத்திரு. S. W. சவரிமுத்து

### முன்னுரை

மகாவித்துவான் எச். ஏ. கிருஷ்ணப்பிள்ளையைச் சாதாரண மாகக் 'கிறிஸ்தவக் கம்பன்' என்று கூறுவது மரபு. இவ்வாறு வழங்குவது பொருந்துமா என்பது ஆய்வுக்குரியது. இவ்வாராய்ச்சியில் ஈடுபடுகிறவர்கள் கம்பராமாயணத்தையும் கிருஷ்ணப்பிள்ளை எழுதிய 'இரட்சணிய யாத்திரிகத்தை'யும் பல கோணங்களில் நின்று துருவித்துருவி ஆராய்ந்திருக்க வேண்டும். இவ்வாறு செய்ய எமக்குப் போதிய வாய்ப்பும் ஆற்றலும் இல்லை.

'கம்பன் என்னும் கடல் கண்டோம்' என்பர் பலர். அவர்களில் யாவரே முடிவு உறக் கண்டார்? சுக்கிரீவனுடைய தானையை இராமனும் இலக்குவனும் இருபது நாள்கள் இரவு பகலாகப் பார்த்தும் நடுவு கண்டிலர்; முடிவை எவ்வாறு காணப்போகின்றனர்? முடிவைக் கண்ட பிறகே சீதையைக் காண த்தொடங்குவோமென்றால், நாள் பல பெயரும். எனவே, இலக்குவன் சொல்கேட்டு, செய்ய வேண்டியவற்றை உடனடியாகச் செய்தல் வேண்டுமென்று கருதி இக்கட்டுரையை எழுதப் புகுந்தோமென்பதை அவையடக்கமாகக் கூறிக்கொள்வோம்.

அரங்கின்றி வட்டாடாமல், குறித்த எல்லைக்குள் நின்று, கம்பரையும் கிருஷ்ணப்பிள்ளையையும், அவர்கள் எழுதிய பாடல்களைக் கொண்டே, ஒன்றாய், வேறாய், உடனாய்க் காட்டத் தொடங்குவோம்.

கிருஷ்ணப்பிள்ளைக்குத் துணை செய்த நூல்கள் பல. அவற்றில் (Bible) விவிலியம் என்பது தலையாயது. கம்பராமாயணம் கி.பி. 886 - பெப்ருவரி 23 புதன்கிழமை அரங்கேறிய பெருநாள். வைணவ, சைவ சமயப்பத்தி இலக்கியங்கள் அவர் மனத்தில் வேரூன்றி இருந்தன.

'Bunyan' என்பாரது 'Pilgrim's Progress' என்ற ஆங்கில நூலைப் பவுல் என்பார், 1882, அக்டோபர் மாதம், 'மோட்சப் பிரயாணம்' என்று மொழிபெயர்த்து வெளியிட்டார்.

இதைத் தழுவியே, 'இரட்சணிய யாத்திரிகம்' என்ற தம் கிறிஸ்தவச் செந்தமிழ்க் காப்பியத்தைக் கிருஷ்ணப்பிள்ளை சென்னையில் 1894ஆம் ஆண்டு வெளியிட்டார்.

பன்யனுடைய நூல் ஒரு முற்றுருவகம். இந்நூலின் இறுதிச் சொற்களாவன :

"Then I saw that there was a way to hell, even from the gate of heaven, as well as from the city of Destruction."

"So I awoke, and behold it was a Dream."

இத்தகு நூலின் முடிவுச்சொற்கள், சுப்ரமணிய பாரதியாரது 'குயில் பாட்டின்' முடிவுரையை நமக்கு நினைவூட்டுகிறது.

"சோலைக் குயில், காதல் சொன்னகதை அத்தனையும்,
மாலை அழகின் மயக்கத்தால் உள்ளத்தே
தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சியென்றே கண்டு
கொண்டேன்.
ஆன்ற தமிழ்ப்புலவீர்! கற்பனையே யாகுலும்,
வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க
யாதேனுஞ் சற்றே இடமிருந்தாற் கூறீரோ?"

என்று தமிழ்ப்புலவரைக் கூவியழைத்தார் பாரதியார்.

இவர் தோன்றுவதற்குப் பல்லாண்டுகளுக்கு முன் தோன்றிய கிருஷ்ணப்பிள்ளையும் இதே கூக்குரலை எழுப்பித் தம் காவியம் கற்பனையேயானுலும் வேதாந்தமாக விரித்துப் பொருளுரைத்தார் என்பதை அவர்தம் காப்பியத்தில் கண்டு இன்புறுக!

கிருஷ்ணப்பிள்ளை இரட்சணிய யாத்திரிகம் எழுதிய முறை, அவருக்குப் பின்தோன்றிய மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் இலக்கிய முறைக்குச் சில விதங்களில் முன்னேடியாய் இருக்கின்றது. பாரதியாரது பாஞ்சாலி சபதத்துக்கு டாக்டர் மா. இராசமாணிக்கனர் எழுதிய முன்னுரையில் பாரதியார் கண்ட புதுமையைப்பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளது நம் கவிஞருக்கும் ஓரளவு பொருந்தும்:

"பாரதியார் உழுத சால்வழியே உழுவதில் விருப்பமில்லாதவர்; தவருயின், பழைமையைச் சாடிப் புதுமையைக் காணத் தயங்கார்; வரையறைக்காகத் தம் வாழ்வை, தம் கவிதையை, காப்பியத்தை வரையறுத்துக்கொள்ளும் வழக்கம் அவர்பால் இல்லாததொன்று. வாழ்க்கை நெறியாயினும், கவிதை நெறியாயினும், காப்பிய நெறியாயினும் நல்லன கொண்டு அல்லன தள்ளும் இயல்பு அவர் பாலுண்டு."

"இதன் உண்மையைக் கிருஷ்ணப்பிள்ளை கம்பரையும் பன்யனையும் எடுத்தாண்ட விதத்தில் காணலாகும். பன்யன் எழுதியது உரைநடையில் கிருஷ்ணப்பிள்ளையின் இரட்சணிய யாத்திரிகம் இவ்வுரை நடையின் வெற்று மொழிபெயர்ப்பு என்று சொல்ல

இயலாது. நம் கவிஞர்பெருமானது கவிதைப் பாங்குடைய உள்ளத்தில் தோய்ந்து வந்த மறுபடைப்பு என்றே இதைக் கொள்ள வேண்டும்" என்று பேராசிரியர் அ. சீநிவாசராகவன், 'ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை' என்னும் நூலில் (பக். 45) எழுதியுள்ளார்.

இவர் பன்யனைப்பற்றிக் கூறியது, கம்பருக்கும் கிருஷ்ணப் பிள்ளைக்கும் உள்ள தொடர்புக்குப் பலவகையில் பொருத்தமாகும். இரட்சணிய யாத்திரிகம் முழுக்க முழுக்க ஒரு கிறிஸ்தவக்காவியம். இது குறித்துப் பேராசிரியரது திறனாய்வைக் காண்க:

"பன்யன் பயன்படுத்தும் உருவகங்களில் சிலவற்றை... கிருஷ்ணப்பிள்ளை தம் நூலில் அமைத்துக்கொள்கின்றார்; அதோடு, பன்யனுடைய எளிமையான, இயல்பான போக்கை விடுத்து, காவியப் போக்கை மேற்கொள்ளுகிறார். இடையிடையே நீண்ட தோத்திரப் பாடல்களும். நீண்ட தத்துவ விளக்கங்களும் இடம் பெறுகின்றன. சுவிசேஷமார்க்கப்படலம், இரட்சண்ய சரிதப் படலம் (இரட்சண்ய நவநீதப் படலமும்கூட) ஆகிய இரு (மூன்று) படலங்களும், பன்யனுடைய நூலில் அங்கங்கே குறிப்பாக உணர்த்தப்படும் சமய உண்மைகளையும், கிறிஸ்துவைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் திரட்டித் தருவதோடு, பைபிள் (பழைய) புதிய ஏற்பாட்டின் சில பகுதிகளை அப்படியே தமிழ்க்கவி வடிவிலே திரட்டித் தருகின்றன."

கிருஷ்ணப்பிள்ளையின் சாதனைகளைப்பற்றிச் சீநிவாசராகவன் திறம்படக் கூறியது நாம் ஊன்றிக் கவனித்தற்குரியது.

"பன்யனுடைய மோட்சப் பிரயாண'மும், பைபிள் - பழைய புதிய ஏற்பாடுகளும் இரட்சணிய யாத்திரிகத்தின் மூல நூல்கள் கருத்தைப் பொறுத்த அளவிலே. உணர்ச்சியும், கற்பனையும், புது அமைப்பும் கிருஷ்ணப்பிள்ளை தந்தவை. தமிழோ, 'தேவாரம்', 'அருளிச்செயல்', இராமாவதாரம், குறள், தாயுமானவர் பாடல் முதலிய பழைய நூல்களும். கிருஷ்ணப்பிள்ளையின் காலத்துப் பேச்சு வழக்கும் சேர்ந்து சமைத்த தனிக்கலவை. செய்யுட்பாங்கு, பழைய தமிழ் மரபை ஒட்டியது. புதிய சமயம் ஒன்றையும் அது பற்றிய அனுபவங்களையும், மரபை ஒதுக்காத காவியமாகத் தமிழில் வெளியிட்டதே கிருஷ்ணப்பிள்ளையின் சாதனை".

இத்தகு அரிய சாதனைகளை 'எல்லோருக்கும் எளிதாக விளங்குவன' என்று கிருஷ்ணப்பிள்ளை தம் நூல்களைப்பற்றிக் கூறுவதைச் சீநிவாசராகவன் ஒத்துக்கொள்ளவில்லை; நாமும் ஒத்துக்கொள்ளவில்லை. "பல பகுதிகள் கடினமாகவே இருக்கின்

றன. ஆனால், கிடைத்த சொற்களையெல்லாம் இயைத்து, புது வலிமையை நோக்கித் தமிழ்க் கவிதையை அவர் (திசை) திருப்பு கிறார் என்பது உண்மை."

இந்த உண்மையைப் பாரதியாரின் பாடல்களையும் கிருஷ்ணம் பிள்ளையின் பாடல்களையும் ஒப்பிட்டுப் படித்தவர்கள் ஒப்புக் கொள்வார்கள். இருவரும் தம் இலக்கியங்களில் திசை திருப்பிப் புதுமையை உருவாக்கினர். எனினும், பாரதியார் பாடல்களைப் படித்துப் புரிந்துகொள்வதற்கு அகராதிகளைத் திருப்பத் தேவை யில்லை. கிருஷ்ணப்பிள்ளையின் பாடல்களைப் புரிந்துகொள்வதற்கு அகராதிகள் மட்டும் போதா. அவற்றிற்குப் பொருள் உரையும் தத்துவ ஆராய்ச்சியில் ஆழ்ந்து அகன்ற நுண்மாண் நுழை பொருள் காணும் அறிவுடையோரது அகல உரையும் வேண்டும்.

இத்தகையவாற்றல் எமக்கில்லையென்றாலும், ஏனைய திறனாய்வு வல்லுநர்கள் இத்துறையில் ஈடுபடுவதற்கு இதுவொரு முன்னோடியாக இருக்கும் என்ற ஆசை பற்றி இவ்வுரையை எழுதலானோம்.

## விராதன், கவந்தன், கிறிஸ்தியான் :

விராதன், கவந்தன் வாயிலாகக் கம்பர் பாடிய பாடல்களையும் கிறிஸ்தியான் வாயிலாகக் கிருஷ்ணப்பிள்ளை பாடிய பாடல்களையும் நமது ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்வோம் :

ஆரணிய காண்டம், விராதன் வதைப் படலத்தில் சில பாடல்கள் கம்பரால் பாடப்பெற்றுள்ளன. இரட்சணிய யாத்திரிகம், ஆதிபருவத்தில் சுமை நீங்கு படலத்தில் கிருஷ்ணப்பிள்ளை மேற் கூறிய கம்பராமாயணப் பாடல்களை மனத்தில் கொண்டு, 'மறைவாணன்' என்ற கிறிஸ்தியான் பாடியதாக, 'சொல்லொன்றால்' எனத்தொடங்கும் பாடலிலிருந்து பன்னிரண்டு விருத்தப் பாக்களைப் பாடியுள்ளதை இவண் எடுத்துக்கொண்டோம்.

கம்பருக்கு முதல்நூல் வான்மீகி ராமாயணம். வான்மீகத்தி லிருந்து விராதன், கவந்தன் என்பாருடைய கதைகளை எடுத்துக் கொண்ட கம்பர், வான்மீகத்தில் இல்லாத இப்பாடல்களைத் தமிழ் முன்னோரது பத்திப் பாடல்களை உள்ளத்தில் கொண்டு, பாடியுள்ளார்.

கிருஷ்ணப்பிள்ளைக்கு முதல் நூல்கள் இரண்டு: ஒன்று ஜான் பன்யன் சிறையிலிருந்து எழுதிய மோட்சப் பிரயாணம் (John Bunyan's Pilgrim's Progress.); மற்றொன்று, விவிலியம் (The Holy Bible-Old Testament and the New Testaments.)

மூன்ருவதாக, கம்ப ராமாயணத்தின் செய்யுள் நடையும் காப்பியப் போக்கும், சொல்நடையும், சொற்ருெடர்களும், உவமைகளும் கிருஷ்ணப்பிள்ளையின் இரட்சணிய யாத்திரிகத்தில் செறிந்துள்ளன. பெருங்காப்பிய இலட்சணங்களில் தலையாய 'தன்னிகரில்லாத தலைவனை உடைத்தாய்' இருத்தல் வேண்டும் என்பது. இயேசு கிறிஸ்துவையே தம் பெருங்காப்பியத்திற்குப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டார் கிருஷ்ணப்பிள்ளை.

"முன்னேர் மொழிபொருளே யன்றி, அவர்மொழியும்
பொன்னேபோல் போற்றுவம்"

என்ற வண்ணம், கம்பர், திருவள்ளுவ நாயனுர் முதலிய மகா கவிகளின் கருத்தும், பொருளும், சிறுசிறு சொற்ருெடர்களும் இந் நூலகத்து அரதன கசிதம் போலப் பொருந்தப் பதிக்கப் பட்டன. அவைகள் இடையிடை மிளிரக் காணலாம்' என்று அவரே எழுதியுள்ளார்.

## பாடாண் திணை

விராதன், கவந்தன், கிறிஸ்தியான் என்ற இம்மூவரும் பாடியபாடல்கள் 'பாடாண் திணை' என்ற தமிழ் இலக்கிய வகையைச் சார்ந்துள்ளன என்பது அறிதற்பாலது. சொற்பொருள் எதுவாயினும், பாடாணுக்குரியதாகக் கொள்ளத்தக்க பொருள் 'புகழ்மொழிப் பாடல்' என்பதேயாகும்.

இப்பாடல்கள் கடவுட்புகழ்ச்சி, கடவுள் வாழ்த்து ஆகவும், பாட்டுடைத் தலைவனுகவுமுள்ள மன்னனைப் புகழ்வதாகவும் வாழ்த்துவதாகவும் கொள்ளப்படும். கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்னும் ஆறும் கடவுளைப் புகழ்வனவாம். புரைதீர் காமம் புல்லியவகை ஐந்திணை தழுவிய அகமாகும்.

மன்னரைப் பரவிப் பின்னர்ப் பரிசு பெறுதல் ஒரு வகை. அருள் பரிசு பெற்ற பின்னர், கடவுளைப் பாடிப் பரவிப் புகழ்தல் மற்ருெரு வகை.

இவ்விரு வகைகளுள், இரண்டாவது வகையே விராதன், கவந்தன், கிறிஸ்தியான் என்பவர்கள் கைக்கொண்ட முறையாகும் என்பது அவர்கள் பாடல்களிலிருந்தும் அவர்கள் வரலாறுகளிலிருந்தும் நாம் அறிதல் கூடும்.

மக்கட்பாடாண் போலவே, கடவுட்பாடாணும் சங்க காலத்தே தோன்றி, பத்திக் காலத்தில் உயர்நிலை அடைந்துள்ளதைக் கம்பரும் கிருஷ்ணப்பிள்ளையும் அறிந்து அனுபவித்து இருந்தனர்.

இத்தகு பாடல்களை 'Lyrics' என்றும், 'Odes' என்றும், 'Hymns' என்றும், 'Panegerics' என்றும் ஆங்கிலத்தில் கூறுவர்.

நாம் எடுத்துக்கொண்ட பாடல்களை, பத்திப் பரவசம் பாடல்கள் என்றும், துதிப்பாடல்கள் என்றும், போற்றிப்பாடல்கள் என்றும், தேவபாணி என்றும் பெயரிடலாம். இவற்றை, சாத்திரத்தைத் தோத்திரமாகப் பாடிய, கருத்துச் செறிந்த, பொருள்சேர் புகழ் நிறைந்த பாடல்கள் எனினும் அமையும்.

புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே ?

இத்தகு துதிப்பாடல்கள் யாரானுமொருவன் தானகப் பாடிவிட முடியாது. கடவுள் மனம் வாக்குக்கு எட்டாதவர் மட்டுமல்லர்; மக்களுடைய துதிக்கும் எட்டாதவர். தேவபாணி பாடுவதற்கும் இறையருள் வேண்டுவதாகும். இவ்வுண்மையைக் கம்பரும் கிருஷ்ணப்பிள்ளையும் அறிந்திருந்தார்கள் என்பதை அவர்கள் பாடியவற்றிலிருந்தே நாம் காணுதல் கூடும்.

"விண்ணில் நின்றவன் விரிஞ்சனே முதலினர் யார்க்கும்
கண்ணில் நின்றவன் இவன்" எனக் கருத்துற உணர்ந்தான்
எண் இல் அன்னவன் குணங்களை வாய்திறந்து இசைத்தான்
புண்ணி யம்பயக் கின்றுழி அறியதுஎப் பொருளே ?

என்பது கம்பரது கூற்று,

'கவந்தன் இராமனைத் துதித்தல்' என்ற தலைப்பில் வரும் ஒன்பது பாடல்களுக்குத் தோற்றுவாயாக இச்செய்யுள் அமைந்துள்ளது.

'பெரும்பாவியாகிய கவந்தன் இறைவன் குணங்களைக் கூறித் துதிக்க எங்குக் கற்றான்?' என்று தோன்றும் ஐய வினவை எதிர் நோக்கிய கம்பர், 'புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே? அதாவது, ஒரு பொருளும் அரிதன்று' என்று சொல்லி வைத்தார்.

இராமன் யார் என்பதைக் கவந்தன் கருத்துற உணர்ந்தான்; அவனுடைய எண்ணற்ற குணநலன்களை வாய் திறந்து இசையோடு பாடினன். 'இவை யாவையும் அறிவினர் அருளினர்' என்ற கருத்தில் கம்பர் அமைத்துள்ளது, நாம் அறிந்து இன்புறத்தக்கது.

கவந்தனைப்போலவே, விராதனும் பாடிய தேவபாணி தானகப் பாடாது,

"அறிவு வந்து உதவ, நம்பனை அறிந்து பகர்வான்"

என்றார் கம்பர் (விராதன், செ. 16).

விராதன் வதைப் படலத்தில் சொல்லப்பட்ட கடவுள் வாழ்த்திலும்,

'ஆதி நாதர்எம் அறிவினுக்கு அறிவு'

என்ருர். உயிர்கள் தாமே அறியாமல் இறைவன் அறிவிக்க அறிதலின், இறைவனை 'எம் அறிவுக்கு அறிவு' என்ருர்.

அடுத்து, கிருஷ்ணப்பிள்ளையின் பாடல்களுக்கு வருவோம்:

கிறிஸ்தியான் என்ற மோட்சப் பிரயாணி, தான் செல்லும் வழியிலுள்ளதொரு சிறு குன்றத்தினுச்சியில் குருசொன்றைத் தன் மானத விழியாலே கண்டான். (குருசு - Cross, கிராசு, சிலுவை). கடவுள் வேந்தன் தனி மகனர் அக்குருசில் அறையுண்டிருந்தார். அவரது திருமேனி முழுவதும் இரத்த வெள்ள ஆருய் இருந்தது. அவர் குற்றுயிரோடு உடல் நைந்துள்ள கோலத்தை அவன் கண்டான்.

"கொற்றவன் ஒருசேய்அக் குருசினில் அறையுண்டு
முற்றுகு செஞ்சோரி முழுகிய திருமேனி
குற்றுயி ரொடுநையக் கண்டனன் ஒருகோலம்!"

அப்போழ்து அவன் கண்ட காட்சியின் பயனுக அவன் முதுகை அழுத்தி வைத்திருந்த பாவச்சுமை ஒரு நொடியில் விழுந்து, பன்முறை புரண்டுஓடி, ஒரு படுகுழியில் வீழ்ந்து, புகுந்த இடம் தெரியாமற்போய்விட்டது.

தன்னுல் தூக்க இயலாத பாவச்சுமை வீழ்ந்ததும், மறைவாணன் அகமகிழ்ந்தான்: சுமையால் கூனடைந்த அவன் யாக்கை நிமிர்ந்தது. 'நின்மலனுன தேவ சுதன் இங்கு அவதரித்தார்; அளவில்லாத புண்ணியத்தாலே நான் உய்ந்தேன்!' என்று சொல்லி உருகி, அகமகிழ்ந்து கிறிஸ்துவைத் துதிப்பானுயினன், கிறிஸ்து பெருமானின் 'புண்ணியத்தாலே'

'உஞ்சனன் அளியேன் என்று உருகிஉள் உவந்து ஏத்தி'

என்ருர் கிருஷ்ணப்பிள்ளை. இதில் இவ்வாசிரியரின் இலக்கிய நயத்தைக் காண்போம்:

1. 'புண்ணியத்தாலே' என்ற சொல்லையும் பொருளையும் கம்பரும் கிருஷ்ணப்பிள்ளையும் ஆண்டுள்ளார்கள்.

2. 'யாக்கை நிமிர்ந்து' என்ருர் கிருஷ்ணப்பிள்ளை. 'தோமுடை யாக்கையைத் துறவா......விண் உற நிமிர்ந்தான்!' என்ருர் கம்பர்.

3. இதுகாறும், கிருஷ்ணப்பிள்ளை கம்பரைப் பின்பற்றிய தைக் காட்டினேம். இனி, நம்மாசிரியருக்கு முதல் நூலான மோட்சப் பிரயாணத்தை அவர் எவ்வாறு கையாண்டார் என்பதைக் காட்டுவோம்.

In Bunyan's Pilgrim's Progress we read in this context the following: "Then he stood still a while to look and wonder; for it was very surprising to him that the sight of the cross should thus ease him of his burden. He looked therefore, and looked again, even till the springs that were in his heart sent the water down his cheeks". (Zechariah. 12:10)

ஜான் பன்யன் ஆங்கில வசன நடையில் எழுதியுள்ளதைக் கிருஷ்ணப்பிள்ளை தமிழ் விருத்தப்பாவில் பாடியுள்ளதைக் கீழே காண்க:

"மன்பதை உயிர்வாழ வரும்அருள் மணிமல்கும்
அன்புத தியைநோக்கி. ஆவியின் அனல்துற்றி,
என்புநெக்கு, உளம்மாழ்கி, இருவிழி புனல்கொள்ளப்
பொன்புரை சரண்நீழல் புக்கனன் புகலுற்றுன்.'

[அன்புததி-அன்பு உததி: உததி=கடல்]

மக்கள் உயிர் வாழ்வதற்கென்று வரும் அருள்மணி நிரம்பிய சிலுவையில் தொங்கும் அன்புக் கடலை நோக்கி, தூய ஆவியின் அனல் பற்றி, எலும்பும் நெக்குருகி, உள்ளம் மாழ்கி, இரு விழிகளும் கண்ணீர் கொள்ள, கிறிஸ்து பெருமானது பொன்னடி நிழலில் புகுந்தவன், கீழ்வருமாறு பேசத் தொடங்கினன் என்பது பொருள்.

முதனூலாசிரியர் ஆங்கிலத்தில் மிக எளிய நடையில் ஆறு வரிகளில் எழுதியவற்றைக் கிருஷ்ணப்பிள்ளை தமிழில் சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்தாரா என்ன? பன்யன் மனத்தில் இருந்ததை, அவர் சொல்லாமற் சொல்லியவற்றைத் தம் உள்ளத்தில் தேக்கி, அதன் மெய்ப்பாடுகளையெல்லாம் நேரில் நின்று கண்டு கேட்டு உற்றறிந்தார்போல அல்லவா பாடியுள்ளார் கிருஷ்ணப் பிள்ளை? இவர்தம் பாடலில் பயின்ற ஒவ்வொரு சொல்லுக்கும் சொற்றொடர்க்கும் தமிழ்ப் பத்திப்பாடல்களில் நாம் மேற்கோள் காட்ட இயலுமன்றே? இவற்றில் ஒன்றை மட்டும் எடுத்துக் காட்டுவோம்:

"பள்ளம்தாழ் உறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகும் அவர்நிற்க, என்னை ஆண்டாய்க்கு
உள்ளந்தாள் நின்றுஉச்சி அளவும் நெஞ்சாய்
உருகாதால், உடம்புஎல்லாம் கண்ணாய், அண்ணா!

வெள்ளந்தான் பாயாதால்! நெஞ்சம் கல்லாம்;
கண்-இணையும் மரம் ஆம்வெவ் வினையினேற்கே”
(திருவாசகம், திருச்சதகம், செ. 25)

மேற்கண்டவாறு பாடின கிருஷ்ணப் பிள்ளை என்னென்னவெல்லாம் திறம்படச் செய்துள்ளார் என்பதைக் காண்போம்:

இங்கிலாந்து நாட்டில், 'Bedford' என்ற ஊரில் சிறைச்சாலையில் இருந்து மன்யன் கண்ட மானதக் காட்சியையும், ஆங்கிலத்தில் எழுதியுள்ள கிறிஸ்துவையும் அவர்தம் அடியானையும் தமிழ் நாட்டிலுள்ள தமிழர்களாகச் செய்துவிட்டார் கிருஷ்ணப்பிள்ளை. தமிழ் மொழியைக் கிறிஸ்தவமாக்கிவிட்டார் கிருஷ்ணப்பிள்ளை,

இத்தகு ஆக்கப்பணியில் இவர் கம்பர்வழியிற் சென்றார் என்பது தேற்றம.

கம்பர் தம் நூல் வரலாற்றையும் சிறப்பியல்பையும் தமது பாயிரத்தில் தெளியக் காட்டியுள்ளார் (செ. 10). தேவ பாடையில், அதாவது, சம்ஸ்கிருதத்தில், வான்மீகர் செய்த கதையை, “நான் தமிழ்ப் பாவினால் உணர்த்திய பண்பு” என்று கம்பரே சொல்லிப் போந்தார். அதே பாணியில் கிருஷ்ணப்பிள்ளையும், ஜான் பன்யன் ஆங்கிலத்தில் எழுதியதைத் தமிழில், தமிழ் யாப்பி லக்கணத்தில் குறைவொன்றும் ஏற்படாமல், தமிழர் மரபுவழி யொழுகித் தம் பெருங்காப்பியத்தை இயற்றியுள்ளார் என்பது நாம் ரசித்து இன்புறத்தக்கது.

இதுகாறும் நம்மாசிரியன்மார் தத்தம் மரபு வழியில் நின்று கவி பாடுவதை ஓரளவு கண்டோம். இனி, அவர்கள் எடுத்துக்கொண்ட முதனூல்களின்றும் மாறுபட்டுள்ளமையையும் காண்போம்:

ஜான் பன்யன், சிலுவைக் காட்சியைக் கண்டு சுமை நீங்கிய பின்னர்க் கிறிஸ்தியான் அடைந்த இன்ப நிலையைக் குறிப்பிட்டு, பழைய ஏற்பாட்டில் உள்ள சகரியா 12:10ஐ மேற்கோளாகக் காட்டினார் கிருஷ்ணப்பிள்ளை. சகரியா தங்களை ஊடுருவக் குத்தியவனைக் கண்டு அழுது புலம்பிய எருசலே மக்களைப்பற்றி எழுதியுள்ளார். ஆனால் தங்களுக்காகச் சிலுவையில் பாடுபட்ட இயேசுவைச் சிலுவை மிசைக் கண்ட பின்னர், அவலச்சுவை இன்பச் சுவையாக மாறிற்று என்பதே கிருஷ்ணப்பிள்ளையவர்கள் பாடிய தேவ பாணியாகும்.

மேலும் ஒரு நயத்தைக் காண்போம்: ஜான் பன்யன் கிறிஸ்தியானுடைய துதிப்பாடலாக ஆங்கிலத்தில் எட்டு வரிகளில் மட்டும் பாடியதைக் கிருஷ்ணப்பிள்ளை பதினொரு விருத்தப்பாக்

களில்-44 அடிகளில் பாடியுள்ளார். காரணம்: விராதன் துதிப்பாடல் பதினுன்கு பாடல்களாகவும் கவந்தன் துதிப்பாடல் ஒன்பது பாடல் களாகவும் கம்பர் வாக்கில் அமைந்தது ஒரு காரணமாயிருக்கலாம்.

As it may be of help to our readers we give below the eight lines of John Bunyan's song of praise.

John Bunyan has given in his Pilgrim's Progress, Christian's song of praise on seeing the cross and the burden of sin falling off his back :

"Thus far did I come laden with my sin ;
Nor could aught ease the grief that I was in,
Till I come hither : what a place is this !
Must here be the beginning of my bliss ?
Must here the burden fall from off my back ?
Must here the strings that bound it to me crack ?
Blest cross ! blest sepulchre ! blest rather be
The Man that there was put to shame for me !"

This is a poem of spiritual ecstasy. At the sight of the Cross the man's burden of sins has cracked its strings and in an emotional pitch he is raising three questions followed by a crescendo of three blessings: Blest the cross, blest the sepulchre and the highest of all: Blest rather be the Man! The real acme of the crescendo was that the Man on the cross was put to shame 'for me'.

It was this poem that has inspired our poet Krishna pillai. He has used the poetic pattern laid down by Kambar in his songs of praise by Viraadhan and Kabandan. Krishna Pillai has surpassed both John Bunyan and Kambar in his song beginning with the words 'Sollondral.......'

We shall now proceed to study them carefully :

தேவபாணிப் பாடல்கள் என்னப்பட்ட இம்மூன்று பாடல் களிலும், புகழ்தல், பரவல் என்ற இரு தன்மைகளைக் காணலாம். இளம்பூரணர் வரையறையின்படி, (1) 'புகழ்தல்' என்பது இறை வனது பல்வேறு செயல்கள், வடிவம் ஆகியவற்றைப் போற்றிப் பாடுவதாகும். மாணிக்கவாசகரது 'கீர்த்தித்திருவகவல்' இதற்கு எடுத்துக்காட்டாகும். (2) 'பரவல்' என்பது 'வாழ்க', 'போற்றி' என வாழ்த்துவதும் வழிபடுவதும் ஆகும்.

இந்நுண்ணிய வேறுபாடுகளை இக்கால இறை இயல் வல்லுநர்கள் ஆங்கிலத்தில் கூறிவரும் மரபுச் சொற்களோடு ஒப்பிட்டு நாம் அறிந்துகொள்வது நலம் பயக்கும்.

(1) 'புகழ்தல்' என்பதை 'Kerygmatic statements' என்றும் (2) பரவல் என்பதை 'Doxological statements' என்றும் கூறலாம்.

'Kerygmatic statements' speak of definite earthly events that are understood as events that come from God, and in this sense they speak of ‹God's acts.'

‹Doxological statements', on the other hand, intend primarily to speak of God's essence. They are the praise of God on the basis of his deeds. Doxology is essentially worship. Doxological statements are final statements, beyond which nothing more can be said by man-statements in which the believer presents himself, his word, the logical consistency of his thoughts to God as an offering of praise." ("Wolfhart Pannenberg, Jesus: God and Man, P. 184.)

'Kerygma' என்பது கிரேக்கச்சொல்; உரத்துக்கூறுதல், முரசறைதல், பறை சாற்றல் எனப் பொருள்படும்.

'Doxa' என்பதும் கிரேக்கச் சொல்; புகழ், மகிமை, பெருமை, மேன்மை எனப் பொருள்படும்.

இந்த வேறுபாட்டை நம் தமிழ்மரபுச் சொற்களைக்கொண்டு விளக்கலாம். Doxology என்பது கடவுளின் பரத்துவநிலையை நினைந்து துதிப்பதாகும். Kerygma என்பது கடவுளின் அவதார நிலையில் ஒருவன் பெற்றுள்ள பேறுகளை நினைந்து துதிப்பதாகும். இந்த வேறுபாட்டைக் கவந்தன் துதிப்பாடல்களில் காண்க:

'நின்செய்கை கண்டு நினைந்தனவோ நீள்மறைகள்?
உன்செய்கை அன்னவைதாம் சொன்ன ஒழுக்கினவோ?
என்செய்தேன் முன்னம்! மறஞ்செய்கை எய்தினர்
பின்செல்வது இல்லாப் பெருஞ்செல்வம் நீதந்தாய்'

என்றான் கவந்தன். 'செய்கை' என்ற சொல் நான்கு முறை பயிலப் பட்டதைக் காண்க. இவை இராமனுடைய செய்கைகள்; கவந்தன் செய்கை: மறவர் செய்கைகளாகும். இராமன் செயல்கள் 'விளையாடல்கள்' எனப்பட்டன. இவை அவனது அவதார நிலையில் செயற்பட்டன.

'பெருஞ்செல்வம் நீ தந்தாய்' என்றுன். 'அச்செல்வமாவது யாது?' என்ற வினுவுக்கு விடை சொல்வாஞக அடுத்த செய்யுளில் அவன் சொல்வதென்ன?

1. சாபத்தால் அரக்க உடம்போடு வந்தேறிய மயக்க நீக்கம். 2. குற்றமில்லாத புதிய உடம்பை நல்கியது, 3. துயரின் கரை யேறியது. 4. பேயொத்தவஞகிய எனது பேதைப் பிணக்கை அறுத்தது என்பனவெல்லாம் அவன் தந்த பெருஞ்செல்வமாகும்.

இவற்றிற்கு முன்புள்ள ஒன்பது செய்யுள்கள் இராமனது பரத்துவநிலையைப் பரவிய பாடல்களாகும்.

இனி, கிருஷ்ணப்பிள்ளையின் 'சொல்லொன்ருல்' எனத் தொடங்கும் பகுதிக்கு வருவோம்.

I 'சொல்லொன்ருல் அனைத்துலகும்'

இப்பதிகத்தின் உட்பொருள் இன்னதென்பதைக் கிருஷ்ணப் பிள்ளை இதன் தலைப்பில் எழுதிய 'கொளு'வில் காட்டியுள்ளார்.

'பெற்றிடும் திருஅருள் பெற்றியைப் புனைந்துஈது
எற்றென வியந்துஉள்ளத்து ஏத்து சிறப்பன்று'

என்பதே அக்'கொளு'வாகும்.

கிறிஸ்துவின் திருவருளைப் பெற்றவன், இத்தகு பேறுகளைப் பெறுவதற்கு நான் எம்மாத்திரம்!' என்று வியந்து உள்ளம் மகிழ்ந்து பெருமானைப் புகழ்ந்த பாடல் என்பது பொருள்.

இதை விளக்க, சொல்வது, புகழ்வது, உரைப்பது, செப்புவது என்ற ஒரு பொருட்பன்மொழியாகக் கூறியுள்ளதைக் காண்க.

'புகழ்தல்', 'பரவல்' என்ற சொற்களில் உள்ள நுண்ணிய வேறுபாடுகளை இளம்பூரணர் காட்டியதை மேலே கண்டோம். இறைவனைப் பற்றிப் பேசும்போது, அவரது சொருப நிலை (சுய+ரூபநிலை), பரத்துவ நிலை என்றும்; தடத்த நிலை, அதாவது, தமது செயல்களால் தமது தன்மையை உலகுக்கு வெளிப்படுத்திய நிலை என்றும் கூறுவது தமிழ்ச் சமய இலக்கிய மரபு. இதை Doxological என்றும், Kerygmatic என்றும் மேல் நாட்டார் கூறுவதையும் கண்டோம்.

புகழ்தலுக்கும் பரவலுக்கும் உள்ள வேறுபாட்டை கிருஷ்ணப் பிள்ளை தமது காவியத்தில் காட்டியுள்ளார். எனினும், நாம் எடுத்துக்கொண்ட இப்பதிகத்தில், கிறிஸ்துவின் சொரூப நிலையைக் குறிப்பாக மட்டும் சிற்சில சொற்றொடர்களில் காட்டிவிட்டு, அன்னாரின் அருட்செயல்களைத் தம் பதிகத்தின் திரண்ட பொருளாகக் கொண்டுள்ளார் என்பதைக் காண்க. தன்னிகரில்லாத் தம் பாட்டுடைத் தலைவரது அருட்செயல்களைச் சொல்லி, புகழ்ந்து, உரைத்துச் செப்புவதன் காரணத்தைப் பதிகத்தின் இறுதிப்பாட்டில் பொதிந்து வைத்துள்ளாரவர். அவரை வாழ்த்துவதும் வழிபடுவதும், உடல் பொருள் ஆவி என்ற மூன்றையும் அவர்க்குத் தக்கிணையாகச் (தட்சிணை) சமர்ப்பிப்பதும் வினை நீக்கமும் வீடு பேறும் வேண்டுமென்ற வேண்டுகோளோடு இப்பதிகத்தை முடித்துள்ளார் ஆசிரியர்.

அருளாளன், சொல்பதங் கடந்த தொல்லோன் ஆதலின், அவன் நமது துதிக்கும் எட்டாதவன் என்பதையுணர்ந்து, 'உன் வல்லமையைப் புல்லேனோ சொல்லிப் புகழ்ந்து உரைக்கும் போதத்தேன்?' என்றும், 'உன் திறம் செப்பற்பாலதோ?' என்றும் முதலிரண்டு செய்யுள்களில், அவன் பெருமையையும் தமது சிறுமையையும் பெரியனவாக்கிக் காட்டுகிறார் அவர். (போதம்-அறிவு).

இறைவனுடைய பெருமை அவன் செயல்களால் காணப்படுகின்றது; ஏனையோரால் செயற்கரிய செயல்களால், எளியமுறையில் செய்யப்பட்ட செயல்களால் அவனுடைய வல்லமையும் (Almighty Power) திறமையும் (Difficult or impossible acts performed with with effortless ease) புலனாகின்றது.

உலகைத் தோற்றுவித்த செயல் இறைவனது திருவிளையாடல் என்பது நம் தமிழ்ச் சமய இலக்கிய மரபு. இம்மரபையறிந்த நம்மாசிரியர், படைப்புத் தொழிலை 'விளையாட்டு' என்னாமல் 'வல்லாய்நீ' 'என்றும், 'உன் வல்லமையை' என்று மட்டும் கூறி, போந்தார். இதன் நுட்பத்தைப் பின்வரும் செய்யுள்களில் காண்போம்:

'சொல்லொன்றால் அனைத்துலகும் தோற்றுவித்தாய்"

இறைவன் செயல்களில் முதலாவது, உலகப்படைப்பு என்பதாகும். உலகத்தைப் படைத்தவன் அதனைத் தானாக இயங்க விடாமல், தானே தோன்றியவை எல்லாம் இங்கு ஒருபடித்தாக, அன்று தொடங்கி இன்று மட்டும் நின்று நிலைத்து இயங்கச் செய்ய வல்லவன் நீ என்றார். 'படைத்தவனுடைய

திறமைகள் யாவை?' என்பதற்கு ஐந்து சான்றுகளைப் பழைய ஏற்பாட்டிலிருந்து (விவிலியம்-Bible) அடுத்த செய்யுளில் எடுத்துக் காட்டுகின்றார் ஆசிரியர்.

1. வையகத்தை உருட்டுவாய் (ஒரு நொடியில்),
2. ககனத்தை ஒரு நொடியில் உலகினோடும் சுருட்டுவாய்.
3. சூழ்சுடரை (சூரியனை) வெளிச்சங் கொடாதபடி நிறுத்துவாய்.
4. திருட்டு மனமும் வாயும் உள்ள எகிப்தியரைச் செங் கடலின் நடுவில் அமிழ்த்துவாய்.
5. உன் அடியார்களாகிய இஸ்ரவேலரைக் காப்பாற்றித் தெருட்டுவாய்.

இவையும் இவை போன்ற பலவும் இறைவனின் வல்லமையைப் புலப்படுத்துகின்றன.

செ.—3.

இனி, மூன்றாவது செய்யுளில் இறைவனின் முத்தொழில்களைப் பற்றிச் சொல்லி, தருமத்தின் தனி மூர்த்தியின் பொல்லாங்கு பொறுத்துச் சிலுவை மரணம் அடைந்த திறமையை வியந்து பாடுகிறார் ஆசிரியர்.

"ஆக்கவும் வல்லவன் நீ, ஆக்குவித்து அனவரதம்
காக்கவுமவல்லவன் நீ, கருதுங்கால கணப் பொழுதில்
போக்கவும் வல்லவன் நீ, பொல்லாங்கு பொறுத்துமுடி
சாய்க்கவரும் திறன் என்னே, தருமத்தின் தனிமூர்த்தி!"

1—3 செய்யுள்களும் கடவுளின் வல்லமையைப் பற்றிப் பாடியவையாகும். முதற்செய்யுளில் உலகத்தோற்றம், அதன் இயக்கம் என்பனவற்றைச் சொல்லி, 2-ஆம் செய்யுளில் தாம் படைத்த உலகத்தை எவ்வாறு இயக்கி வருகின்றார் எனக்கூறி, 3-ஆம் செய்யுளில் ஆக்கல், காத்தல், போக்கல் என்ற முத்தொழில்களைப் பற்றிக் கூறுகின்றார் ஆசிரியர்.

இவை, சிருட்டி, திதி, சங்காரம் என்பது தமிழ் மரபு. இத்தகு மூன்று சக்திகளும் இறைவனுக்கு உண்டு என்பர் நம்மாசிரியர். 'உலகத்தைச் சொல் ஒன்றால் ஆக்கி, தாம் ஆக்குவித்த உலகை எல்லாம் இங்கு இன்று மட்டும் நின்று இயக்கியும் காத்தும், நினைத்தால் ஒரு நொடிப்பொழுதில் போக்கவும் வல்லவன் நீ' என்றாரவர்.

இத்தொழில்களைத் திறம்படச் செய்வது ஈசனுக்கு எளிது.

வல்லமை என்பதை Almighty: All powerful என்பர். ஆனால் கிருஷ்ணப்பிள்ளையின் கருத்து இதுமட்டுமன்று. இம்மூன்று செய்யுள்களில் All ruling power, எல்லாவற்றையும் படைத்து, ஆண்டு, காத்து, நடத்தி வருகிற திறன் என்ற பொருள் மிளிர்வதைக் காண்க. இதை panto crator என்று கிரேக்க மொழியில் கூறுவர். Creaticn, Maintenance, Administration and New Creation என்ற பொருள்களும் இவற்றில் அடங்கி உள்ளன.

இந்தப் பதிகத்தைப் பாடிய கிருஷ்ணப்பிள்ளையின் மனத்தில் கம்பர் தமது ராமாயணத்துக்குக் கடவுள் வணக்கமாகப் பாடிய செய்யுளின் கருத்து இருந்தது என்பது இதன் 1—3 செய்யுளும் நமக்குத் தெளிவுப்படுத்துகிறது. அப்பாடலைக் கீழே காண்க:

'உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்,
நிலை பெறுத்தலும், நீக்கலும் நீங்கலா
அலகு இலாவிளை யாட்டுஉடை யார்-அவர்
தலைவர், அன்னவர்க் கேசரண் நாங்களே!"

| கிருஷ்ணப்பிள்ளை | கம்பர் |
|---|---|
| 1. அனைத்துலகும் தோற்றுவித்தாய் | 1, உலகம் யாவையும் தாம் உளவாக்கலும் |
| 2. தோற்றியவை எல்லாம்.... இயல வல்லாய் | 2. நிலை பெறுத்தலும் |
| 3. போக்கவும் வல்லவன் நீ | 3. நீக்கலும் |
| 10. நின்னருளுக்கே தக்கிணையாச் சமர்ப்பித்தேன் | 4. அன்னவர்க்கே சரண் நாங்களே. |

உளவாக்கல், நிலை பெறுத்தல், நீக்கல் என்ற இம் மூன்று செயல்களையும் கம்பர் குறிப்பிட்டவாறு, கிருஷ்ணப்பிள்ளையும், 'ஆக்கவும், காக்கவும், போக்கவும்' என்றார்.

இவ்வாறு கம்பர் மொழி பொருளைப் பொன் போலப் போற்றியவர், இனி அவர் உழுத சால் வழியே உழாமல் வேறு வழியில் திசை திருப்பிவிட்டார் கிருஷ்ணப்பிள்ளை. இனி வரும் செய்யுள்களில் 'நீங்கலா' 'அலகிலா விளையாட்டு உடையார்' என்று கம்பர் இராமனுக்குச் சொன்னது போல, கிருஷ்ணப்பிள்ளை கிறிஸ்து பெருமானுக்குச் சொல்ல இயலவில்லை; முயலவுமில்லை, இதனைப் பின்னர் ஆராய்வோம்.

இறைவனது அளவிலாற்றலை—அதாவது, ஆக்கல், காத்தல், நீக்கல் என்ற ஆற்றல்களைப் புகழ்ந்தனர். இப்போது ஒரு வினவை எழுப்புகின்றார்: 'இத்துணை ஆற்றல் இருந்தும் மக்களின் பொல்லாங்கைப் பொறுத்து முடிசாய்க்க வரும திறன் என்னே?' என்றார். அடுத்த செய்யுளில் (4) இதே வினவைக் காண்கிறோம்.

எப்பொருட்கும் இறை 'நீ' மகேசனும்நீ என்றிருக்கச்
செப்பரிய பெருந்துன்பம் உனைச்சேரும் திறன் என்னே'

என்று வினவி, அடுத்த இர்ண்டடிகளில், அவ்வினவுக்கு விடையுங் கொடுத்துள்ளார் ஆசிரியர்.

இறைவனது பரத்துவ நிலைக்கும் அவதார நிலைக்கும் உள்ள வேறுபாட்டை மேலே கண்டோம். இது வேறுபாடு மட்டுமன்று; இதில் ஒரு முரண்பாடும் உண்டு. இவ்வேறுபாட்டை வேறு வார்த்தைகளாற் சொல்லலாம். பரத்துவநிலையை இறைவன் பாடு அற்றநிலை, அதாவது இன்பநிலை என்றும், அவதார நிலையைப் பாடு உற்ற நிலை, அதாவது துன்பநிலை என்றும் கூறுபடுத்தலாம்.

இந்த முரண்பாட்டைக் கம்பர் இந்திரன் வாய்மொழியாகக் கூறியதைக் காண்போம் :

சீராமனது இருநிலைகளையும் அறிந்த இந்திரன், அவனது 'தொன்று நிலை'யை பரமபதத்துள்ள பழைய நிலையை விட்டு அவதார நிலையில், 'சிலை ஏந்திவந்து சேவடிகள் நோவ எம்மைக் காவாது ஒழியின் பழி பெரிதோ?' என்று வினவுகின்றான்.

இதே பொருள்பட விராதன் கூறியதைக் காண்க :

'நீயாதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள் ;
ஆயாத சமயமும்நின் அடியவே ; அயல்இல்லை ;
தீயான் ஒளித்தியால் ; வெளிநின்றால், தீங்கு உண்டோ ?
வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ ?'

இதன் பொருள் : மேலான பரம்பொருளும் நீயே; உலகங்கள் உன் உடைமையே; உன் இயல்பினை ஆராய்ந்து முடிவு காணாத புற மதங்களும் உனக்கு அடிமைப்பட்டனவேயன்றி வேறில்லை. அப்படியிருக்கவும், நீ தீயவர்களைப் போல ஒளிந்து மறைகிறாய். அவ்வாறு மறையாது (யாவரும் காணும்படி வெளி நின்றால், (உனக்கோ அல்லது உன்னைக் காண்பவர்க்கோ) தீங்கு உண்டாகுமோ ? (இவ்வாறு) அழியாத பெரிய ஆச்சரியத்தை விளைக்கும் விளையாட்டும் அவசியந்தானோ? உன் பரத்துவ நிலையை விட்டு அவதார நிலைக்கு வரவேண்டியது அவசியந்தானோ? அவதார நிலையில் உன் சொரூப நிலையை மறைத்துக்கொண்டு தானே நிற்கிறாய்? உன் உருவெளித்தோற்றத்தை - உள்ளவாறே எம்ம

ஞோர்க்குக் காட்டினுல் உனக்கோ அல்லது எமக்கோ தீங்கு வருமோ? இத்தகைய விளையாட்டும் வேண்டற்பாலதோ?' என்ருர்.

விளையாட்டுக்கு மூன்று அடைமொழிகள் கொடுத்துள்ளதைக் காண்க: வீயாத, பெரு, மாய,

மாய விளையாட்டு என்றது, நாடகத்தில் வேடம் மாறி, காண் போர்க்கு ஆச்சரியத்தை விளைவிப்பதாகும்.

'இறைவன் தனது பரத்துவ, சுயரூப நிலையை ஒளியாமல் காட்டினுல், மக்களுக்குத் தீங்கு உண்டோ?' என வினவினன். 'ஆம், தீங்கு உண்டு' என்று தம் செய்யுளில் காட்டுகின்ருர் கிருஷ்ணப்பிள்ளை.

'வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ?'

இது விராதனது அடுத்த கேள்வி, இதற்கு விடை கொடுப் பான் வேண்டி, ஆறு செய்யுள்களை இயற்றியுள்ளார் (3-8) கிருஷ்ணப்பிள்ளை, 8-ஆம் செய்யுளின் ஈற்றடியில்

'ஆன்ருேய்! இத்தனை துயரும் வேண்டுமோ?'

என்பதில், விராதன் கேள்வியை மாற்றி, 'வேண்டுமோ' என்ற விஞச் சொல்லை மாற்ருமல வைத்துவிட்டார் கிருஷ்ணப்பிள்ளை. 'மாய விளையாட்டு' என்ற விராதன் சொற்ருெடரின் பொருளை மாணிக்கவாசகரைக்கொண்டு விளக்கி வைத்தார். 'அச்சோவே' என்ற சொல்லை 7-ஆம், 8-ஆம் செய்யுள்களின் ஈற்றடிகளில் 'இறுதிச் சொல்லாக வைத்துப் பாடிய திறமையைக் கண்டு இன்புறுக.

விராதன் : 'வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ?'
கிறிஸ்தியான் : 'இத்தனை துயரும் வேண்டுமோ?'

இவ்விருவருடைய விஞக்களிலும் ஓர் ஒற்றுமை உண்டு. இறைவன் தன் பரத்துவ நிலையைத் துறந்து, அவதார நிலை கொண்டுள்ளதனுல் சீராமனும் சீரேசுவும் பட்ட பாடுகளின் இன்றியமையாமையை உணர்ந்து உள்ளனர் என்பதைக் காண்க.

இந்திரன் இராமனைத் தொழுது துதித்த போழ்து:
''இருநிலத்த வோநின் இணையடித் தாமரைதாம்.
(சரபங்கன் படலம்-செ. 27)
'சிலைஏந்தி வந்து, சேவடி நோவ எம்மைக்
காவாது ஒழியின், பழிபெரிதோ?'
செ. 28

'தாமரைக் கைநோவ, ஆழிகடைந்து
அமுதம் எங்களுக்கே ஈந்தாய்?'

என்று வினவுதல் போலத் துதித்தான்.

இவற்றையும் இவை போன்ற கம்பராமாயணக கருத்துகளையும் தம்மகத்திற்கொண்டு, கிருஷ்ணப்பிள்ளை இப்பாடல்களைப் பாடியுள்ளார் என்பதனை நாமும் மனத்திலிருத்தி, இவர் பாடல்களின் பொருளை ஓரளவு காண்போம்.

செ. 4. "செப்பரிய பெருந்துன்பம் உனைச்சேரும் திறன் என்னே!"

உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களிலும் நிறைந்துள்ளவன் நீ; மகா ஈசனும் நீ; பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்ற ஒப்பரிய திரியேகத்துவத்தில் ஒருவன் நீ. உன் மேன்மை அவ்வாறு இருக்க, சொல்லுதற்கரிய மாபெருந் துன்பம் உன்னை வந்து சேரக் காரணமென்ன? உன் உள்ளன்பின் அனல் அன்றோ இவ்வாறு விளைத்தது?

செ. 5. இவ்வாறு நீ பாடுபடத் துணிந்தது உன் தண்ணளியின் தகைமையால்தான். நீ அன்பு காரணத்தால் எங்கள் தந்தையாயினை. உன் பரம தந்தையின் நீதியால் மனுமக்கள் நாசமுறலாகாது என்று, எங்களுக்காகப் பிணை நின்றாய். நீ பட இருக்கின்ற பாடுகளத்தனையும் ஆதியாகிய உன் தந்தை அறிந்தும் அவனுள்ளம் சம்பியாமல், உன்னை இங்ஙன் விட்டு விட்டானே! இது பெரிது!

செ. 6. "ஈதென்னை செங்கோன் முறைமை!"

குற்றங்கடிதல் வேந்தர்க்கு வடுவன்று, அது வேந்தன் தொழில், பல்லாயிரக் குற்றங்கள் புரிந்த நரம்புலையரை நீதியான் கடிதல் முறையாகும். இவ்வாறு மனு நாசம் நேரவிருக்கின்றது என்று இயேசு பெருமான், மக்களுக்காகப் பிணை நின்றார் என்றது மேற்செய்யுளில் (5).

இச்செய்யுளில், தந்தை கடவுளுக்கும் குற்றவாளிகளான நரப்புலையருக்கும் இடையில் நடுநின்று, மக்கள்பொருட்டுத் தாழ்வாராம் திருமகன்; தமது நீதிமுறை தப்பாமல், தம் ஒரு மைந்தனைப் பட்டயத்தால் வெட்டுவாராம்; தந்தை கடவுளின் ஒரு தனிப் பரமசுதன் மடிந்து வீழ்வாராம்; இதன் பயனாக, நரப்புலையர் வாழ்வாராம்! வேந்தனது செங்கோல் முறைமை இதுவோ? இச்செய்யுளில், தந்தைக்கும் மகனுக்கும் உள்ள தொடர்பைக் காட்டினார். திரித்துவத்தில் உள்ள இவ்விருவரையும் மனுமக்க

ளோடும் இணைத்து, தாதையின் நீதியைத் தனயனின் தண்ணளி யோடு இணைத்துப் பேசிய திறன் என்னே!

செ. 7. 'ஆ! நாடற் கெளிதோ நின் அன்பு நிலை, அச்சோவே!'

இச்செய்யுள் 'ஒப்பரிய திரியேகத்து ஒருவனை'ப் பற்றியது. அவருடைய அன்பு நிலையை நாடித் தேடிக் கண்டு பிடிப்பது எளிதன்று.

இதன் முதலடி, கிறிஸ்து பெருமானின் பரத்துவ நிலையைக் கூறி அதைத் துறந்தமையைக் கூறிற்று. இரண்டாவது அடி, அவர் கன்னி வயிற்றில் கருவுற்றதைக் காட்டிற்று. மூன்ருவது அடி, அவர் ஊன் உடல் எடுத்து இங்குத் தம் உயிரைப் பலியாக நேர்ந்து, மக்களுக்குச் செய்த உதவியை—(கணிப்பறு நின் பேருதவி செ. 10) நுதலிற்று.

(Christ's pre-existent glory, his Virgin Birth, his Incarnation and his sacrifice on the Cross )

இத்துணை நிலைகளுக்கும் நிலைக்களமாயுள்ளது, அவரது அன்புநிலை. இந்நிலை நாம் நாடுதற்கு எளிதோ? இதுவோர் அற்புதமே! அச்சோவே! என்ருர், 4-ஆம் அடியில்.

செய்யுள் 8:

"மூன்ருய கவடுஉடைய முதுமூலத் தனிப்பொருளே!"
தேன்தோயும் மலர்ப் பொழில் வாய்த் திருவுள்ளம் துயர்மேவி
ஊன்தோயும் திருமேனி உதிர்வியர்[வை] உகுத்ததும் போய்
ஆன்ருேய்! இத் தனை துயரும் வேண்டுமோ, அச்சோவே!"

இச்செய்யுளோடு கம்பர் கவிகளை ஒப்பிட்டுப் பார்ப்போம்;

கவந்தன் துதி:

ஈன்றவனே எப்பொருளும்? எல்லைதீர் நல்லறத்தின்
சான்றவனே? தேவர் தவத்தின் தனிப்பயனே?
மூன்று கவடாய் முளைத்துஎழுந்த மூலமோ?
தோன்றி அருவினையேன் சாபத் துயர்துடைத்தாய்!

[கவந்தன் படலம், செ. 40.]

1. கிருஷ்ணப்பிள்ளையின் பாடல்:

மூன்ருய கவடுஉடைய முதுமூலத் தனிப்பொருளே!

கவந்தன் பாடல்:

'மூன்று கவடாய் முளைத்துஎழுந்த மூலமோ?

2. தேன்தோயும் மலர்ப்பொழில்வாய்த் திருவுள்ளம் துயர்மேவி

கம்பர் பாடல்: அயோ. கா. திருவடி சூட்டும் படலம், செ 65

தேன் அடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக்
கான் அடைந்தேன் என்னத் தரியாது, காவல, நீ
வான் அடைந்தாய்; இன்னம் இருந்தேன்நான், வாழ்வு
உகந்தே!

3. ஊன்தோயும் திருமேனி உதிர்வியர்வை உகுத்ததும்போய்.
கம்பர் இராமாயணத்தில் இவ்வடிக்கு ஒப்பான செய்யுள்
காண்பதற்கில்லை.

4. இத்தனை துயரும் வேண்டுமோ?

விராதன் :

வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ?

5. அச்சோவே! திருவாசகம், அச்சோப்பதிகம்

கம்பர் பாடல்களிலும் கிருஷ்ணப்பிள்ளை பாடல்களிலும் உள்ள செய்யுள்களின் வைப்பு முறையைக் காண்போம்.

'சொல்லொன்றால்' எனத் தொடங்கும் பதிகத்தில், உலகத் தோற்றத்தோடு பதிகத்தைத் தொடங்கிய கிருஷ்ணப்பிள்ளை படிப் படியாக இறைவனது அருட்செயல்களையும், தந்தை கடவுளுக்கும் குமரக் கடவுளுக்குமுள்ள தொடர்பைக் காட்டி, எட்டாவது செய்யுளில் திரித்துவப் பொருளைப்பற்றிப் பேசலுற்றார். நாலாவது செய்யுளில் திரியேகத் தொருவா என்று குமரனை விளித்தவர், எட்டாவது செய்யுளில் திரியேகக் கடவுளின் மும்மையையும் ஒருமையையும் ஒருசேரக் காட்டியுள்ளார். எனினும், திரித்து வத்தில் மூன்றாவது ஆளாய் உள்ள பரிசுத்த ஆவியைப் பற்றி இப்பதிகத்தில் ஏதேனும் கூறவில்லை. அவரைப் பற்றித் தமது காவியத்தில் பிறவிடங்களில் பெரிதும் பேசியுள்ளார். போற்றித் திருவிருத்தங்களைக் காண்க.

செ. 9.

பதிகத்தின் இறுதிப் பாடல்கள் இரண்டில் (9, 10) தாம் பாவி என்று தம்மைத் தாழ்த்தி, கடவுளிடம் அடைக்கலம் வேண்டி வந்தடைந்தேன்!' குமரேசா; உன் தந்தையிடம் எனக்காகப் பரிந்துரை செய்வாயாக என்று மன்றாடுகின்றார்.

இந்தச் செய்யுளில் 'பாவி' என்ற சொல் எட்டு முறை வரு வதைக் காண்க.

இத்தகுபாவி யூான் வந்தடைந்தேன், குமரேச, பரிந்தருளே! என்று நெஞ்சு நெக்குருகிப் புலம்புகின்றார். அவலச்சுவை ததும்பி

வழிகிறது. செ. 10. இந்த எண் வகையில் ஒன்றைக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. Sir David Devadoss, 1957-இல் வெளியிட்ட இரக்ஷணிய மனோகரம் மூன்றும் பதிப்பில் விடுபட்ட ஒரு செய்யுளை இரக்ஷணிய யாத்திரிகம். 1894–இல் சென்னையில் வெளியான பதிப்பில் காணப்படுகிறது. அதைப் பின்னர்க் காட்டுவோம்:

1951 இல் வெளி வந்த இ. மனோகரத்தில் இப்பதிகத்தின் இறுதிப் பாடலாக வந்துள்ளதை இவண் காட்டுகிறோம்:

செ. 10

கைம்மாறும் உளகொல்லோ, கணிப்பறும்நின் பேருதவிக்கு
எம்ஆவி உடல்பொருள்மற்று இவையொருமூன் றையும் இன்னே
தம்மான்நின் அருளுக்கே தக்கணையாச் சமர்ப்பித்தேன்
வெம்மாய வினைதொலைத்து உன் வீட்டு உலகம் கூட்டுகவே.

'அளவிட முடியாத உன் பேருதவிகளுக்கு நான் ஈடு செய்யக் கூடிய கைம்மாறும் உண்டோ? (ஓகாரம் எதிர்மறைப் பொருளில், இல்லை என்பதாயிற்று). எனினும், என் உடல் பொருள் ஆவி யாகிய இம்மூன்றையும் இப்பொழுதே, எம் பெருமானே! உன் அருளுக்கே தட்சணையாகச் சமர்ப்பணம் செய்து வைத்தேன். எனது வெப்பம் மிகுந்த மாய வினையைத் தொலைத்து, உன் வீட்டுலகத்தில் என்னைக் கூட்டியருள்' என்ற விண்ணப்பத்தோடு இப்பதிகத்தை முடித்து வைத்துள்ளார் கிருஷ்ணப்பிள்ளை.

இந்த இறுதிப்பாடல், கம்பராமாயணக் கடவுள் வாழ்த்துப் பாவின் இறுதி அடியை நினைவுக்குக் கொண்டு வருகிறது.

"அவர் தலைவர் - அன்னவர்க்கே சரண் நாங்களே". இறைவனது பரத்துவநிலையையும் அவதார நிலையில் அவன் செய்த அருட்செயல்களும் உலக மக்களுடைய இகபர நன்மை கருதியே என்பதை உள்ளூர உணர்ந்து அவனைப் புகழ்ந்து, பரவி துதித்துப் பாடுகிறான். உய்ந்தனன் அளியேன் என்று உருகி உள்ளத்தில் உவந்து ஏத்தி (செ. 7) அவன் சரண் 'நிழல் புகுந்து புகல் உற்றனன்" (செ. 8) என்று தொடங்கி, 'சரணாகதியடைந்தனன்' என்று சொல்லி–ஆசிரியர் இப்பகுதிக்கு முத்தாய்ப்பு வைத்துள்ளார் எனக் காண்க.

இப்பதிகத்தின் இறுதிப்பாடல்கள் மூன்று,

1951-இல் வெளியிடப்பட்ட 'இரக்ஷணிய மனோகரத்தில் சொல்லொன்றால்' எனத் தொடங்கும் பகுதியில் பத்துப்பாட்டுகளே

உள்ளன. 10-ஆம் பாடல் 'கைம்மாறும் உளகொல்லோ' என்று தொடங்குகிறது.

1894-இல் வெளிவந்த இரக்ஷணிய யாத்திரிகத்தின் முதலாம் பதிப்பில், இப்பகுதி 12 பாக்களைக் கொண்டிருக்கிறது. 'கைம்மாறு என்ற செய்யுளுக்கு முன் ஒன்றும், பின் ஒன்றுமாகப் 12 செய்யுள் கள் உள்ளன. இந்தப் பன்னிரண்டு பாக்களுக்கு உள்ள சந்தம் ஒன்று. இவற்றிற்கு முன்னும் பின்னும் வந்துள்ள சந்தம் வேறு.

இ. மனோகரத்தில் பத்துப்பாக்களை மட்டும் இத்தலைப்பில் சேர்த்து வைத்தவர் கிருஷ்ணபிள்ளையாகவே இருத்தல் கூடும். இப்பகுதியின் தலைப்பில் உள்ள 'கொளு'வை அவரே எழுதி யிருத்தல் வேண்டும்.

எவ்வாறாயினும், நாம் அவர் இப்பகுதியில் எழுதி வைத்த எல்லாப் பாடல்களையும் கண்டு அவற்றின் பொருளை அறிதல் வேண்டும். எனவே, விடுபட்ட அவ்விரு பாடல்களையும் அவற்றோடு 'கைம்மாறு முளகொல்லோ!" என்ற பாடலையும் சேர்த்துக் கீழே காட்டுகின்றோம். இவை மூன்றும் இப்பதிகத்தின் இறுதிப்பகுதி யாகக் கிருஷ்ணப்பிள்ளை எழுதி வைத்தார்.

செ.10. 'உசுவாசம் இனியில்லைஎன்று உயிர்ஒடுங்கி உடல்துருத்தி
நிசுவாசம் அகல்காறும் நின் அன்பை நெகிழவிடா
விசுவாசம் எனக்குஅருளி வியன்உலக மயல்அளைந்த
பசுவாசனையை அகற்றிப் பதிஉலகம் பரிந்து அருளே!'

செ.11. கைம்மாறும் உளகொல்லோ கணிப்பு அருநின் பேருதவிக்கு
எம்மாவி உடல்பொருள், மற்று இவைஒருமூன் றையும் இன்னே
தம்மான்நின் அருளுக்கே தக்கணையாச் சமர்ப்பித்தேன்;
வெம்மாய வினைதொலைத்துஉன் வீட்டுஉலகம் கூட்டுகவே

செ.12. ஆவலொடும் அருள்வேத அறநெறியைக் கடைப்பிடித்து,
ஜீவலயம் வரும் எனினும் திருவடிப்பற்று ஒழியாமே,
பூவலயத்து இடைஉனக்காய்ப் பொன்றும்ஒரு சான்றாகக்
காவலநீ, அடியேனைக் கடைக்கணிக்கக் கடவாயோ?

இப்பதிகத்தின் வைப்பு முறையை மீண்டும் காண்போம்:

'கைம்மாறு என்' என்ற தலைப்பில், மாணிக்கவாசகர் தம் திருவாசகத்தில் கூறிய முறைப்படி கிருஷ்ணப்பிள்ளை தம் பதிகத் தைப் பாடியுள்ளதைக் கீழே வரும் வெண்பா நமக்கு இனிது காட்டுகிறது, திருவெண்பா—செ-8.

'யாவர்க்கும் மேலாம் அளவுஇலாச் சீர்உடையான்,
யாவர்க்கும் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றுஅறியா இன்பத்துள் வைத்தாய்க்கு என்எம்பெருமான்
மற்றுஅறியேன் செய்யும் வகை'.

அளவிலாச் சீருடையானுடைய ஏற்ற பெற்றியைக் கிருஷ்ணப்பிள்ளை இப்பதிகத்தின் முதல் எட்டுச் செய்யுள்களில் புகழ்ந்து பாடிய பின்னர், ஒன்பதாம் செய்யுளில், 'யாவர்க்கும் கீழாம் அடியேனை" அதாவது, தன்னைப் 'பாவி' என்று எட்டுமுறை கசிந்து உருகிப் பாடிய பின்னர், யாவரும் பெற்றறியா இவ்வின் பத்திற்குச் செய்யக்கூடிய கைம்மாறு என்ன என்பதைப் பதிகத் தின் இறுதிச் செய்யுள் மூன்றிலும் பாடிவைத்தார் என்க.

தம்மைக் காத்து இரட்சித்த இரட்சகனுடைய சீர்களை, கீர்த்தி களை யாவர்க்கும் மேலாக உயர்த்துவதும், தம்மைத் தம் பாவ மிகுதியால் யாவர்க்கும் கீழாகத் தாழ்த்துவதும் பத்தர்களின் புகழுரையின் முறையாகும்.

இதே கருத்தைப் பத்தர் கிருஷ்ணப்பிள்ளை பலவிடங்களில் காட்டியுள்ளார்.

எல்லா ரிலுங்கொடிய பொல்லாத பாவிஎன்று
    எள்ளாது திருவு ளத்தே
எனையும்ஒரு பொருளாய் மதித்தடிமை ஆக்கினஉன்
    ஏரா ள மான அன்பைப்
பல்லாயி ரங்கோடி நாக்கொண்டு புகழினும்
    பகருதற்கு எளிதாகுமோ?
பக்தஜன பரிபால நித்யம்அவர் அனுகூல
    பரமார்த்த பரம நிதியே!

என்று பல்லாண்டு பாடியுள்ளாரவர்.

'பரமார்த்த பரம நிதியே!' என்றது சொரூப நிலை;
'பக்தஜன பரிபால நித்யம் அவர் அனுகூல'
என்றது, அவர்தம் தடத்த நிலை.
"கணிப்பருநின்பேருதவி" என்ற கருத்தில் 'உன்
ஏராளமான அன்பை' என்று மேலே பாடினார்.

இவை தமிழ் நாட்டுப் பத்தர்கள் மட்டும் கண்ட முறையன்று; விவிலியத்தில் (Bible) தூய பவுலார், ரோமருக்கு எழுதிய கடிதத் தில் இம்முறையைக் காணலாகும்; ரோமர் 5:20 இல்.

"பாவம் பெருகப்பெருக, அதைவிடப் பன்மடங்காய் உன் அருளும் பெருகிற்று" என்றார்.

"But where sin was thus multiplied, grace immeasurably exceeded it" [NEB. The New English Bible]

பவுல், ரோமருக்கு எழுதிய கடிதத்தின் சாரம் இன்னது என்பதை மார்ட்டின் லூத்தர் தமதுவிரிவுரையின் தொடக்கத்தில் எழுதியதைக் காண்க:

"Magnify the sin and magnify the grace much more." "The sum of this epistle is to pull down, and pluck up and to destroy all the wisdom and righteousness of the flesh and to implant establish and magnify sin however much it may not be or its existence be unrecognised." (W. A. 56. 157,2

செ. 10. உசுவாசம்- உ + சுவாசம் = உள்ளே இழுக்கின்ற மூச்சுக் காற்று. Inhaling. நிசுவாசம் - நி + சுவாசம் = வெளியே விடுகின்ற காற்று. Exhaling = விசுவாசம் = கடவுள் பேரில் வைக்கின்ற உயிர்க்காற்று Faith.

இதன் பொருள். வெளி விடும் மூச்சு ஒடுங்கி, உடற்பையின் உள் மூச்சு அகன்று போகுமட்டும் உன் அன்பை நான் நெகிழ விடாத விசுவாசத்தை எனக்கு அருளி, இவ்வகன்ற, உலக மயக்க மாகிய பசு வாசனையை என்னிலிருந்து நீக்கி, உனது பதி உலகத் தில் என்னைச் சேர்த்து அருள்க' என்ருர்,

9-ஆம் செய்யுளின் இறுதிச் சொற்கள்: 'குமரேச பரிந்தருளே!'
10- ,, ,, ,, ,, 'பதியுலகம் பரிந்தருளே!
11- ,, ,, ,, ,, 'வீட்டுலகம் கூட்டுகவே!'

பத்தாம் செய்யுளின் முதலிரண்டடிகள்: 'என் மூச்சொடுங் கும் அந்தக்கடை இக்கட்டிலும் நீர் எனக்காக இறந்த கருணையைக் காண்பியும்' என்ற பப்ரீசியுஸ் ஞானப்பாட்டு அடிகள் நினைவுக்கு வருகின்றன. (52:10

'பசு வாசனை' என்பது- பெருங்காயம் வைத்திருந்த பாண்டம் எத்துணைத் தேய்த்துக் கழுவினுலும் பெருங்காயத்தின் வாசனை போகாதது போலவும், வேப்பம்பழத்தைத் தின்ற புழு மீண்டும் வேப்பம்பழத்தைத் தின்ன விரும்புவது போலவும், இறைவன் தடுத்தாட் கொண்ட பின்னரும் 'வியன் உலக மயலில் அளைந்த பசு வாசனை வீசிக்கொண்டிருக்கும். அதனை அகற்றி, எனக்கு உன் பதி உலகம் பரிந்தருளே:

செ. 12. நீ அடியேனைக் கடைக் கணிக்கக் கடவாயோ?

பத்தனது இறுதி வேண்டுகோள்கள் மூன்று :

என் காவலனே!' என்று தமது இரட்சகரை விளித்து, அவரிடம் மூன்று வேண்டுகோள்களை விடுக்கின்றார்.

1 அருள் வேதத்தில்-விவிலியத்தில்-உள்ள அறநெறியை நான் ஆவலோடு கடைப்பிடித்து ஒழுக வேண்டும்.

2 என் உயிருக்கு ஆபத்து வருவதாயிருந்தாலும், உன் திருவடியை நான் பற்றிய பற்று ஒழிதலாகாது. 'பரசேன் பற்றுகிலேன், என்னைப் பற்றிய பற்று விடாய்' என் பிறிதோரிடத்தில் வருவதைக் காண்க.

3 (நீ எனக்காகப் பட்ட பாடுகளை நினைத்து) இந்நிலவுலகத்தில் நான் உனக்காக உயிரைக் கொடுக்கும் சாட்சியாக இருக்குமாறு, காவலனே. காத்தல் தொழிலில் வல்லவனே, என்னைக் கடைக்கணிக்கக் கடவாய்' என்றார்.

பொன்றும் ஒரு சான்று = இரத்த சாட்சி. ஆதித்திருச்சபையில் கிறிஸ்துவுக்காக உதிரஞ்சிந்தி மரித்தவர் பலப்பலர். நம்மாசிரியர் இரத்த சாட்சியாக மரிக்கவில்லை; இரட்சணிய யாத்திரிகம் போன்ற நூல்களை எழுதினமையால் எழுத்துச் சாட்சியாக, பொன்றாத சாட்சியாக வாழ்ந்து வந்தார் என்க.

"இத்தகு சிலுவையை எய்தும் முன்னர், யான்
சித்தசஞ் சலச் சுமை சுமந்து தேம்பிய
அத்தனை துயரமும் அகன்ற தே! அஃது
எத்தனை பாக்கியம்' என்று ஏத்தினான்" (செ.30)

எனப் புகழ்ந்து பாடினார்.

சுமை நீங்கு படலத்தின் இறுதிச் செய்யுளில், சிலுவையில் தொங்கிய இயேசு பெருமானுக்கு அந்தக் காட்சியைக் கண்டவனது உள்ளத்தை அந்த ஆண்தகையின் திருவருள் எவ்வாறு ஈர்த்தது என்பதற்கும் கவிஞர் பெருமான் பயன்படுத்திய உவமையைக் கண்டுகளிப்போம்.

'காண்தகும் இரும்பினைக் கவரும் காந்தம் ஒத்து
ஆண்தகை திருஅருள் அகத்தை ஈர்த்திட'

என்ற அடிகளில் இரும்பினை இழுக்கும் காந்தத்தை ஒத்து இருந்தது, சிலுவையில் தொங்கிய 'ஆண்தகையின் திருவருள் என்று நயம்படப் பாடியுள்ளார் கிருஷ்ணப்பிள்ளை.

கண்டவன் மனம் இரும்பையும், காட்டினவர் ஆற்றல் காந்தத்தையும் ஒத்திருந்தது என்றார் புலவர் பெருமான்.

The sight of the Saviour on the Cross had a magnetic power upon the heart of the See-er.

இந்த உவமையைக் கிருஷ்ணப்பிள்ளை, ஜான்பனியனிட மிருந்து கொண்டாரில்லை. தமிழரது பத்திப்பாடல்களிலும், சித்தாந் தத்திலும் இவ்வுவமை பலவிடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவற்றில் ஒன்றை இவண் காட்டுதும்:

இரும்புதரு மனத்தேனை ஈர்த்து ஈர்த்தென் என்புருக்கிக்
கரும்புதரு சுவைஎனக்குக் காட்டினைஉன் கழல்இணைகள்!'

'காந்தம் இரும்பினைக் கவர்கிறது போல, உன் இணையடி கள் என்னைக் கவர்கின்றன. என் மனம் இரும்பு போன்றது. எனவே, என்னை ஈர்த்து ஈர்த்து, கரும்பொத்த சுவை தரும் காட்சி யை எனக்குக் காட்டினை!' என்பது பொருள். இழுத்தலைக் காட்டிலும் ஈர்த்தல் வலிமை மிக்கது.

இதே பொருளில், சந்நிதி முறை. செ. 3. கிருஷ்ணப்பிள்ளை பாடியதைக் காண்க:

"மாகாத கப்பேயின் அடிமையாய்ப் போனவெனை
வலியப் பிடித்திழுத்துன்
மகிமைக்கு உயர்த்தி.........."

சிவ ஞான சித்தியார் சுபக்கம், பதினொராம் சூத்திரத்திலும் இந்த உவமை அமைவதைக் காண்க:

"இரும்பைக் காந்தம் வலித்தாற் போல்
இயைந்து அங்கு உயிரை
எரிஇரும்பைச் செய்வதுபோல்
இவனைத்தா னுக்கி'.

## கம்பருக்கும் கிருஷ்ணப்பிள்ளைக்கும் உள்ள வேறுபாடுகள் :

இதுாறும் இவ்விருவருக்குமுள்ள ஒற்றுமையை ஒரளவு கண் டோம். இனி, இவர்கள் பாடல்களில் உள்ள வேறுபாடுகளைக் காண்போம்:

கிருஷ்ணப் பிள்ளையின் பாடல், 2

'உருட்டுவாய் வையகத்தை; ஒருநொடியில் உலகினெடும்
சுருட்டுவாய் ககனத்தை; சூழ்சுடரை நிறுத்துவாய்;
திருட்டுவாய் மனத்திரையாழிக்கு இடையமிழ்த்தித்
தெருட்டுவாய் அடியரை, உன் திறம்செப்பற் பாலதோ?

இறைவனது வல்ல செயல்களில் ஐந்தைக் குறிப்பிட்டாரவர். வையகத்தை, ககனத்தை, சூழ்சுடரை, அடியரை, அல்லாதவரை என்ற வகையில் திருவருள் திறந்தைச் செப்பினர். They are Acts of God in the history of Salvation.

வானுதி அண்டபகி ரண்டப் பரப்பெலாம்
 வாக்கொன்றி னல்அமைத்தாய்;
மாபூத பௌதிக சிருஷ்டிகள் இயற்கைவிதி
 வழுவாது நிற்கவைத்தாய்;
மேனுள் அருக்கனையும் நில்லென நிறுத்தினய்
 வேலைவழி விடவிதித்தாய்;
வெந்நாக வாயினின்றிம் மண்ணுலகை விண்ணுலக
 வீட்டுக்கு இழுத்தருளினய்.'

என இரட். மனேகரம், சந்நிதி முறை செ. 6 ல் வருவதை ஒப்பிட்டுக் காண்க.

1. வாக் கொன்றினல்- சொல்லொன்றால்; 2 வேலையை-செங்கடலை

இனி,விராதன் வாய் மொழிக்கு வருவோம்:

கடுத்தகராம் கதுவநிமிர் கைஎடுத்து மெய்கலங்கி
உடுத்ததிசை அனைத்தினும்சென்று ஒலிகொள்ள உறுதுயரால்
அடுத்தபெருந் தனிமூலத்து அரும்பரமே! பரமே! என்று
எடுத்து ஒருவா ரணம்அழைப்ப, நீயோ அன்று' 'ஏன்..?
என்றாய்.

(1, கராம்: முதலை: 2. வாரணம்: யானை.)

இதனுள் கசேந்திரன் என்னும் யானையின் இடர் நீக்கிய செய்தி பேசப்படுகிறது. விராதன், யானை போலச் செருக்குமிக்கு வன்பு செய்த தனக்கும் வலிய வந்து சாபநீக்கம் தந்து உய்வித்த செயல் கண்டு வியந்து பண்டு அன்பு செய்த கசேந்திரன் என்னும் யானை அழைக்க வந்து அதன் இடர் தீர்த்தவனும் இராமனே என்றுதுணிந்து, வாரணம் அழைப்ப நீயோ அன்று 'ஏன் என்றாய்' என்று கூறுவானாயினன்.

இந்தப் புராணக்கதை பொதிந்துள்ள இவ்விரண்டாவது செய்யுள் கிருஷ்ணப்பிள்ளை அறிந்ததொன்று. இது வெறும் பழைய புராணக்கதை. இதற்கு மாருக. இரட்சிப்பின் வரலாறுகளைக் (Historical Acts of God) கூறும் பழைய ஏற்பாட்டிலும் உள்ள சில வற்றை நான் காட்டுகிறேன் என்பார் போலக் கிருஷ்ணப் பிள்ளை, தம் பாடலின் இரண்டாவது செய்யுளை அமைத்தார் போலும்.

நூறு ஆண்டுகளுக்கு முன்னரே History Vs. Myth என்ற சர்ச்சையைத் தம் மனத்தில் உட்கொண்டு தன் கருத்தை வெளி விட்டுள்ளார் என்பதை உன்னுக.

எனினும், 'ஆதிமூலமே' என்று ஓலமிட்ட கசேந்திரனுடைய அபயக்குரலைப் பரம்பொருளாகிய கடவுள்கேட்டு அதன் துயரைத் துடைத்தார் என்பதை மனத்தில் வைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர் கம்பர்.

அடுத்தபெருந் தனிமூலத்து அரும்பரமே! பரமே;' என்று
எடுத்தொருவாரணம் அழைப்ப நீயோ அன்று 'ஏன்' என்றாய்'

என்பதில் உள்ள பொருளைப் பயன்படுத்தியுள்ளார்.

கம்பர் காட்டியுள்ளது வெறும்புராணக்கதை என்றும், கிருஷ்ணப்பிள்ளை, செங்கடலை இஸ்ரவேலர் கடந்து எகிப்தியர் அழிந்த வரலாறு (History) என்றும் சொல்லி வேற்றுமை காண்பது நன்றன்று.

நிலைப்படா நீரின் கண், இடனறியாது யானை வைத்த காலை முதலை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டது. பிடிபட்ட காலை எடுத்துக்கொள்ள ஆற்றல் இல்லாத யானை, 'ஆதிமூலமே' என்று ஓலமிட்டது. உறுதுயரால் யானை ஒலித்த ஓலம் உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலித்தது. அவ்வொலியைக் கேட்ட திருமால், 'ஏன்' துயர் உறுகின்றாய் என்று கேட்டு யானையின் துயர் நீக்கினான் என்பது பொருள்.

அது போன்றே, எகிப்தியரின் கொடுமையைத் தாங்க மாட்டாது, தங்கள் கடவுளை நோக்கி ஓலமிட்டனர் இஸ்ரவேலர். அவ்வொலிக்குரலைக் கேட்ட எகோவா, மோசேயின் மூலம்:

திருட்டுவாய் மனத்தினரைத் (எகிப்தியரை) திரை ஆழியில் செங்கடலில் அமிழ்த்தி, தம் மடியாராகிய இஸ்ரவேலரைக் காப்பாற்றிய திறத்தைப் புகழ்ந்துரைத்தார் கிருஷ்ணப்பிள்ளை. துஷ்டர் நிக்ரகமும சிஷ்டர் பரிபாலனமும் இங்கே நிகழ்ந்துள்ளன.

"இறைவன் வழிபாட்டு முறையில் அவன் புகழ் பாடுவது என்பது ஒரு வாய்பாடாகும்."

இறைவனுக்குப் 'புகழ்ச்சி எனும் பலியைச் செலுத்து; துன்ப நாளில் என்னைக் கூப்பிடு; நான் உன்னை விடுவிப்பேன்; நீ என்னை மேன்மைப் படுத்துவாய்" என்ற வாய்ப்பாட்டைத் திருப்புகழ் என்று சொல்லக்கூடிய "சங்கீதங்கள், 50:14, 15 இல் காணலாகும்.

இஸ்ரவேலர் செங்கடலைக் (Red Sea) கடக்கச் செய்த கடவுளின் அரிய செயலை, அற்புதச் செயலைக் குறித்து C. Westermann என்ற ஜெர்மன் பேராசிரியர் கூறியதை நாம் கூர்ந்து கவனிப்பது நல்லது.

Calling on God in times of stress and strain and the Confession of praise.

"The core of this creed in Deuternomy and Psalm 80 is a confession of praise ; the Pentateuch, the 5 books of Moses, at whose center the account of the deliverance out of Egypt stands, is a broad development of this confession of Praise. If the Pentateuch contains the real "saving history" of the people of Israel, it is precisely because of the structure of the confession of praise which holds the individual facts together, **from the cry of the oppressed to the praise of the delivered".** (italics ours) C Westermann, in the Gospel and the destiny of history, ed, Vilmos Voijta, p. 28).

"The deliverance is experienced as a wonder ; the wonder of the deliverance awakens the praise which awakens it. The event began with the cry out of depths. In the praise which answers the deliverance reaches its goal. It is this thus from beginning to end a dialogical event. God's saving deed is not complete in it self, it first becomes complete in the praise which answers it......... In the praise of the delivered, the wonder of the deliverance is given expression". ibid p. 27.

" Such a praise answering the saving action of God is found in Exodus 18 : 10. "Blessed be the Lord who has delivered you out of the hands of the Egyptians", or 2 Sam. 5.20 etc." ibid.

மேற்கூறிய வகையில் விராதனும் கவந்தனும், மறைவாணன் என்ற கிறிஸ்தியானும் பாடிய பாடல்களைத் திருப்புகழ் அல்லது தேவ பாணி அல்லது துதிப்பாடல்கள் என்று சொல்வது பொருந்தும்,

மகாவித்துவான் கிருஷ்ணப்பிள்ளை, யாவரும் பெற்றறியா இன்பத்துள் தன்னை வைத்தவனை வாயாரப் பாடிப் புகழ வந்தவர் தெய்வக் கவியாதலாலும், கலைவல்லுநராதலாலும் தாம் அனுபவித்த இன்பத்தைக் கலைக்கண் கொண்டு நோக்கிக் கவி நாக் கொண்டுரைத்தார் இப்பதிகத்தில்,

"சொல்லொன்ருல்" எனத் தொடங்கியவர், உலகத்தோற்றத்துக்கு முன்னிருந்தவர் உலகம் யாவையும் ஏனைய நிமித்த, துணைக் காரணங்களால் அல்லாது தம் சொல்லொன்ருல், இச்சாமாத்திரத்தால், சித்த சங்கல்பத்தால், நினைத்தது முடிக்கின்ற சர்வ சாமர்த்தியத்தால்,

'வானுதி அண்டபகிரண்டப் பரப்பெலாம்
வாக்கொன்றி னுல்அமைத்தாய்'

என்று தொடங்கினுர், 'பதியுலகம் பரிந்தருளே' என்றும் 'வீட்டுலகங் கூட்டுகவே" என்று இனிவரவிருக்கின்ற உலகத்தை நினைந்து நினைந்து, தம் வேண்டுகோள்களையும் விடுத்து, இத்திருப்புகழ் பாடினுர்.

இதில் ஒரு நயத்தைக் காண்போம் : அகரத்தில் தொடங்கியவர் (Alpha, A) 'ன' கரத்தில் (Omega. Z) முடித்துள்ளார் தமது பதிகத்தை. அவ்வாறு பாடியதற்தக் காரணம், அவர் இறை இலக்கணமாகும். இறைவன் என்றென்றும் இருப்பவன் - நம்மையும் இருப்பதாக்கினவன். God is our eternal Contemporary.

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே!'
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!

என்பதைத் திருவாசகத்திலும் (திருவெம்பாவை செய். 8)

"மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்து ஆய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து, தொல்லை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு, அயோத்தி
வந்தான்"

என்பதைக் கம்பராமாயணத்திலும் (சுந். கா. பிணிவீட்டு, படலம் செ. 80) நம்மாசிரியர் நன்கு கற்றிருந்தார்.

'மூன்ருய கவூடுடைய முதுமூலத் தனிப்பொருளே'

திரித்துவம், திரியேகத்துவம் என்ற சொற்கள் கிறிஸ்துவ சித்தாந்தத்தின் அடிப்படை என்பது மட்டுமன்று. கிறிஸ்தவக் கோவில் கட்டடம், அதன் கட்டுக்கோப்பு, அதற்குள் நடைபெறும் வாழ்த்து, வணக்கம், வழிபாடு அனைத்தும் இத்திரித்துவம் என்ற பெயரிலும் பொருளிலும் அமைந்தும் அடங்கியும் இயங்கியும் வருகின்றன.

அதற்கேற்ப, இரட்சணிய யாத்திரிகம் என்ற காப்பியத்தின் பாவிகமும் திரியேகத்துவத்தைப் பற்றியதேயாகும். இக்காப்பியத்

தின் முதல் நடு ஈறு எல்லாம் இப்பொருள் கொண்டுள்ளது என்பதை இந்நூலை முழுவதும் படித்துப் பயின்றவர் ஒப்புக்கொள்வர்.

இரட்சணிய யாத்திரிகத்தின் கடவுள் வாழ்த்துப் பாக்கள் ஏழும் பிதா, குமாரன், பரிசுத்தாவி என்ற மூவரையும் வாழ்த்தி, சிந்தித்து, பரவி, ஏத்தி, அஞ்சலித்து, அன்னார் திருவடிக் கமலத்தைத் தலைமேற்கொண்டு பாடிய துதிப்பாடல்களாகும்.

" திரியேகத் தொருநல் லாவி திருவடிக் கமலம்
தலைமேற் கொள்வாம் "

என்று சொல்லித் தம் வழிபடு கடவுள் வாழ்த்தை முடித்துள்ளார் கிருஷ்ணப்பிள்ளை.

இவ்வாறே கம்பரும்,

'உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகுஇ லாவினை யாட்டுடை யார்அவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே!'

என்று தம் காப்பியத்தைத் தொடங்கலுற்றார்!

அவ்வாறே, இக்காப்பியத்தின் இறுதிப் பருவத்தின் முடிவில் போற்றித் திருவிருத்தங்கள், என்ற பகுதியும் திரியேகக் கடவுளை 116 தடவை போற்றிய திருப்பாடல்கள் என்பதைக் காண்க.

பூர்வ சுருதியில் (Old Testament) மட்டுமன்றி, உத்தர சுருதியிலும் (New Testament) இத்தகு திருப்பாடல்கள் உள. நன்றியுணர்ச்சியோடும் மகிழ்ச்சியோடும் நாம் வாழ இறைவன் அருள் பாலிக்க விழைகின்றார் தூய பவுலார் (கொலோசேயர், 1:13).

தீமோத்தேயு 1:16 இல் இத்தகைய பாடல் ஒன்றைக் காண்க.

Let us give hereunder what Gordon. D. Kaufman has written in his book on 'God - The problem'. We shall give the opening and the closing sentences in his chapter on "The Meaning of the Act of God."

"The concept 'Act of God' is central to the biblical under standing of God and his relation to the world. Repeatedly we are told of the great works performed by God in behalf of his people and in execution of his on purposes in history. From the 'song of Moses", which celebrates the 'glorious deeds' (Exodus, (15:11) through which Yahweh secured the release of the

Israelites from bondage in Egypt, to the letters of Paul, which proclaim the great act of delivering us 'from the dominion of darkness' (Colossians, 1:13) and reconciling us with himself, we are confronted with God who acts.' The mighty acts' (Ps. 145 : 4), the wondrous deeds' (Ps. 45 : 5), the wonderful works' (107:21) of God are the fundamental subject matter of the biblical history, and object of biblical faith is clearly the one who has acted repeatedly and with power in the past and may be expected to do in the future." (p. 120)

After worrying out meaning of the "Act of God" in 27 pages which would amply reward any reader, he makes the following summary statement at the end of the chapter thus:

"Far better would it be to nourish our piety on the paradigmatic story a man praying that this cup might pass from him but submitting his will to God's no matter what the consequences that prayer answered not with legions of angels to rescue him but with lonely suffering on a cross, culminating in a cry of despair before the moment of death-and then a resurrection of new life, new faith, new hope, new love, in a new community born after his death. The God who works in this fashion to turn the darkest despairs and defeats into further steps toward realization of his beneficent ulimate objectives withcut violently ripping into the fabric of history or arbitrarily upsetting the momentum of its powers is one who could also be conceived as working within and through the closely textured natural and historical processes of our modern experience:

"He is a God who acts, a living God, the adequate object for a profound faith, and his action is not completely unintelligible to a mind instructed and informed by modern science and history", (P. 147).

கிருஷ்ணப்பிள்ளை அருளிச்செய்த போற்றித் திருவிருத்தங்கள்

இரட்சணிய மனோகரத்தில் 27ஆம் பகுதியாக இவ்விருத்தங்கள் அமைந்துள்ளன. இரட்சணிய யாத்திரிகத்தில் 'இகபர சந்திப் படலத்தில்' தேவாரம் எனப் பெயர் கொண்டுள்ளது.

இந்தப் பகுதியை ஊன்றிப் படிப்பவர்களுக்கு இதன் நுட்பங்கள் பல தெரியவரும்.

1930-ல் 'Karl Barth, Credo' என்றும், 1968-ல் 'The Christian's Creed' என்றும், 1972-ல் H. Pannenberg, 'The Apostle's Creed in the light of today's Questions' என்றும் ஜெர்மன் மொழியில் எழுதிய விரிவுரைகள் ஆங்கிலத்திலும் வெளி வந்துள்ளன இவர் போன்ற பலர் தத்தம் மொழியில் அவரவர் கால நிலைக்கேற்ப, விசுவாசப் பிரமாண விரிவுரைகளை உரை நடையில் எழுதியுள்ளனர் இவை போன்றே, கிருஷ்ணப் பிள்ளையும், நூறு ஆண்டுகளுக்கு முன்னர், செய்யுள் நடையில் இவ்விரிவுரையை எழுதியுள்ளார்.

தெய்வத்தை முன்னிலைப்படுத்திப் பரவிய பாடலே 'தேவ பாணி' என்று செய்யுளியல் சூத்திரத்தில் ஒத்தாழிசைக் கலியின் வகையாகத் தொல்காப்பிய உரையாசிரியர் குறிப்பிடுவர். தெய்வம் படர்க்கையாகியவழிப் 'புறநிலை வாழ்த்து' எனப்படும். தேவபாணி என்னும் பெயரையொட்டியே 'தேவாரம்' என்னும் பெயரும் தோன்றி வழங்கியிருத்தல் வேண்டும். 'வாரம்' என்பது, முன்னிலை, படர்க்கை என்னும் ஈரிடத்திற்கும் பொதுவாகிய தெய்வப் பாடலைக் குறித்து வழங்குவதாகும். பொது நீக்கித் தெய்வப்பாடல் என்ற சிறப்புப் பொருளையே அச்சொல் தருதல் வேண்டிப் பிற்காலத்தார், அதனைத் 'தேவாரம்' எனச் சிறப்புடை அடைமொழியுடன் சேர்த்து வழங்குவாராயினர்.

'இன்னிசையால் இறைவனைப் பாடிப் போற்றுதலையே பண்டைத் தமிழர் சிறப்புடைக் கடவுள் பாட்டாகக் கொண் டொழுகினர். அதனல், தெய்வ இசைப்பாட்டினைக் குறித்த 'தேவாரம்' என்னுஞ் சொல், இறைவனை உளமுருகிப் போற்றும் வழிபாட்டினையும் குறிப்பதாயிற்று' என்ருர் வெள்ளைவாரணர் (ibid, பக். 33).

இத்தகு தமிழர் வழிபாட்டு மரபுக்கேற்பத் தமிழ்க் கிறிஸ்தவப் பெரியார் ஒருவர், நமது விசுவாசப் பிரமாணத்தை இசைப் பாடலாகப் பாடியுள்ளார்;

"உலகும் வானும் செய்தாளும்
ஒப்பில் சருவ வல்லவராய்
இலகும் அருளாம் தந்தையாம்
எம்பீ ரான்தனை நம்புகிறேன்."

என்று தொடங்குவது அப்பாடல்.

நம்பியாரூரர், இறைவனை 'நள்ளாற்று நம்பி' என்று கூறி ஒரு பதிகம் முற்றும் 'நம்பி, நம்பி' என்றே விளித்துப் பேசும் அழகும் உன்னற்பாலது.

தமிழ்ப் பத்தி இலக்கிய மரபு வழுவாது, முத்தொழில் புரியும் திரியேகக் கடவுளின் விருத்தாந்தமாகிய தொழில் நிகழ்ச்சிகளை, கிறிஸ்துவின் அடியார்கள் தம் வழிபாட்டு முறையில் ஞாயிறு தோறும் பாடிப் பயின்று வரும் விசுவாசப் பிரமாணத்தையே இப்போற்றித் திருவிருத்தங்களால் புகழ்ந்தும் பரவியும் பாடி மகிழ்ந்தார் நம் கிருஷ்ணப்பிள்ளை. இது விவிலிய மரபுக்கு ஒத்துள்ளது என்பதைப் பின்னர்க் காண்போம்.

தாம் இம்முறையைக் கையாண்டே இத்திருவிருத்தங்களைப் பாடியுள்ளார் என்பதற்குச் சான்றாக, இப்பகுதிக்குக் 'கொளு' வாக எழுதியுள்ளதைக் காண்க.

பூர்வ சுருதி

"பூர்வோத் தரமாப் புகலும் சுருதியை
ஓர்வுறச் சுருக்கி உளம்பொறித் தன்று".

பூர்வோத்தரம் = பூர்வ உத்தரம்; பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு.
சுருதி = விவிலியம் (Bible).

விவிலியத்தில் காணப்படுகிற திரியேகக் கடவுளின் முத்தொழில் நிகழ்ச்சி நிரலின் சுருக்கம் என்பது பொருள்.

பத்தி இலக்கியத்தில் 'தொகை' என்ற பகுதிகள் பலவுள: "நாட்டுத்தொகை, ஊர்த்தொகை, திருத்தொண்டத்தொகை, என்பனவற்றைக் காண்க. திருத்தொண்டத்தொகைப் பதிகம், சிவத்தொண்டர்களைப் பணிந்தேத்திய பதிகம், வரலாற்றுச் சிறப்புடைய பதிகம் என்பது அனைவரும் அறிந்ததே. [A historical enumeration of Saints and their deeds.]

இறைவனுடைய வீரச்செயல்களைப் புகழ்ந்து பாடியதற்குக் 'கருவூர் வீரட்டம், குறுக்கை வீரட்டம், கோவலூர் வீரட்டம்' என்பன எடுத்துக்காட்டாகும்.

இனி, போற்றித்திரு விருத்தங்களின் வைப்பு முறையைக் காண்போம்:

மேற்கூறியவாறு, விசுவாசப் பிரமாணத்தின் மூன்று பிரிவுகளின் விரிவுரையாகவே இவ்விருத்தங்கள் பாடப்பட்டுள்ளன. 'பிதா, குமாரன், பரிசுத்தாவி' என்ற முறையில் பாடல்கள் அமைந்துள்ளன.

I. பூர்வசுருதி—செ. 1–11; தந்தை கடவுள்.

II. உத்திர சுருதி—செ. 12–31; குமாரக்கடவுள்.

III. „ „ —செ. 31–16; பரிசுத்தாவியின் பரம்.

1930-ல் 'Karl Barth, Credo' என்றும், 1968-ல் 'The Christian's Creed என்றும், 1972-ல் H. Pannenberg, 'The Apostle's Creed in the light of today's Questions' என்றும் ஜெர்மன் மொழியில் எழுதிய விரிவுரைகள் ஆங்கிலத்திலும் வெளி வந்துள்ளன இவர் போன்ற பலர் தத்தம் மொழியில் அவரவர் கால நிலேக்கேற்ப, விசுவாசப் பிரமாண விரிவுரைகளே உரை நடையில் எழுதியுள்ளனர் இவை போன்றே, கிருஷ்ணப் பிள்ளேயும், நூறு ஆண்டுகளுக்கு முன்னர், செய்யுள் நடையில் இவ்விரிவுரையை எழுதியுள்ளார்.

தெய்வத்தை முன்னிலேப்படுத்திப் பரவிய பாடலே 'தேவ பாணி' என்று செய்யுளியல் சூத்திரத்தில் ஒத்தாழிசைக் கலியின் வகையாகத் தொல்காப்பிய உரையாசிரியர் குறிப்பிடுவர். தெய்வம் படர்க்கையாகியவழிப் 'புறநிலே வாழ்த்து' எனப்படும். தேவபாணி என்னும் பெயரையொட்டியே 'தேவாரம்' என்னும் பெயரும் தோன்றி வழங்கியிருத்தல் வேண்டும். 'வாரம்' என்பது, முன்னிலே, படர்க்கை என்னும் ஈரிடத்திற்கும் பொதுவாகிய தெய்வப் பாடலேக் குறித்து வழங்குவதாகும். பொது நீக்கித் தெய்வப்பாடல் என்ற சிறப்புப் பொருளேயே அச்சொல் தருதல் வேண்டிப் பிற்காலத்தார், அதனேத் 'தேவாரம்' எனச் சிறப்புடை அடைமொழியுடன் சேர்த்து வழங்குவாராயினர்.

'இன்னிசையால் இறைவனேப் பாடிப் போற்றுதலேயே பண்டைத் தமிழர் சிறப்புடைக் கடவுள் பாட்டாகக் கொண் டொழுகினர். அதனுல், தெய்வ இசைப்பாட்டினேக் குறித்த 'தேவாரம்' என்னுஞ் சொல், இறைவனே உளமுருகிப் போற்றும் வழிபாட்டினேயும் குறிப்பதாயிற்று' என்றுர் வெள்ளேவாரணர் (ibid, பக். 33).

இத்தகு தமிழர் வழிபாட்டு மரபுக்கேற்பத் தமிழ்க் கிறிஸ்தவப் பெரியார் ஒருவர், நமது விசுவாசப் பிரமாணத்தை இசைப் பாடலாகப் பாடியுள்ளார்;

"உலகும் வானும் செய்தாளும்
ஒப்பில் சருவ வல்லவராய்
இலகும் அருளாம் தந்தையாம்
எம்பீரான்தனே நம்புகிறேன்."

என்று தொடங்குவது அப்பாடல்.

நம்பியாரூரர் இறைவனே 'நள்ளாற்று நம்பி' என்று கூறி ஒரு பதிகம் முற்றும் 'நம்பி, நம்பி' என்றே விளித்துப் பேசும் அழகும் உன்னற்பாலது

தமிழ்ப் பத்தி இலக்கிய மரபு வழுவாது, முத்தொழில் புரியும் திரியேகக் கடவுளின் விருத்தாந்தமாகிய தொழில் நிக்ழ்ச்சிகளை, கிறிஸ்துவின் அடியார்கள் தம் வழிபாட்டு முறையில் ஞாயிறு தோறும் பாடிப் பயின்று வரும் விசுவாசப் பிரமாணத்தையே இப்போற்றித் திருவிருத்தங்களால் புகழ்ந்தும் பரவியும் பாடி மகிழ்ந்தார் நம் கிருஷ்ணப்பிள்ளை. இது விவிலிய மரபுக்கு ஒத்துள்ளது என்பதைப் பின்னர்க் காண்போம்.

தாம் இம்முறையைக் கையாண்டே இத்திருவிருத்தங்களைப் பாடியுள்ளார் என்பதற்குச் சான்றாக, இப்பகுதிக்குக் 'கொளு' வாக எழுதியுள்ளதைக் காண்க.

பூர்வ சுருதி

''பூர்வோத் தரமாப் புகலும் சுருதியை
ஓர்வுறச் சுருக்கி உளம்பொறித் தன்று''.

பூர்வோத்தரம் = பூர்வ உத்தரம்; பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு. சுருதி = விவிலியம் (Bible).

விவிலியத்தில் காணப்படுகிற திரியேகக் கடவுளின் முத் தொழில் நிகழ்ச்சி நிரலின் சுருக்கம் என்பது பொருள்.

பத்தி இலக்கியத்தில் 'தொகை' என்ற பகுதிகள் பலவுள: ''நாட்டுத்தொகை, ஊர்த்தொகை, திருத்தொண்டத்தொகை, என்பனவற்றைக் காண்க. திருத்தொண்டத்தொகைப் பதிகம், சிவத்தொண்டர்களைப் பணிந்தேத்திய பதிகம், வரலாற்றுச் சிறப் புடைய பதிகம் என்பது அனைவரும் அறிந்ததே. [A historical enumeration of Saints and their deeds.]

இறைவனுடைய வீரச்செயல்களைப் புகழ்ந்து பாடியதற்குக் 'கருவூர் வீரட்டம், குறுக்கை வீரட்டம், கோவலூர் வீரட்டம்' எனபன எடுத்துக்காட்டாகும்.

இனி, போற்றித்திரு விருத்தங்களின் வைப்பு முறையைக் காண்போம்:

மேற்கூறியவாறு, விசுவாசப் பிரமாணத்தின் மூன்று பிரிவு களின் விரிவுரையாகவே இவ்விருத்தங்கள் பாடப்பட்டுள்ளன. 'பிதா, குமாரன், பரிசுத்தாவி' என்ற முறையில் பாடல்கள் அமைந் துள்ளன.

I. பூர்வசுருதி—செ. 1-11; தந்தை கடவுள்.

II. உத்திர சுருதி—செ. 12-31; குமாரக்கடவுள்.

III. „ „ .—செ. 31-16; பரிசுத்தாவியின் பரம்.

'இவ்வண்ணம் ஏகோ வாவை இருதயங் கனிந்து போற்றிச்
செவ்வியர் இருவர் தாமும் தெவிட்டிடாப் பரமா னந்தப்
பௌவவா ரிதியின் மூழ்கிப் பரவச ராகி நின்றார்;
திவ்விய வாக்கைச் சீர்மை ஜெகத்துஉரை தெரிப்ப தேயோ!'

(பரமானந்தப் பௌவ வாரிதி = ஆனந்தக் கடல். இன்ப வெள்ளப் பரவசராகி—தம் வசம் இழந்து பரவசரானார் (Ecstatic).

'பேரா, ஒழியா, பிரிவுஇல்லா,
மறவா, நினையா, அளவில்லா,
மாளா இன்ப மாகடலே!'

என்று ஒன்பது அடைமொழி கொடுத்து மகிழ்ந்தார் மணிவாசகர் (பிரார்த்தனைப் பத்து, செ. 6.)

'பரம சீயோனைக் கண்ட கிறிஸ்தியான்' பரமானந்தப் பரவச ராகிப் போற்றினர்' என்றார், சுவர்க்காரோகணப்பதிகம், செ. 9 இல்.

சீயோன் என்ற முதிய குன்றத்தில் (திருமுதுகுன்றம்—விருத்தாசலம்) மூன்று சிகரங்கள் ஓங்கித் திகழ்ந்தனவாம். இமய மலையில் 'தவளகிரி, கஞ்சின்சிங்கா, எவரெஸ்டு' என்னும் மூன்று சிகரங்கள் உள. ஆனால், கிருஷ்ணப்பிள்ளை கண்ட மலை, உணர் வினுக்கு அதீதமாகி ஓங்குவது: அம்மூன்று சிகரங்களாவன :

சத்து, சித்து, ஆனந்தம் :

'உத்தம கிருபை, ஞான ஒளி, அதி புனிதம்' என்பனவாகும்

## போற்றித் திருவிருத்தங்களின் நுண்பொருள்

இத் திருவிருத்தங்களின் அமைப்பிலும் பாகுபாட்டிலும் கிருஷ்ணப்பிள்ளையின் நுண்மாண் நுழைபுலம் எத்தகையது என்பதைக் காண்போம்:

திரியேகக் கடவுளைப் போற்றப் புகுந்தவர், தந்தை கடவுளுக்குப் பதினொரு செய்யுள்களும், குமரக் கடவுளுக்கு இருபது செய்யுள்களும், பரிசுத்தாவியின் பரத்துக்கு ஐந்து செய்யுள்களும் பாடியுள்ளாரவர். இன்னொரு வகையில், பூர்வ சுருதிக்குப் பதினொரு செய்யுள்களும், உத்தர சுருதிக்கு (N. T.) இருபத்தைந்து செய்யுள்களும் பாடியுள்ளார். எனவே, 'பிதா, குமாரன், பரிசுத்தாவி' என்ற மூவரில், நடுவருக்கே அதிமுக்கியத்தை அழுத்தமாகவும் விரிவாகவும் கொடுத்துள்ளார். இந்த அழுத்தத்தை 'Intensive' என்றும், விரிவை 'Universal' என்றும், இவ்விரண்டையும் சேர்த்து 'Intensive Universalism' என்றும் மேல்நாட்டு இறை இயல் வல்லுநர் (Karl Barth) கூறுவர். இவர்கள் தோன்று

"முத்தலைச் சிகரம் ஓங்கித் திகழ்வதுஅம் முதிய குன்றம்"

இனி, திரியேகக் கடவுளைப் போற்றிப் பாடிய திருவிருத்தங்களின் உட்பொருளை ஓரளவு காண்போம் :

இரட்சணிய யாத்திரிகத்தில் ஐந்தாம் பருவத்தில் இகபர சந்திப் படலத்தில் வந்துள்ளன இப்போற்றித் திருவிருத்தங்கள். பன்யன் எழுதிய மோட்சப் பிரயாணத்திலும், தமிழ்ப் பத்திப் பனுவல்களிலும் இவ்விருத்தங்களின் பொருளைக் காணல் இயலாது. முற்கூறியவாறு, இது கிறிஸ்துவர்களின் விசுவாசப் பிரமாணத்தின் விரிவுரையேயன்றி வேறன்று.

'இவ்விருத்தங்களுக்கு முன்னரும் பின்னரும் திரியேகக் கடவுளின் திருச்செயல்களையே நான் சொல்லப் புகுவேன்; சொல்லி முடித்தேன்' எனப் பாடியுள்ளார், இவ்விருத்தங்களை ஆம், இவ்விருத்தாந்தங்களை.

'இகபரசந்திப் படலம்' என்று பெயரிட்டது கருத்துச் செறிந்துள்ளதொன்றாகும். இகமும் பரமும், இம்மையும் அம்மையும் ஒன்றையொன்று சந்தித்துக் கட்டித் தழுவுகின்றதொரு பெருநிலையை மனத்திற்கொண்டே இவை எழுதப்பட்டனவாகும்.

The Pilgrim has now come to the junction point of time and eternity, of the beauty and glory of the faith in the one who has acted thus and of the Hope for the future; that is the mystery of the Trinity.

'ஆன்ற வேதியன் அகத்துவிசு வாசத்தை ஆக்கி,
ஏன்று ஜீவபா தையில் செல்ல விடுத்ததும், இடையே
ஊன்று நம்பிக்கை உருப்புனைந்து உருப்படுத் தியதும்,
மூன்றொன் றாகிய தைவிகக் கிருபையே முற்றும். (செ. 52.)

'ஜீவ முத்தியாம் கரைபிடித்து ஏறிய செல்வர்
மேவு பேரின்ப தலம்புக்க விந்தையை உள்ளித்
தேவ தேவபராபர திரித்துவ தேவை
ஆவ லில்துதித்து அன்பொடு போற்றுவான் அமைந்தார்.'
(செ. 53.)

'திரித்துவத் தேவனை ஆவலோடு துதித்து, அன்போடு போற்றுவாய்' என்று தம் போற்றித் திருவிருத்தத்திற்குத் தோற்றுவாய் செய்து வைத்தார் ஆசிரியர்.

'தேவாரம் முற்றிற்று', என்று ஆசிரியர் தாமே முத்தாய்ப்பு வைத்த பின்னர், இறுதிச் செய்யுளில் (54) கவி கூற்றாய் ஒன்றைப் பாடிவைத்தார்.

'இவ்வண்ணம் ஏகோ வாவை இருதயங் கனிந்து போற்றிச்
செவ்வியர் இருவர் தாமும் தெவிட்டிடாப் பரமா னந்தப்
பௌவவா ரிதியின் மூழ்கிப் பரவச ராகி நின்ருர்;
திவ்விய வாக்கைச் சீர்மை ஜெகத்துஉரை தெரிப்ப தேயோ!'

(பரமானந்தப் பௌவ வாரிதி = ஆனந்தக் கடல். இன்ப வெள்ளப் பரவசராகி= தம் வசம் இழந்து பரவசரானுர் (Ecstatic).

'பேரா, ஒழியா, பிரிவுஇல்லா,
மறவா, நினையா, அளவில்லா,
மாளா இன்ப மாகடலே!'

என்று ஒன்பது அடைமொழி கொடுத்து மகிழ்ந்தார் மணிவாசகர் (பிரார்த்தனைப் பத்து, செ. 6.)

'பரம சீயோனைக் கண்ட கிறிஸ்தியான்' பரமானந்தப் பரவச ராகிப் போற்றினுர்' என்ருர், சுவர்க்காரோகணப்பதிகம், செ. 9 இல்.

சீயோன் என்ற முதிய குன்றத்தில் (திருமுதுகுன்றம்–விருத்தாசலம்) மூன்று சிகரங்கள் ஓங்கித் திகழ்ந்தனவாம். இமய மலையில் 'தவளகிரி, கஞ்சின்சிங்கா, எவரெஸ்டு' என்னும் மூன்று சிகரங்கள் உள. ஆனுல், கிருஷ்ணப்பிள்ளை கண்ட மலை, உணர் வினுக்கு அதீகதமாகி ஓங்குவது: அம்மூன்று சிகரங்களாவன :

சத்து, சித்து, ஆனந்தம் :

'உத்தம கிருபை, ஞான ஒளி, அதி புனிதம்' என்பனவாகும்.

போற்றித் திருவிருத்தங்களின் நுண்பொருள்

இத் திருவிருத்தங்களின் அமைப்பிலும் பாகுபாட்டிலும் கிருஷ்ணப்பிள்ளையின் நுண்மாண் நுழைபுலம் எத்தகையது என்பதைக் காண்போம்:

திரியேகக் கடவுளைப் போற்றப் புகுந்தவர், தந்தை கடவுளுக்குப் பதினெரு செய்யுள்களும், குமரக் கடவுளுக்கு இருபது செய்யுள்களும், பரிசுத்தாவியின் பரத்துக்கு ஐந்து செய்யுள்களும் பாடியுள்ளாரவர். இன்னெரு வகையில், பூர்வ சுருதிக்குப் பதினெரு செய்யுள்களும், உத்தர சுருதிக்கு (N. T.) இருபத்தைந்து செய்யுள்களும் பாடியுள்ளார். எனவே, 'பிதா, குமாரன், பரிசுத்தாவி' என்ற மூவரில், நடுவருக்கே அதிமுக்கியத்தை அழுத்தமாகவும் விரிவாகவும் கொடுத்துள்ளார். இந்த அழுத்தத்தை 'Intensive' என்றும், விரிவை 'Universal' என்றும், இவ்விரண்டையும் சேர்த்து 'Intensive Universalism' என்றும் மேல்நாட்டு இறை இயல் வல்லுநர் (Karl Barth) கூறுவர். இவர்கள் தோன்று

"முத்தலைச் சிகரம் ஓங்கித் திகழ்வதுஅம் முதிய குன்றம்"

இனி, திரியேகக் கடவுளைப் போற்றிப் பாடிய திருவிருத்தங்களின் உட்பொருளை ஓரளவு காண்போம் :

இரட்சணிய யாத்திரிகத்தில் ஐந்தாம் பருவத்தில் இகபர சந்திப் படலத்தில் வந்துள்ளன இப்போற்றித் திருவிருத்தங்கள். பன்யன் எழுதிய மோட்சப் பிரயாணத்திலும், தமிழ்ப் பத்திப் பனுவல்களிலும் இவ்விருத்தங்களின் பொருளைக் காணல் இயலாது. முற்கூறியவாறு, இது கிறிஸ்துவர்களின் விசுவாசப் பிரமாணத்தின் விரிவுரையேயன்றி வேறன்று.

'இவ்விருத்தங்களுக்கு முன்னரும் பின்னரும் திரியேகக் கடவுளின் திருச்செயல்களையே நான் சொல்லப் புகுவேன்; சொல்லி முடித்தேன்' எனப் பாடியுள்ளார், இவ்விருத்தங்களை ஆம், இவ்விருத்தாந்தங்களை.

'இகபரசந்திப் படலம்' என்று பெயரிட்டது கருத்துச் செறிந்துள்ளதொன்றாகும். இகமும் பரமும், இம்மையும் அம்மையும் ஒன்றையொன்று சந்தித்துக் கட்டித் தழுவுகின்றதொரு பெருநிலையை மனத்திற்கொண்டே இவை எழுதப்பட்டனவாகும்.

The Pilgrim has now come to the junction point of time and eternity, of the beauty and glory of the faith in the one who has acted thus and of the Hop: for the future; that is the mystery of the Trinity.

'ஆன்ற வேதியன் அகத்துவிசு வாசத்தை ஆக்கி,
ஏன்று ஜீவபா தையில் செல்ல விடுத்ததும், இடையே
ஊன்று நம்பிக்கை உருப்புனைந்து உருப்படுத் தியதும்,
மூன்றுென் றாகிய தைவிகக் கிருபையே முற்றும். (செ. 52.)

'ஜீவ முத்தியாம் கரைபிடித்து ஏறிய செல்வர்
மேவு பேரின்ப தலம்புக்க விந்தையை உள்ளித்
தேவ தேவப ராபர திரித்துவ தேவை
ஆவ லில்துதித்து அனபொடு போற்றுவான் அமைந்தார்.'
(செ. 53.)

'திரித்துவத் தேவனை ஆவலோடு துதித்து, அன்போடு போற்றுவாய்' என்று தம் போற்றித் திருவிருத்தத்திற்குத் தோற்றுவாய் செய்து வைத்தார் ஆசிரியர்.

'தேவாரம் முற்றிற்று', என்று ஆசிரியர் தாமே முத்தாய்ப்பு வைத்த பின்னர், இறுதிச் செய்யுளில் (54) கவி கூற்றாய் ஒன்றைப் பாடிவைத்தார்.

பேசுவார்கள். மெய்ஞ்ஞானிகள், இறைவனது சொரூப இலக்கணத்தைக் காண முயல்வார்கள். தெய்வப் புலமை வாய்ந்த அருட்கவிஞர்கள் இவ்விரு இலக்கணங்களையும் ஒருசேரக் கண்டு காட்டுவார்கள். இவ்வகையைச் சார்ந்தவரே கம்பரும் கிருஷ்ணப் பிள்ளையும்.

மேலே கண்ட செய்யுளில், நம் கவிஞர் இறைவனது தொழில்கள் மூன்று என்றதோடமையாது, இத்தொழில்களைச் செய்த தொழிலாளி, 'பிதா, குமாரன், பரிசுத்தாவி' என்ற மூவரில் ஒருவன் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். மேல் அடி காட்சிப் பிரமாணத்தையும், கீழ் அடி அனுமானப் பிரமாணத்தையும் தழுவி நின்றன.

இந்த இரண்டு இலக்கணங்களையும் வேருய், உடனுய், ஒன்ருய்க் காட்டுவது கவிதையுள்ளம் என்பதைக் கவந்தனது துதிப்பாடல் வெளிப்படுத்தியதை மேலே கண்டோம். அவனுடைய தேவ பாணியில் முதல் ஏழு செய்யுள்களில் இறைவனது சொரூப இலக்கணத்தையும், அடுத்த எட்டாம் ஒன்பதாம் செய்யுள்களில் தடத்த அலலது செயல் முறையையும் கண்டோம். எட்டாம் செய்யுளில் 'செய்கை' என்ற சொல், முதல் மூன்றடிகளில் நான்கு முறை ஆளப்பட்டுள்ளது. ஒன்பதாம் செய்யுள் எம்பெருமான் தனக்குச் செய்த நான்கு அருட்செயல்களின் பட்டியலாய் அமைந்துள்ளதைக் காணலாம்.

(1) மாயப் பிறவி மயல்நீக்கி; (2) மாசு இலாக்
காயத்தை நல்கி; (3) துயரின் கரை ஏற்றி,
(4) பேதைப் பிணக்கு அறுத்த பெருமான்

எனச் செயல்கள் நான்கு, பெருமான் செயல்களைக் கண்டு, அறிவு வந்து உதவ அறிந்து, பெருமானது சொரூப இலக்கணத்தை, தன்மையை, மகிமையை, Doxa-வை, Glory-யை வியந்து பாடினுன் கவந்தன் என்க.

"மூன்று கவடாய் முளைத்து எழுந்த மூலமோ" என்ற அடியில் ஓர் உவமையணியைக் காணலாம். விதை ஒன்று, அதுதான் மூலம். அதிலிருந்து முளைத்தெழுந்த மரமும் ஒன்றுதான் எனினும் அம் மரத்தில் மூன்று கிளைகள் பிரிந்து விரிந்து தழைத்தன என்ருர். இது போன்ற பல்வேறு உவமைகளையும் புலவர் பெருமக்கள் பயன் படுத்தியுள்ளார்கள்.

இனி, இறைவன் செயல் முறைகளை, அவற்றின் வகைகளை, விருத்தாந்தங்களை ஓரளவு காண்போம்:

கவந்தன் கூறிய மூன்று கவடுகளைப் பற்றி அண்ணுமலைப் பல்கலைக்கழகப் பதிப்பில் இவற்றைப்பற்றிக்' கூறிய விளக்கத்தைக்

12ஆம் செய்யுளில், 'ஆதிமெய்த் திருவாக்கு ஆகிய அகில காரணனே' என்பது, யோவான் 1 : 1, 2, 3ஐச் சுட்டிற்று; 'ஆதியிலேயே திருவாக்கு இருந்தார்; அந்தவாக்கு, கடவுளோடிருந்தார்.... உண்டானது எதுவும் அவராலே அல்லாமல் உண்டாகவில்லை' என்றார் யோவான். எனவே, உலகப்படைப்புக்கு, 'பிதா, குமாரன், பரிசுத்தாவி,' என்ற மூவரும் காரணர் என்ற கொள்கையை நம் அருட்கவிஞர் வலியுறுத்தினர்.

அடுத்து, இத் திருவிருத்தங்களின் பிறிதொரு நுட்பத்தைக் காண்போம்:

'பிதா, சுதன், பரிசுத்தாவி' என்ற மூவரையும் தனித்தனியாகப் புகழ்ந்தவர். 'ஆதி' என்ற சொல்லையும் பொருளையும் ஒவ்வொருவருக்கும் ஏற்றி, அம்மூவரும் தனித்தும், ஒன்றாயும், ஆதியில் இருந்தவர் என்று தொடங்கி, 'தொல்லையில் ஒன்றேயாகி' என்பதை வலியுறுத்திய பின்னர், 'துறைதொறும் பரந்த சூழ்ச்சி'யை விரித்துரைத்தார்.

உயர்வற உயர் நலமற்ற தொல்லோனைப் புகழத்தொடங்கியவர், அவ்வுயர் நிலையில் நின்று இரட்சணிய வரலாற்றின் தோற்றம், போக்கு, நோக்கு, முடிவு என்பனவற்றை ஒரு சேரக் கண்டு காட்டினார் என்க. இந்த உயரத்திலிருந்து கண்ட காட்சியில், கிறிஸ்துவின் சிலுவைக்காட்சியே நடுநாயகமாய் இருக்கின்றது. சிலுவையினடியில் நின்று முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளைக் கண்டதோடமையாது, பின்னைப்புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியினையே காட்டக் கண்டார் கவிஞர். கிறிஸ்துவே 'அ'கரமும் 'ன'கரமும், காலமும் காலங்கடந்தவரும் கடந்து உள்ளவருமான கடவுள் என்பதையும் விசுவாசக் கண்கொண்டு காணலுற்றார்.

கார்ல் பார்த்து (Karl Barth) என்ற இறையியல் வல்லுனர் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கண்டதை, நம் கவிஞர் வேதம் வாயிலாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே கண்டு இவ்வாறு பாடியுள்ளார் என்பதை அறிந்து இன்புறுக!

"முத்தொழி லோனே, நமஸ்காரம்!
மூன்றிலொன் றேனே, நமஸ்காரம்!"

பதி இலக்கணத்தில், இறைவனது தன்மையில், பொது என்றும் சிறப்பு என்றும், சொரூபம் என்றும் தடத்தம் என்றும், 'Doxology' என்றும் 'Kerygme' வகுத்துக் கூறிய வேறுபாடுகளை மேலே கண்டோம். விஞ்ஞானிகள் (Scientists and Historians), இறைவன் செயல்களை, தொழில்களை, தொழில் முறைகளை மட்டும்

பேசுவார்கள். மெய்ஞ்ஞானிகள், இறைவனது சொரூப இலக்கணத்தைக் காண முயல்வார்கள். தெய்வப் புலமை வாய்ந்த அருட்கவிஞர்கள் இவ்விரு இலக்கணங்களையும் ஒரு சேரக் கண்டு காட்டுவார்கள். இவ்வகையைச் சார்ந்தவரே கம்பரும் கிருஷ்ணப் பிள்ளையும்.

மேலே கண்ட செய்யுளில், நம் கவிஞர் இறைவனது தொழில்கள் மூன்று என்றதோடமையாது, இத்தொழில்களைச் செய்த தொழிலாளி, 'பிதா, குமாரன், பரிசுத்தாவி' என்ற மூவரில் ஒருவன் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். மேல் அடி காட்சிப் பிரமாணத்தையும், கீழ் அடி அனுமானப் பிரமாணத்தையும் தழுவி நின்றன.

இந்த இரண்டு இலக்கணங்களையும் வேருய், உடனுய், ஒன்ருய்க் காட்டுவது கவிதையுள்ளம் என்பதைக் கவந்தனது துதிப்பாடல் வெளிப்படுத்தியதை மேலே கண்டோம். அவனுடைய தேவ பாணியில் முதல் ஏழு செய்யுள்களில் இறைவனது சொரூப இலக்கணத்தையும், அடுத்த எட்டாம் ஒன்பதாம் செய்யுள்களில் தடத்த அல்லது செயல் முறையையும் கண்டோம். எட்டாம் செய்யுளில் 'செய்கை' என்ற சொல், முதல் மூன்றடிகளில் நான்கு முறை ஆளப்பட்டுள்ளது. ஒன்பதாம் செய்யுள் எம்பெருமான் தனக்குச் செய்த நான்கு அருட்செயல்களின் பட்டியலாய் அமைந்துள்ளதைக் காணலாம்.

(1) மாயப் பிறவி மயல்நீக்கி; (2) மாசு இலாக்
காயத்தை நல்கி; (3) துயரின் கரை ஏற்றி,
(4) பேதைப் பிணக்கு அறுத்த பெருமான்

எனச் செயல்கள் நான்கு, பெருமான் செயல்களைக் கண்டு, அறிவு வந்து உதவ அறிந்து, பெருமானது சொரூப இலக்கணத்தை, தன்மையை, மகிமையை, Doxa-வை, Glory-யை வியந்து பாடினுன் கவந்தன் என்க.

"மூன்று கவடாய் முளைத்து எழுந்த மூலமோ" என்ற அடியில் ஓர் உவமையணியைக் காணலாம். விதை ஒன்று, அதுதான் மூலம். அதிலிருந்து முளைத்தெழுந்த மரமும் ஒன்றுதான் எனினும் அம் மரத்தில் மூன்று கிளைகள் பிரிந்து விரிந்து தழைத்தன என்ருர். இது போன்ற பல்வேறு உவமைகளையும் புலவர் பெருமக்கள் பயன் படுத்தியுள்ளார்கள்.

இனி, இறைவன் செயல் முறைகளை, அவற்றின் வகைகளை, விருத்தாந்தங்களை ஓரளவு காண்போம்:

கவந்தன் கூறிய மூன்று கவடுகளைப் பற்றி அண்ணுமலைப் பல்கலைக்கழகப் பதிப்பில் இவற்றைப்பற்றிக் கூறிய விளக்கத்தைக்

12ஆம் செய்யுளில், 'ஆதிமெய்த் திருவாக்கு ஆகிய அகில காரணனே' என்பது, யோவான் 1 : 1, 2, 3ஐச் சுட்டிற்று; 'ஆதியிலேயே திருவாக்கு இருந்தார்; அந்தவாக்கு, கடவுளோடிருந்தார்.... உண்டானது எதுவும் அவராலே அல்லாமல் உண்டாகவில்லை' என்றார் யோவான். எனவே, உலகப்படைப்புக்கு, 'பிதா, குமாரன், பரிசுத்தாவி,' என்ற மூவரும் காரணர் என்ற கொள்கையை நம் அருட்கவிஞர் வலியுறுத்தினர்.

அடுத்து, இத் திருவிருத்தங்களின் பிறிதொரு நுட்பத்தைக் காண்போம்:

'பிதா, சுதன், பரிசுத்தாவி' என்ற மூவரையும் தனித்தனியாகப் புகழ்ந்தவர். 'ஆதி' என்ற சொல்லையும் பொருளையும் ஒவ்வொரு வருக்கும் ஏற்றி, அம்மூவரும் தனித்தும், ஒன்றாயும், ஆதியில் இருந்தவர் என்று தொடங்கி, 'தொல்லையில் ஒன்றேயாகி' என்பதை வலியுறுத்திய பின்னர், 'துறைதொறும் பரந்த சூழ்ச்சி'யை விரித்துரைத்தார்.

உயர்வற உயர்நலமற்ற தொல்லோனைப் புகழத்தொடங்கியவர், அவ்வுயர் நிலையில் நின்று இரட்சணிய வரலாற்றின் தோற்றம், போக்கு, நோக்கு, முடிவு என்பனவற்றை ஒரு சேரக் கண்டு காட்டினார் என்க. இந்த உயரத்திலிருந்து கண்ட காட்சியில், கிறிஸ்துவின் சிலுவைக்காட்சியே நடுநாயகமாய் இருக்கின்றது. சிலுவையினடியில் நின்று முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளைக் கண்டதோடமையாது, பின்னைப்புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியினையே காட்டக் கண்டார் கவிஞர். கிறிஸ்துவே 'அ'கரமும் 'ன' கரமும், காலமும் காலங்கடந்தவரும் கடந்து உள்ளவருமான கடவுள் என்பதையும் விசுவாசக் கண்கொண்டு காணலுற்றார்.

கார்ல் பார்த்து (Karl Barth) என்ற இறையியல் வல்லுனர் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கண்டதை, நம் கவிஞர் வேதம் வாயிலாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே கண்டு இவ்வாறு பாடியுள்ளரர் என்பதை அறிந்து இன்புறுக!

"முத்தொழி லோனே, நமஸ்காரம்!
மூன்றிலொன் றோனே, நமஸ்காரம்!"

பதி இலக்கணத்தில், இறைவனது தன்மையில், பொது என்றும் சிறப்பு என்றும், சொருபம் என்றும் தடத்தம் என்றும், 'Doxology' என்றும் 'Kerygme' வகுத்துக் கூறிய வேறுபாடுகளை மேலே கண்டோம். விஞ்ஞானிகள் (Scientists and Historians), இறைவன் செயல்களை, தொழில்களை, தொழில் முறைகளை மட்டும்

இவ் விளையாட்டுடையார்க்கே நாங்கள் சரணாகதி செய்வோம்' என்பது பொருள்.

'ஆக்கல், காத்தல், நீக்கல், என்ற முத்தொழிலான்' எனப் புகழ்ந்து அவனை நமஸ்கரிக்கின்றார் காப்பியக் கவிஞர்.

இக்கருத்தை உள்ளடக்கித் தமக்கே உரியதொரு பாணியில் கிருஷ்ணப்பிள்ளை பாடிய பாடல் ஒன்றை ஆராய்வோம்.

இரட்சணிய மனோகரம் (3. சந்நிதி முறை, செ. 10)

இப்பாடல், நாம் இரட்சணிய யாத்திரிகத்தில் காணாத தொன்று; தாயுமானவர் பாடலை மனத்திற்கொண்டு (பரசிவ வணக்கம) அவர் எழுப்பிய வினாக்களுக்கு விடையளித்தாற் போன்றதொரு துதிப்பாடலாகும்.

தந்தை கடவுளின் சொரூப நிலை அல்லது சத்து நிலையையும் திருவாக்காகிய மைந்தன் ஆன நிலையையும், முதலிருவரினின்றும் தோன்றிய பரிசுத்தாவியாய்த் திகழ்ந்தமையும் கூறி, இம் மூவரும் செய்கையில் மூவராய், சிந்தையில் ஒருவராய், உலகம் யாவையும் படைத்து, அளித்து, ஆள்கின்ற ஈசனே என்று விளித்து, ஒரு பல்லவியோடு இப்பாடலை முடித்த திறம் வியப்பிற்கும் பாடி இன்புறுதற்குமுரியது.

'அயல் ஒன்றும் இன்றியே சுத்தசூ னியமாய்
அகண்டவெளி யாய்க்க லந்து
அநாதியாய் நின்றபர வஸ்துவே; உன்மையும்
அவ்வுண்மை யேவஸ் துவும்
மயல்இன்றி அப்பரம வஸ்துவிடம் நின்றுவெளி
வந்ததிரு வாக்கு அநாதி
மைந்தன் என்று ஆக : அவ் வத்துவிலும் மைந்தனிலும்
வந்தபரி சுத்தாவியும்;
செயலிலே தந்தையாய், மைந்தனாய், ஆவியாய்த்
திகழ்ந்துதிரி யேக பரமன்
சிருஷ்டிஸ்திதி ரக்ஷணிய செய்கையினில் மூவராய்ச்
சிந்தனையில் ஒருவர் ஆகி,
இயல்உலகைப் படைத்து, அளித்துஆள்கின்ற
ஈசனே! அடியேற்குஅருள்
ஏகநா யக!சருவ லோகநா யக!கிறிஸ்
தியேசுநா யகஸ்வாமியே !

பொருள் :

முதலடி : படைத்தற்காலத்துக்கு முன் சொரூப நிலையில் 'ஆதிக்கும் ஆதியாய பரவஸ்துவே!' The Substance was Truth ; the Truth was Substance. இது தந்தை கடவுளைக் குறித்ததென்க,

The River's Source, flow and Sea. இக்கருத்தையே கம்பரும், 'கல்லிடைப் பிறந்து போந்து கல்லிடைக் கலந்த நீத்தம்' என்றார்.

மனம் வாக்குக் காயம் The three Dimensions of the body, mind and soul.

மூன்று நிறங்கள் : மஞ்சள், சிவப்பு, நீலம்.

The Musical accord.

மூன்று காலங்கள் : இறந்த, நிகழ், வருங்காலங்கள்.

முத்தமிழ் : இயல், இசை, நாடகம்.

Three literary types : Epic, Lyric, Drama.

Three periods : Kairos, Chronos, Epochs.

Three Conscious moments of man :

Memory - intellect - will (of St. Augustine),

இன்னம் பலப்பல எடுத்துக்காட்டுகள் உள.

See H. G. Pohlmann, Abriss det Dogmatik. (in German.) p. 88, 1973.

கிட்கிந்தா காண்டம் கடவுள் வாழ்த்துப் பாடலிலும் இம்மும்மையைக் கம்பர் காட்டுகிறார்:

'மூன்றுஉரு எனக்குண மும்மை யாம்முதல்,
தோன்றுஉரு எவையும், அம் முதலைச் சொல்லுதற்கு
ஒன்றுஉரு அமைந்தவும், இடையில் நின்றவும்,
ஊன்றுஉரு உணர்வினுக்கு உணர்வும் ஆயினான்.'

இவை யாவற்றிற்கும் தோற்றுவாயாகவும், புதுமுகமாகவும் தம் காவியத்தின் பாவிகப் பண்பைத் தம் காப்பியத்தின் தொடக்கத்திலேயே, கடவுள் வாழ்த்துப் பாவில் தொகுத்துரைத்ததைக் காண்க :

'உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுஉடை யார்அவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே!'

'தினையளவு போதாச் சிறுபுல்நீர் நீண்ட
பனையளவு காட்டி விடும்,'

என்ற குறளுக்குரைத்த உவமம், கம்பரது பாட்டிற்கு மிகப் பொருத்தமானது !

தந்நேரில்லாத் தம் காப்பியத் தலைவர், 'ஒரு விளையாட்டுடையவர். அது மூன்றுவிதமான விளையாட்டு: உலகத்தை உளவாக்கல், அதை நிலைபெறுத்தல், அதை நீக்கல். அவரே நம் தலைவர் :

இவ் விளையாட்டுடையார்க்கே நாங்கள் சரணாகதி செய்வோம்' என்பது பொருள்.

'ஆக்கல், காத்தல், நீக்கல், என்ற முத்தொழிலான்' எனப் புகழ்ந்து அவனை நமஸ்கரிக்கின்றார் காப்பியக் கவிஞர்.

இக்கருத்தை உள்ளடக்கித் தமக்கே உரியதொரு பாணியில் கிருஷ்ணப்பிள்ளை பாடிய பாடல் ஒன்றை ஆராய்வோம்.

இரட்சணிய மனோகரம் (3. சந்நிதி முறை, செ. 10)

இப்பாடல், நாம் இரட்சணிய யாத்திரிகத்தில் காணாத தொன்று; தாயுமானவர் பாடலை மனத்திற்கொண்டு (பரசிவ வணக்கம்) அவர் எழுப்பிய வினாக்களுக்கு விடையளித்தாற் போன்றதொரு துதிப்பாடலாகும்.

தந்தை கடவுளின் சொரூப நிலை அல்லது சத்து நிலையையும் நிருவாக்காகிய மைந்தன் ஆன நிலையையும், முதலிருவரினின்றும் தோன்றிய பரிசுத்தாவியாய்த் திகழ்ந்தமையும் கூறி, இம்மூவரும் செய்கையில் மூவராய், சிந்தையில் ஒருவராய், உலகம் யாவையும் படைத்து, அளித்து, ஆள்கின்ற ஈசனே என்று விளித்து, ஒரு பல்லவியோடு இப்பாடலை முடித்த திறம் வியப்பிற்கும் பாடி இன்புறுதற்குமுரியது.

'அயல் ஒன்றும் இன்றியே சுத்தசூ னியமாய்
அகண்டவெளி யாய்க்க லந்து
அநாதியாய் நின்றபர வஸ்துவே; உன்மையும்
அவ்வுண்மை யேவஸ் துவும்
மயல்இன்றி அப்பரம வஸ்துவிடம் நின்றுவெளி
வந்ததிரு வாக்கு அநாதி
மைந்தன் என்று ஆக : அவ் வத்துவிலும் மைந்தனிலும்
வந்தபரி சுத்தாவியும்;
செயலிலே தந்தையாய், மைந்தனாய், ஆவியாய்த்
திகழ்ந்துதிரி யேக பரமன்
சிருஷ்டிஸ்திதி ரக்ஷணிய செய்கையினில் மூவராய்ச்
சிந்தனையில் ஒருவர் ஆகி,
இயல்உலகைப் படைத்து, அளித்துஆள்கின்ற
ஈசனே! அடியேற்குஅருள்
ஏகநா யக!சருவ லோகநா யக!கிறிஸ்
தியேசுநா யகஸ்வாமியே!

பொருள் :

முதலடி : படைத்தற்காலத்துக்கு முன் சொரூப நிலையில் 'ஆதிக்கும் ஆதியாய பரவஸ்துவே!' The Substance was Truth; the Truth was Substance. இது தந்தை கடவுளைக் குறித்ததென்க,

The River's Source, flow and Sea. இக்கருத்தையே கம்பரும், 'கல்லிடைப் பிறந்து போந்து கல்லிடைக் கலந்த நீத்தம்' என்றார்.

மனம் வாக்குக் காயம் The three Dimensions of the body, mind and soul.

மூன்று நிறங்கள் : மஞ்சள், சிவப்பு, நீலம்.

The Musical accord.

மூன்று காலங்கள் : இறந்த, நிகழ், வருங்காலங்கள்.

முத்தமிழ் : இயல், இசை, நாடகம்.

Three literary types : Epic, Lyric, Drama.

Three periods : Kairos, Chronos, Epochs.

Three Conscious moments of man :

Memory - intellect - will (of St. Augustine),

இன்னம் பலப்பல எடுத்துக்காட்டுகள் உள.

See H. G. Pohlmann, Abriss det Dogmatik. (in German.) p. 88, 1973.

கிட்கிந்தா காண்டம் கடவுள் வாழ்த்துப் பாடலிலும் இம்மும்மையைக் கம்பர் காட்டுகிறார்:

'மூன்றுஉரு எனக்குண மும்மை யாம்முதல்,
தோன்றுஉரு எவையும், அம் முதலைச் சொல்லுதற்கு
ஒன்றுஉரு அமைந்தவும், இடையில் நின்றவும்,
ஊன்றுஉரு உணர்வினுக்கு உணர்வும் ஆயினன்.'

இவை யாவற்றிற்கும் தோற்றுவாயாகவும், புதுமுகமாகவும் தம் காவியத்தின் பாவிகப் பண்பைத் தம் காப்பியத்தின் தொடக்கத்திலேயே, கடவுள் வாழ்த்துப் பாவில் தொகுத்துரைத்ததைக் காண்க :

'உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுஉடை யார்அவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே !'

'திணையளவு போதாச் சிறுபுல்நீர் நீண்ட
பனையளவு காட்டி விடும்,'

என்ற குறளுக்குரைத்த உவமம், கம்பரது பாட்டிற்கு மிகப் பொருத்தமானது !

தந்நேரில்லாத் தம் காப்பியத் தலைவர், 'ஒரு விளையாட்டுடையவர். அது மூன்றுவிதமான விளையாட்டு: உலகத்தை உளவாக்கல், அதை நிலைபெறுத்தல், அதை நீக்கல். அவரே நம் தலைவர் :

இத்தகைய கருத்துகளைக் கிருஷ்ணப்பிள்ளை, கம்பராமாயணத்திலிருந்தோ, லுத்தர் முதலானோரிடமிருந்தோ ஒவ்வோர் அகப்பை முகந்துகொண்டனரோ என்னவோ! ஜீவஆறு என்ற பொருளை வைத்து, அவர் திரித்துவத்தைப் புகழ்ந்து பாடியவற்றை ஜீவபுஷ்கரணிப்படலத்தில் காண்கிறோம்.

ஏழாம் செய்யுளில், முத்தலைச் சிகரியில் முளைத்த ஜீவமா நதியைப் பற்றிப் பாடியுள்ளாரவர்.

'முந்து முத்தலைச் சிகரியின்
முளைத்துமூ துலகின்
பந்தம் நூறிடும் ஜீவ மா நதிமுகம் படிந்து...'

என்ற பாடல் - திரித்துவத்தில் தோன்றித் தொல் உலகின் பாவ பந்தத்தை நீக்கும் பெரிய ஜீவநதி என்பது, மேற்கூறிய ஜீவஆறு ஆகும்.

23–ஆம் செய்யுளில், திரியேகத்துவத்தின் ஆன்ம லாபங்களை விதந்தோதினர்.

மூன்றுஒ ருத்துவ தெய்விகம்
ஒருங்குடன் முயன்றே
ஆன்ற ரட்சணி யச்செயல்
முடியும்இங்கு; அதுபோல்
வான்த ருக்குலம், வசந்தம், மென்
கால்,நறு வாவி
மூன்றும் நல்கும்ம னேக்கியம்
முயன் றுஅடுப் பவர்க்கே.'

இப்படலம், மனுக்குலம் இழந்த பரதீசின் பரம வாழ்வு, மூன்றொன்றாகிய தெய்வீகத்தின் இரட்சணியம் முடிந்த நிலையில், இரட்சிக்கப்பட்ட மக்களது ஆன்ம லாபத்தைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது,

பரம பதத்தில் வானளாவிய மரங்கள், வசந்தம், மென்காற்று, நறுமணமுள்ள நீர்த்தேக்கம் என்ற மூன்றையும் திரித்துவக் கடவுளை மனமார முயன்று அடுப்பவர்க்கு நல்கும் என்க.

விசுவாசச் செங்கையார அத்திவ்விய தீர்த்தத்தைப் பருகினவனது உள்ளம் பூரித்து, அவன் முகம் திங்களைக்காட்டினும் சிறந்து திகழ்ந்து அவன் ஜீவன் செழித்தது (செ. 37).

இந்த ஜீவ நீரைக் குடித்ததும், அவனது ஆன்ம விடாய் தணிந்தது; தாகந் தீர்ந்தது; சோகம் தீர்ந்தது; நரஜன்ம தோஷம் தீர்ந்தது.

மாகந் தீர்ந்துஇவண் மருவிய ஜீவநீர் மாந்தி
ஆகம் தோய்தலும் ஆத்தும விடாய்தணிந்து, ஆருத்
தாகம் தீர்ந்தது; தீர்ந்தது பசிப்பிணி; சமழ்த்த
சோகம் தீர்ந்தது; தீர்ந்தது நரஜென்ம தோடம்'

நான்கு முறை 'தீர்ந்தது; தீர்ந்தது; தீர்ந்தது; தீர்ந்தது' என்னும் கவிஞரது சொல்லமைப்பும் பண்ணமைப்பும் நம்மை இறும்பூதடையச் செய்கின்றன!

இந்த ஜீவ நீரை அருந்தியவனுடைய சித்தம் அவன் மாந்திய நீர்போலத் தெளிந்தது. அவனது அகப்புறக் கருவிகள் புனிதமாய்ப் பொலிந்தன. சாவும் இல்லை என்பதாயிற்று. அதாவது, அவன் நித்திய ஜீவனைப் பெற்றான். புத்துயிர் பெற்றுத் திருந்தினான் மறைவாணன்.

'இதற்குமேல் சொல்வதற்கில்லை,' என்பார்.

'மற்று யாதினித் தெரிப்பாம்', என்று முடிக்கின்றார் நம் தெய்வக்கவிஞர்.

இந்த உச்சஸ்தாயியில் நின்று தோத்திரம் பல புரிந்து பாடிய தேவாரமே, 'கள்ளமுறுங் கடையேனும்' எனத் தொடங்கும் தேவ பாணியாகும்.

### "சிலுவைமிசைக் கண்டேனே!"

இந்தத் திருப்பதிகத்திற்கும் நாம் மேலே கண்ட "சொல்லொன்றால்" என்ற திருப்பதிகத்திற்குமுள்ள தொடர்பைக் கிருஷ்ணப்பிள்ளையவர்களே கீழ்க்காணும் செய்யுள் வாயிலாகக் காட்டியுள்ளார்கள். ஜீவபுஷ்கரிணிப் படலத்தின் இறுதிச் செய்யுளில், சிலுவை மண்மேட்டில், மயானத்தில்—"கண்ட காட்சியைக் கருதி, அன்பு மலர் அள்ளித் தொகுத்து இனிதமைத்த தேவாரம்" என்று பெயரிட்டு, "குருராயனது திருவடி பிறங்க வைத்தோம்" என்று தோற்றுவாய் செய்துள்ளாரவர்.

இப்பதிகத்தின் பத்துச் செய்யுள்களில் ஒவ்வொன்றின் ஈற்றடியிலும், "சிலுவைமிசைக் கண்டேனே" என்ற மகுடம் வைத்துள்ளார். ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமில்லார்க்கு

இருபதுக்கு மேற்பட்ட திருநாமங்களைச் சொல்லித் தேவார மாலை புனைந்துள்ளார் கவிஞர் பெருமான்.

பரிசுத்தாவியின் பரத்தைத் திருவிருத்தங்களில் பரவிப் போற்றியவர், இறுதிச்செய்யுளில் (36) பரிசுத்தாவியின் திருச் செயல்களில் ஏழைக் காணும்போது, 'சிலுவைமிசைக் கண்டேனே!' என்ற திருப்பதிகத்தின் 9-ஆம் செய்யுளும், 'வேட்கையின் விதும்பல்' என்ற திருப்பதிகத்தின் இறுதிச்செய்யுளும் நினைவுக்கு வருகின்றன.

போற்றித் திருவிருத்தம்: செ. 36:

'கோட்டம்அற்று உளம்தி ருத்திக்
குலவுமெய்ப் பத்தி வித்தி,
நாட்டம்வைத்து அருள்நீர் பாய்ச்சி,
நலிவெலாம் அகற்றி, யாதும்
வாட்டம்இன் றுக ஓம்பி,
வரகதி விளைவித்து, அன்பர்
ஈட்டம்ஆர்ந்து உயத்துய்ப் பிக்கும்
இதயநா யகனே, போற்றி!'

என்பது அச்செய்யுள்,

பரிசுத்தாவியின் ஏழு திருச்செயல்களாவன :

1. உள்ளத்தில் உள்ள கோட்டத்தை (கோணலைத்) திருத்துவது.
2. 'மெய்ப்பத்தி' என்ற விதையை நன்னிலத்தில் வித்திடுவது.
3. 'வித்திட்டது விளைகின்றதா?' என்று கவனித்து, அருளாகிய நீரைப் பாய்ச்சுவது,
4. நலிதலாகிய துயரம் யாவையும் அகற்றுவது.
5. விளைந்த பயிரெதுவும் வாடாமற்காப்பது.
6. நல்லாவியின் நல்வரங்களை (Charismatic gifts) விளைவிப்பது.
7. அடியார் திருக்கூட்டம் வாழச் செய்வது.

'இத்தகு திருச்செயல்களைச் செய்யும் இதய நாயகனே போற்றி!' என்று முடித்தார் இப்போற்றித் திருவிருத்தங்களை, எம் இதய நாயகனே, போற்றி! போற்றி!!

## பரிசுத்தாவியின் ஏழு திருச்செயல்களைப்பற்றிய சில ஆராய்ச்சிக் குறிப்புகள் :

நாம் மேலே 'செயல்கள்' என்னப்பட்டவை, ஆங்கிலத்திலும் வேறு பல மேல் நாட்டு மொழிகளிலும், 'வரங்கள்', பலவரங்கள் என்று பொருள்படும் சொற்றொடர்கள் பயிலப்பட்டுள்ளன. "Manifold gifts of grace". இவற்றை 'ஏழு' என்றதற்குக் காரணம் ஏசாயா 10:12ல் உள்ள. Vulgata என்ற லத்தீன் மொழி பெயர்ப் பேயாகும். இப்போதைய மொழி பெயர்ப்புகளில் ஆறு வரங்களே குறிப்பிடப் பட்டுள்ளன. (பக்கம் 48ஐப் பார்க்க).

கிருஷ்ணப்பிள்ளையின் போற்றித் திருவிருத்தங்களுக்கு அப் போஸ்தல விசுவாசப் பிரமாணமும் நிசேயா விசுவாசப் பிரமாணமும் விவிலியமும் (பைபிளும்) அடிப்படைகளாகும். லுத்தருடைய "அடியார் நெஞ்சைத் தயவாய்" எனத்தொடங்கும் ஞானப்பாட்டும் Common Prayer Book-ல் உள்ள திடப்படுத்தல் ஆராதனை முறையையும் நம் கவிஞர் மனத்திலிருந்திருத்தல் வேண்டும்,

இவற்றோடு அப்பர் தேவாரப்பாட்டு ஒன்றோடு கிருஷ்ணப் பிள்ளையின் இவ்விறுதிச் செய்யுளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவ் விரு செய்யுள்களின் ஒற்றுமை நயமும் உருவக நயமும் இனிது புலப்படும்:

1. அப்பர் தேவாரம்: 76 தனித்திரு நேரிசை, செ 2.

"மெய்ம்மையாம் உழவைச் செய்து, (1)
விருப்பெனும் வித்தை வித்தி, (2)
பொய்மையாய் களையை வாங்கி, (3)
பொறைஎனும் நீரைப் பாய்ச்சி, (4)
தம்மையும் நோக்கிக் கண்டு, (5)
தகவெனும் வேலி யிட்டு, (6)
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையு மன்றே?' (7)

இவை ஏழு செயல்களும், பத்தனது செயல்களாகும். இந்தப் பாடலை மனப்பாடம் செய்து வைத்த கிருஷ்ணப்பிள்ளை, எவ்வாறு ஏழு செயல்களையும் பரிசுத்தாவியின் செயல்களாகவே வற்புறுத்திப் பாடியுள்ளார் என்பது தெளிவுபடுகின்றது.

கிருஷ்ணப்பிள்ளை தேவாரம்:

'கோட்டமற்று உளம்திருத்தி, (1)
குலவுமெய்ப் பத்தி வித்தி, (2)
நாட்டம்வைத்து அருள்நீர் பாய்ச்சி, (3)
நலிவெலாம் அகற்றி, யாதும் (4)
வாட்டம்இன் றுக ஓம்பி, (5)
வரகதி விளைவித்து, அன்பர் (6)
ஈட்டம் ஆர்ந்து உயத்துய்ப் பிக்கும் (7)
இதயநா யகனே, போற்றி!'

உழுத சால் வழியே உழுவதில் விருப்பமில்லாதவர் நம் கிருஷ்ணப்பிள்ளை. தமிழ் இலக்கிய மரபு வழுவாமலும், தம்மைத் தடுத்தாட்கொண்ட இயேசு பெருமானது அருட்சொல்லுக்கு மாறுபடாமலும், "வாழ்க்கை நெறியாயினும், கவிதை நெறியாயினும், காப்பிய நெறியாயினும் நல்லன கொண்டு அல்லன தள்ளும் இயப்பு" பாரதியார் போன்றே அவர்பாலும் உண்டு என்பதை மேலே காட்டினோம். (பக்கம் 2, 73).

இதன் உண்மையை கீழே காட்டுகின்றோம்:

'மெய்மையாம் உழவைச் செய்து' என்ற அப்பர் தேவாரத்துக்கு, மா. வே. நெல்லையப்பப்பிள்ளை ஏழு பக்கங்கள் கொண்ட உரை எழுதியுள்ளார் (தேவார அருள் முறைத் திரட்டு). அதில் இப்பாட்டிற் கூறப்படும் உழவன் தொழில் உருவகத்தைப் பெரிதும் விளக்கி, "சைவ சமயம், செயல்முறைச் சமயம் என்பதும், சைவ சமயத்தில் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கூறப்படும் பேரின்பமானது, எவராலும் தமது முயற்சியால் இம்மையிலேயே பெறப்படும் என்பதுங் கூறப்படுகின்றன" என்றார் (பக்கம் 69). மேலும், இப்பாட்டில் 'சரியை, கிரியை, யோகம், ஞானம்' என்ற நாலு படிகளைச் சிவஞான போதம் 8, 9, 10, 11-ஆம் சூத்திரங்களில் விளக்கியுள்ளார் என்பதையும் நெல்லையப்பப்பிள்ளை சுட்டிக் காட்டியுள்ளார். (பக்கம் 73).

இது நம் கவிஞர் கிருஷ்ணப் பிள்ளைக்கு ஏற்றுக்கொள்ளும் தகைமைத்தன்று. அதற்கு மறுதலையாகத் திருவாசகம் அச்சோப் பதிகத்தில் உள்ள அனுபவ உண்மையே அவருக்கு ஏற்புடைத்து என்பதை இரட்சணிய யாத்திரிகம், இரட்சணிய மனோகரம் என்னும் அவர்தம் நூல்களைத் துருவிப் பயின்றவர் ஒப்புக்கொள்வர்.

கிருஷ்ணபிள்ளைக்கு 'அச்சோப்பதிகமும்' 'அச்சோ' என்ற சொல்லும் மிகமிகப் பிடித்தமானவை. 'பத்தி நெறி அறிவித்து', 'சித்தமலம் அறுவித்து', 'சிவமாக்கி', 'மும்மை மலம் அறுவித்து' 'நம்மையுமோர் பொருளாக்கி அருளியவாறு ஆர் பெறுவர், அச்சோவே' என்பன அவர்தம் சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய அருள்வாக்குகள்.

சாமானிய உழவின் தொழில்களில் ஏழைக் கூறிட்டு, தமது உருவகத்தால் அவற்றைப் பரிசுத்தாவியின் செயல்களாக்கியது நாம் உரை காண எடுத்துக் கொண்ட இச்செய்யுளாகும்.

இதில் மற்றொரு நயங்காண்போம்; தேசிக உழவன் செய்த இவ்வேழு செயல்கள் நமக்கு மட்டும் செய்ததோடமையாது அடியார் கூட்டத்தைக் கூட்டிச் சேர்ப்பதும் பரிசுத்தாவியின் அதி முக்கியச் செயல் என்பதை ஏழாவது எண்ணில் உயர்த்திக் கூறுவதைக் காணக.

'அன்பர் ஈட்டம் ஆர்ந்து உய்யத் துய்ப்பிக்கும் இதய நாயகனே போற்றி!' என்னும் இச்செய்யுளையும் இப்போற்றித் திரு விருத்தங்களையும் முடிக்கின்றார் நம் கவிஞர் பெருமான்.

மாணிக்கவாசகர், திருவாசகம், அற்புதப்பத்து, செ-8-ல்

"ஓசையால் உணர்வார்க்கு உணர்வு அரியவன்,
(எனக்கு) உணர்வு தந்து, என்னை ஒளியாக்கி, உயர்ந்த தன்
பரம்பெருங்கருணையால்
ஆசை தீர்ந்து, அடியார் அடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே,"

என்றார். இங்கு 'உணர்வு தந்து' என்றவர், ஈற்றுச்செய்யுளில் 'அறிவு தந்து, எனை ஆண்டுகொண்டு,' என்றார்.

இத்துணை விளக்கங்களையும், மனத்திற்கொண்டு மார்த்தீன் லுத்தர், பரிசுத்தாவியைப் பற்றி நமது விசுவாசப் பிரமாணத்தின் மூன்றாவது பிரிவை விளக்கியுள்ளதைக் காண்க. (பக்கம் 72).

## II. செய்யுட் பகுதி

1. இரட்சணிய மனோகரம் - 'சொல்லொன்றுல்'
2. விராதன் வரலாறு கூறுதல்
3. கவந்த படலம்
4. போற்றித்திரு விருத்தங்கள்

# II. 1. கிருஷ்ணப்பிள்ளை : இரட்சணிய மனோகரம்-14.

## ஸ்தோத்திரம்

கொளு : பெற்றிடும் திருவருட் பெற்றியைப் புனைந்துஈது
எற்றென வியந்து உளத்து ஏத்துச் சிறந்தன்று

1 சொல்லொன்றால் அனைத்துலகும் தோற்றுவித்தாய்; தோற்றியவை
எல்லாம்இங்கு ஒருபடித்தாய் இன்றளவும் நின்றுஇயல
வல்லாய்நீ; ஓர்வரம்பு வைத்தாய்; உன் வல்லமையைப்
புல்லேனே சொல்லிப் புகழ்ந்துஉரைக்கும் போதத்தேன்.

2 உருட்டுவாய் வையகத்தை; ஒருநொடியில் உலகினொடும்
சுருட்டுவாய் ககனத்தை; சூழ்சுடரை நிறுத்துவாய்
திருட்டுவாய் மனத்தினரைத் திரையாழி இடையமிழ்த்தித்
தெருட்டுவாய் அடியரைஉன் திறம்செப்பற் பாலதோ?

3 ஆக்கவும் வல்லவன்நீ; இங்காக்குவித்து அனவரதம்
காக்கவும் வல்லவன்நீ; கருதுங்கால் கணப்பொழுதில்
போக்கவும் வல்லவன்நீ; பொல்லாங்கு பொறுத்துமுடி
சாய்க்கவரும் திறன்என்னே! தருமத்தின் தனிமூர்த்தி!

4 எப்பொருட்கும் இறைவன்நீ; மகேசனும்நீ; என்றிருக்கச்
செப்பரிய பெருந்துன்பம் உனைச்சேரும் திறன்என்னே!
ஒப்பரிய திரியேகத்து ஒருவாஉன் உள்ளன்பின்
வெப்பம்மிகும் அனல்அன்றோ இவ்வாறு விளைத்ததுவே!

5 நீதியால் மனுநாசம் நேரும்எனப் பிணைநின்று
சாதியால் எந்தாய்!உன் தண்ணளியின் தகையேனும்
ஆதியான்நீ படும்பாடு அத்தனையும் அறிந்துஉள்ளம்
பேதியாது உனைஇங்ஙன் விடுத்ததுவே பெரிதுஅம்மா!

6 வாழ்வாராம் நரப்புலையர்; வந்துநடு நின்றுஒருவர்
தாழ்வாராம் அவர்பொருட்டு, தாதைமுறை தப்பாமல்
போழ்வாராம்; பட்டயத்தால் பொன்றிஒரு பரமசுதன்
வீழ்வாராம்; ஈதுஎன்னை வேந்தன்செங் கோல்முறைமை!

7 வானாடு தொழுதுஇறைஞ்சும் மகிமையெலாம் புறநிறுவிக்
கானாடு மலர்க்குழல்ஓர் கன்னிகருப் பாசயத்துற்று
ஊனாடும் உடலெடுத்துஇங்கு உயிர்ப்பலிநேர்ந்து உதவினைநீ,
ஆ!நாடற்கு எளிதோநின் அன்புநிலை அச்சோவே!

8 மூன்ருயகவடுஉடைய முதுமூலத் தனிப்பொருளே!
தேன்தோயும் மலர்ப்பொழில் வாய்த்திருவுள்ளம் துயர்மேவி
ஊன்தோயும் திருமேனி உதிரவியர்வு உகுத்ததும்போய்,
ஆன்றேய்! இத் தனைதுயரும் வேண்டுமோ? அச்சோவே!

9 பாவிகளில் பிரதான பாவி, கொடும் பாவி, முழுப்
பாவி, துணி கரப்பாவி, பகுத்தறிவின் நின்மூட்ப்
பாவி, விசு வாசமிலாப் பாவி, அதி சண்டாளப்
பாவி, யான் வந்தடைந்தேன், குமரேச! பரிந்தருளே!

10 உசுவாசம் இனிஇலேஎன்று உயிரொடுங்கி உடல்துருத்தி
நிசுவாசம் அகல்காறும் நின்அன்பை நெகிழவிடா
விசுவாசம் எனக்கருளி, வியன்உலக மயல்அளேந்த
பசுவாச வினையைஅகற்றி, பதிஉலகம் பரிந்தருளே!

11 கைம்மாறும் உளகொல்லோ கணிப்பறுநின் பேருதவிக்கு
எம் ஆவி உடல்பொருள் மற்று இவையொரு மூன்றையும்
இன்னே
தம்மான்! நின் அருளுக்கே தக்கணையாச் சமர்ப்பித்தேன்;
வெம்மாய வினை தொலைத்து உன் வீட்டுலகம் கூட்டுகவே!

12 ஆவலொடு அருள்வேத அறநெறியைக் கடைப்பிடித்து,
ஜீவலயம் வரும் எனினும் திருவடிப்பற்று ஒழியாமே,
பூவலயத்து இடை உனக்காய்ப் பொன்றும்ஒரு சான்ருகக்
காவல! நீ அடியேனைக் கடைக்கணிக்கக் கடவாயோ?

## கம்பர்: விராதன் வதைப்படலம்

### செ. 46–60.

கவிக்கூற்று — செ. 46.

46 பொறியின் ஒன்றி, அயல்சென்று திரிபுந்தி உணரா,
நெறியின் ஒன்றி நிலைநின்ற நினைவு உண்ட தனினும்,
பிறிவுஇல் அன்பு நனிபண்டு உடையபெற்றிதனினும்,
அறிவு வந்து உதவ, நம்பனை அறிந்து பகர்வான்:

47 'வேதங்கள் அறைகின்ற உலகுஎங்கும் விரிந்தனஉன்
பாதங்கள் இவைஎன்னின், படிவங்கள் எப்படியோ!
ஓதங்கொள் கடல்அன்றி, ஒன்றினேடு ஒன்றுஒவ்வாப்
பூதங்கள் தொறும்உறைந்தால், அவைஉன்னைப்
பொறுக்குமோ?

48 ‘கடுத்தகராம் கதுவ,நிமிர் கைஎடுத்து, மெய்கலங்கி,
உடுத்ததிசை அனைத்தினும்சென்று ஒலிகொள்ள,
உறுதுயரால்,
“அடுத்தபெருந் தனிமூலத்து அரும்பரமே! பரமே” என்று
எடுத்துஒருவா ரணம்அழைப்ப, நீயோ அன்று ‘ஏன்?’ என்றாய்.

50 ‘துறப்பதே தொழிலாகத் தோன்றினர் தோன்றியக்கால்
மறப்பரோ தம்மைஅது அன்றாகில், மற்றுஅவர்போல்
பிறப்பரோ? எவர்க்கும்தாம் பெற்றபதம் பெறல்அறிதோ!
இறப்பதே, பிறப்பதே, எனும்விளையாட்டு இனிது
உகந்தோய்!

51 ‘பனிநின்ற பெரும்பிறவிக் கடல்கடக்கும் புணைபற்றி,
நனிநின்ற சமயத்தோர் எல்லாரும், ‘நன்று’ என்ன,
தனிநின்ற தத்துவத்தின் தகைமூர்த்தி நீஆகின்,
இனிநின்ற முதல்தேவர் என்கொண்டு என்செய்வாரே?

52 ஓயாத மலர்அயனே முதல்ஆக உளர்ஆகி,
மாயாத வானவர்க்கும், மற்றுஒழிந்த மன்னுயிர்க்கும்.
நீ ஆதிமுதல்தாதை, நெறிமுறையால் ஈன்றுஎடுத்த
தாயாவர் யாவரோ? தருமத்தின் தனிமூர்த்தி!

53 ‘நீயாதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்
ஆயாத சமயமும்நின் அடியவே; அயல்இல்லை;
தீயாரின் ஒளித்தியால்; வெளிநின்றால் தீங்குண்டோ?
வீயாத பெருமாயா! விளையாட்டும் வேண்டுமோ?

54 ‘தாய்தன்னை அறியாத கன்றுஇல்லை; தன்கன்றை
ஆயும் அறியும்; உலகின்தாய் ஆகின் ஐயா!
நீயறிதி எப்பொருளும்; அவைஉன்னை நிலைஅறியா;
மாயைஇது என்கொலோ?—வாராதே வரவல்லாய்!

55 “பன்னல்ஆம்” என்றுஉலகம் பலபலவும் நினையுமால்;
உன்அலால் பெருந்தெய்வம் உயர்ந்துள்ளோர்
ஒழுக்குஅன்றே;
அன்னஊர் திமைமுதலாம் அந்தணர்மாட்டு அருந்தெய்வம்
நின்அலால் இல்லாமை நெறிநின்றார் நினையாரோ?

56 ‘பொருஅரிய சமயங்கள் புகல்கின்ற புத்தேளிர்,
இருவினையும் உடையார்போல், அருந்தவம்நின்று இயற்றுவார்;
திருஉறையும் மணிமார்ப! நினக்குஎன்ன செயற்பால?
ஒருவினையும் இல்லார்போல் உறங்குதியால்— உறங்காதாம்!

60 ‘ஒப்புஇறையும் பெறல்அரிய ஒருவா!முன் உவந்துஉறையும்
அப்புஉறையுள் துறந்து,அடியேன் அருந்தவத்தால் அணுகுதலால்
இப்பிறவிக் கடல்கடந்தேன்; இனிப்பிறவேன், இருவினையும்
துப்புஉறழும் நீர்த்தசுடர்த் திருவடியால், துடைத்தாய்நீ;

## II. 2. விராதன் தன் வரலாறு கூறுதல்

65 ‘அன்ன சாபம் மேவிநான்,
“இன்னல் தீர்வது ஏது?” என
“நின்ன தாளில் நீங்கும்”என்று
உன்னும் எற்கு உணர்த்தினன்;

66 ‘அன்று மூலம். ஆதியாய்!
இன்று காறும் ஏழையேன்
நன்று தீது நாடலேன்;
தின்று தீய தேடினேன்,

67 ‘தூண்ட நின்ற தொன்மைதான்
வேண்ட நின்ற வேதநூல்
பூண்ட நின்பொலம்கொள்தாள்
தீண்ட இன்று தேறினேன்.

68 ‘திறத்தின் வந்த தீதுஎலாம்
அறுத்த உன்னை ஆதனேன்
ஒறுத்த தன்மை, ஊழியாய்!
பொறுத்தி’ என்று போயினன்.

# II. 3. கம்பன் : ஆரணிய காண்டம்- கவந்தன் படலம்

செ. 38-51.

கவந்தன் உருப்பெற்று, விண்ணில் மேவுதல்.

கவிக்கூற்று :

38 ஆளும் நாயகன் அம்கையின் தீண்டியஅதனால்
மூளும் சாபத்தின் முந்திய தீவினை முடித்தான்;
தோளும் வாங்கிய தோமுடை யாக்கையைத் துறவா,
நீளம் நீங்கிய பறவையின், விண்உற நிமிர்ந்தான்.

39 விண்ணில் நின்றவன், 'விரிஞ்சனே முதலினர் யார்க்கும்
கண்ணில் நின்றவன் இவன்' எனக் கருத்துற உணர்ந்தான்;
எண்ணில் அன்னவன் குணங்களை, வாய்திறந்து இசைத்தான்
புண்ணியம்பயக் கின்றுழி அரியதுஎப் பொருளே?

கவந்தன் இராமனைத் துதித்தல்

40 'ஈன்றவனோ எப்பொருளும்? எல்லைதீர் நல்லறத்தின்
சான்றவனோ? தேவர் தவத்தின் தனிப்பயனோ?
மூன்று கவடுஆய் முளைத்து எழுந்த மூலமோ?
தோன்றி, அருவினையேன் சாபத் துயர்துடைத்தாய்!

41 'மூலமே இல்லா முதல்வனே! நீமுயலும்
கோலமோ, யார்க்கும் தெரிவுஅரிய கொள்கையவால்;
ஆலமோ? ஆலின் அடையோ? அடைக்கிடந்த
பாலனோ? வேலைப் பரப்போ? பகராயே!

42 'காண்பார்க்கும் காணப் படுபொருட்கும் கண்ஆகி,
பூண்பாய்போல் நிற்றியால், யாதுஒன்றும் பூணாதாய்;
மாண்பால் உலகை வயிற்றுஒளித்து வாங்குதியால்;
ஆண்பாலோ? பெண்பாலோ? அப்பாலோ? எப்பாலோ?

43 'ஆதிப் பிரமனும்நீ! ஆதிப் பரமனும்நீ!
ஆதி எனும்பொருளுக்கு அப்பால்உண் டாகிலும்நீ!
'சோதிச் சுடர்ப்பிழம்பு நீ!'என்று சொல்லுகின்ற
வேதம் உரைசெய்தால், வெஃகாரோ வேறுஉள்ளார்?

44 'எண்திசையும் திண் சுவரா, ஏழுநிலைவகுத்த
அண்டப் பெருங்கோயிற்கு எல்லாம் அழகுடைய
மண்டலங்கள் மூன்றின்மேல், என்றும் மலராத
புண்டரீக மொட்டின் பொகுட்டே புரை;அம்மா!

45 'மண்பால்-அமரர் வரம்புஆரும் காணாத,
எண்பால் உயர்ந்த, எரிஓங்கும் நல்வேள்வி
உண்பாய்நீ; ஊட்டுவாய் நீ; இரண்டும் ஒக்கின்ற
பண்புஆர் அறிவார்? பகராய், பரமேட்டி!

46 'நிற்கும் நெடுநீத்த நீரில் முளைத்தெழுந்த
மொக்குளே போல, முரண்இற்ற அண்டங்கள்,
ஒக்க உயர்ந்து,உன்னுளே தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு எளிதோ? பரம்பரனே!

47 'நின்செய்கை கண்டு நினைந்தனவோ, நீள்மறைகள்?
உன்செய்கை அன்னவைதாம் சொன்ன ஒழுக்கினவோ?
என்செய்தேன் முன்னம்? மறம்செய்கை எய்தினார்-
பின்செல்வது இயலாப் பெருஞ்செல்வம் நீதந்தாய்!

48 'மாயப் பிறவி மயல்நீக்கி, மாசுஇலாக்
காயத்தை நல்கி, துயரின் கரையேற்றி,
பேய்ஒத்தேன் பேதைப் பிணக்குஅறுத்த எம்பெருமான்!
நாய்ஒத்தேன்; என்ன நலன்இழைத்தேன் நான்?'' என்றான்.

இருவரும் கவந்தனைக் காணலும், ''நீ யார்'' என
இலக்குவன் வினவலும்:

49 என்று,ஆங்கு, இனிதுஇயம்பி, 'இன்று அறியக் கூறுவனேல்
ஒன்றாது, தேவர் உறுதிக்கு' என உன்னா
தன்தாயைக் கண்ணுற்ற கன்றுஅனைய தன்மையனாய்,
நின்றானைக் கண்டான், -நெறிநின்றார் நேர்நின்றான்.

50 'பாராய், இளையவனே! பட்டஇவன், வேறுஓர்
பேராளன் தானாய், ஒளிஓங்கும் பெற்றியனாய்,
நேர்,ஆகாயத்தின் மிசைநிற்கின்றான்; நீஇவனை
ஆராய்! எனஅவனும், 'ஆர்கொலோ நீ?'என்றான்.

கவந்தன் தன் வரலாறு கூறுதல்

51 'சந்தப்பூண் அலங்கல்வீர! தனுஎனும் நாமத் தேன்;ஓர்
கந்தர்ப்பன் சாபத் தால்,இக் கடைப்படு பிறவி கண்டேன்
வந்துற்றேன் மலர்க்கை தீண்ட,முன்னுடை வடிவம் பெற்றேன்;
எந்தைக்கும் எந்தை நீர்;யான் இசைப்பது கேண்மின்' என்றான்.

# II. 4. போற்றித் திருவிருத்தங்கள்

(பூர்வ சுருதி)

கொளு: பூர்வோத் தரமாப் புகலும் சுருதியை
ஓர்புறச் சுருக்கி உளம்பொறித் தன்று.

1 'ஆதி மத்யாந்த ரகிதநிஷ் களங்க
அநாதியங் கடவுளே, போற்றி!
ஜோதியாய் அகண்டா காரமாய் விளங்குந்
தூயசை தன்யமே, போற்றி!
பேதியா நிலைநின்று உலகெலாந் தந்த
பிரணவத் தெய்வமே, போற்றி!
நீதியோடு இரக்க சமரச நெறியை
நிறுவிய நிமலனே, போற்றி!

2 முன்னமோர் நரனால் விளைந்ததீவினையை
முனிந்திடு முதல்வனே, போற்றி!
பின்னர்அவ் வினைதீர்ந்து உலகெலாம் உய்யப்
பேரருள் அளித்தவா, போற்றி!
நன்னெறி இகந்துஓர் பிரளயத்து அமிழ
நயந்திடும் நாதனே, போற்றி!
மன்னுநோ வாவோடு எண்மரைப் புரந்த
மா பெருங் கருணையாய், போற்றி!

3 குழுமியோர் குலையப் பாஷைவே றுக்கிக்
குழப்பிடுங் கொற்றவா, போற்றி!
வழிவழிச் சுருதி முறையாக யாகு
வகுத்தவே தாந்தனே, போற்றி!
விழிஅருள் பரப்பி ஆபிர காமை
விளித்தருள் விமலனே, போற்றி!
கிழமுதிர் பருவத் தொருமகவு அளித்த
கேடிலாக் கிருபையாய், போற்றி!

4 தொண்டனை வலிந்து நகர்ப்புறங் கொடுபோய்த்
துரந்தபே ரருளினாய், போற்றி!
வண்டர்ஊர் எரிவாய் மடுத்திட முனிந்த
மாண்புறு நீதியாய், போற்றி!
கொண்டொரு மகவைப் பலியிடத் துணிந்த
கொற்றவன் தெய்வமே, போற்றி!
பண்டுபோல் மகவுஈந்து அவற்குநல் லாசி
பகர்ந்திடும் பகவனே, போற்றி!

5 உத்தமத் தொழும்பற்கு உரைத்தவாக்கு அனைத்தும்
உவந்துகாத்து அளித்தவா, போற்றி !
பத்தனை அடர்க்கப் பலமிலாது ஒல்கிப்
பரிவுறும் பரமனே, போற்றி !
சித்தம்வைத்து அவனிற் பன்னிரு மரபு
திகழ்ந்திடச் செய்தவா, போற்றி !
வித்தகன் யோசேப் பினைநனி உயர்த்தும்
விட்புல வேந்தனே. போற்றி !

6 கருப்பினில் இஸ்ரேல் மக்களைக் காத்த
கருணையங் கடவுளே' போற்றி !
விருப்பொடுஅங்கு அவரை வாரிதி மணல்போல்
மிகச்செயும் விந்தையாய்' போற்றி !
திருப்பஅரும் அடிமைத் தனத்தினல் அவரைத்
திருத்திய தெய்வமே, போற்றி !
ஒருப்படி ஓல மிடும்அவர்க்கு உருகி
உறுதுயர் களைந்தவா, போற்றி !

7 அருளினல் செங்கோல் அளித்துமோ சேயை
அனுப்பிய அமலனே, போற்றி !
இருள்உறு மனத்தார் இடைப்பல புதுமை
இயற்றிய ஈசனே, போற்றி !
மருள்உறும் இஸ்ரேல் சிறைதவிர்ந்து ஏக
வரந்தரும் வள்ளலே, போற்றி !
தெருள் இலாப் பார்வோன் ஜனத்தொடு மடியச்
செங்கடல் விடுத்தவா போற்றி !

8 மற்றவர் தமக்கு வழித்துணை யாகி
வான் அமு தருளினய், போற்றி !
வெற்றிஅம் கிரிமீது உலகெலாம் நடுங்க
விளங்கிடும் விபுதனே, போற்றி !
நற்றவன் வழியே விதிவிலக்கு அருளி
நயந்திடும் நம்பனே, போற்றி !
கொற்றமொடு இஸ்ரேல் வளமிகு கானன்
குடிபுக அருளினய், போற்றி !

9 மன்னரசு உரிமை முறை நிறுவிக் குடிமை
வளந் தரும் மகிபனே போற்றி !
அன்னை போல் கசிந்தும் தந்தை போல் கடிந்தும்
ஆம் பரிசு உணர்த்தினய், போற்றி !

நன்னெறி இகந்த மன்னரைச் செகுத்து
நலம் புனை நம்பனே, போற்றி!
செந்நெறிச் சென்றூர்க்கு உறு துணையாய
திரியேக தெய்வமே, போற்றி!

10 கோலை நீத்து ஒரு செங்கோல் ஈசாய் மகற்குக்
கொடுத்தருள் கொற்றவா, போற்றி!
சீலமாய் அவன் சொல் நயந்து சங் கீதம்
செவி மடுத்து உகந்தவா, போற்றி!
சாலமோன் தேவாலயம் உவந்து அருளித்
தரித்திடும் தற்பரா, போற்றி!
மேலைநாள் யூத சனம் சிறைப்படவும்
மீளவும் அருளினாய், போற்றி!

11 திருவுளக் குறிப்பைத் தீர்க்கராய் முன்னம்!
தெரிந்திடும் தீர்த்தனே, போற்றி!
வருவர் மேஷிபக் என்று அடியருக்கு இனிய
வாக்கு அமுது ஊட்டினாய், போற்றி!
பொருவரும் ஆன்ம ரக்ஷை மார்க்கத்தைப்
புதுக்கிய புராதனா, போற்றி!
சருவ லோகமும் ஈடேற ஓர் மகவைத்
தந்தருள் தந்தையே, போற்றி!

12 ஆதிமெய்த் திருவாக்காய அகிலகாரணனே, போற்றி!
கோதிலாக் குணங்கள் பூத்த குவலயத்து ஒளியே, போற்றி!
மாது வித்தாகி இந்த மாநிலம் புரப்பல் என்று
தாதைபால் மரிந்து நின்ற தற்பரா, போற்றி! போற்றி!

13 பன்னரு மகிமை யோடு பண்ணவர் பரவி யேத்த
உன்னரும் பரமாகாயத்து உச்சிவீற் றிருந்தாய், போற்றி!
புன்னரர் பொருட்டுப் பாவப் புலைஉலகத்து மேவிக்
கன்னிபால் உதித்தாய், போற்றி! கருணைவாரி தியே
[போற்றி!

14 வறிதுபுல் லணையிற் கந்தை வனைந்தொரு குழவி யாகி
அறிதுயில் அமர்ந்தாய், போற்றி! அலகில்பல் உயிரை
[ஊட்டிச்
செறிதரு பசிக்கு ஆற்றாது தேம்பிநின்று அழுதா, போற்றி
நெறிதிகழ் அறவோர் ஆயர் நேர்ந்தநின் மகனே, போற்றி

15 ஈசனுர் உரைகொண்டு ஏகி எகிப்துநாடு அடைந்துமீண்டு
நாசரேத் தூர் வந்து உற்ற நசரேய நம்பி, போற்றி !
ஆசு அற வளர்ந்து பெற்றோர்க்கு அமைந்திடும் ஐய,
போற்றி!
தேசிக ஞான தீக்ஷை செவ்விதின் அடைந்தாய், போற்றி !

16 அம்முறை விரதம் மேற்கொண்டு ஆரணியத்து மேவிச்
செம்முறை திறம்பாவண்ணம் செபதபம் புரிந்தாய்.
(போற்றி !
மும்முறை முனிந்து பேயை முடுக்கிய முனிவா, போற்றி !
எம்முறை பாட்டுக்கு உள்ளம் இரங்கிய எந்தாய், போற்றி!

17 'வந்தது பரம ராஜ்யம் மனந்திரும் புங்கள்' என்று
முந்துஉபதேசம் செய்த முத்திவித் தகனே, போற்றி!
சிந்தனை கசிந்துஈ ராறு சீஷரை யழைத்து ஆட் கொண்டு
விந்தையாய்ப் பரமஞானம் விளம்பிய குருவே, போற்றி!

18 நள்ளுநரோடு சூழுற்ற நரசமூகங்கட் கெல்லாம்
விள்ளரும் கருணையால் ஓர் வெற்பிடை விளங்கித் தோன்றி
எள்ளரும் சுவிசேஷத்தின் இருஞ்சுடர் விரித்து, அஞ்ஞான
நள்ளிருட் பிழம்பு சீத்த ஞானசூரியனே, போற்றி !

19 மையுறு வஞ்ச நெஞ்ச மாயவல் இயற்கை முற்றும்
கையுறு நெல்லிபோலக் காண்டலால் கதிமைக்கூட்டும்
மெய்யுறு தருமம் யாவும் விழுத்தக விளம்பி ஆங்கு
பொய்யறு சான்றாய் நின்ற புண்ணிய மூர்த்தி—போற்றி!

20 பாரிடம் வியக்கத்தீய பாரிடம் துரந்து நேர்ந்த
கோரவெம் பிணிகூன் மூகை குருடு வன் செவிடு பங்கு
தீர, மெய்நிமிர, பேச, தெரியக்கண் திறக்கச்செல்ல
ஆரருள் அளித்த திவ்ய அற்புத மூர்த்தி —போற்றி!

21 அன்றுஒரு சிறுமி ஏழை அமங்கலை சிறுவன்சேமத்
தோன்றிய தொழும்பன் இன்னோர்க்குருகிக் கண்கலுழி
சிந்தி
பொன்றிய உயிர்வந்து எய்தப் புண்ணியம் புரிந்தாய்,
போற்றி
நன்றிலேன் சிறார்க்கும் ஜீவன் நல்கிய நம்பா, போற்றி!

22 பாழியங் கிரிமீது ஓர்கால் பரிதிபோல் பொலிந்து அன்பர்க்கு
வாழிய வதனச் சேவை வழங்கிய தேவே போற்றி!
ஆழிமீது ஆழி அலையினை அடக்கி ஆங்கே
சூழிரும் புயலைக்காத்த தொல்லை எம்பரனே, போற்றி!

23 விஞ்சிய அகங்காரத்தால் வினவு வேதியர் உள்ளாணி
அஞ்சிவாய் அடைபட்டு (1) ஏக உன்விரி இதழ் அலர்ந்தாய் போற்றி!
வஞ்சரான் மடியுமாறும் (2) மரித்து உயிர்த்து எழும்புமாறும்
செஞ்செவே உரைத்த ஞான தேசிக மூர்த்தி—போற்றி!

(1 'ஏக விவிரி தழலர்ந்தாய்' என்றொரு பாடமும்,
(2 'மறுத்து' என்றொரு பாடமும் உண்டு.)

24 தொண்டரைத் தெருட்டி யாங்கோர் துறுமலர்ச்சோலை நண்ணி,
அண்டர் நாயகன் வெம்சீற்றத்து ஆர் அழல்குளித்தாய், போற்றி!
கொண்டொரு முத்தத்தாலே குறிப்பிடக் கட்டுண்டு ஏகிக்
கண்டகர் முன்றில் நின்று, கடுந்துயர் அடைந்தாய், போற்றி!

25 கைதவர் சினந்து, தூய கமல வாண் முகத்து உமிழ்ந்து,
வைது, முன் மௌலி வேய்ந்து, வார்கொடு புடைப்பமாழ்கி,
வெய்துயிர்த்து, இழிசெஞ்சோரி மெய்யெலாம் புதைப்ப யாங்கள்
உய்திறம் நாடி நின்ற உபசாந்த மூர்த்தி—போற்றி!

26 "முழுதும் நான் அறியேன் என்று மும்முறை மறுத்த சீடன்
அழுதுளம் கசக்கச் செய்யும் அருள் நோக்கம் உடையாய், போற்றி!
பழுதின்மை அறிந்தும் வேந்தன் படுகொலை தீர்ப்புக் கூற
இழுதையர் இகழ நின்ற பேசு நாயகனே, போற்றி!

27 எம்பவச் சும்மைதானே ஈனமாங் குருசுந் தாங்கி
அம்பதம் பெயர்ப்ப மாழ்கி, அணி மறுகு அணைந்து நின்ற
வம்பவிழ் கோதை மாதர் வாய்திறந்து அரற்ற, ஆண்டு ஓர்
வெம்பரம்பு இறுத்தாய், போற்றி, வினைத்தொடர் அறுத்தாய் —போற்றி !

28 வேதனை குணிக்கற் பாற்றே! வெங்குருசு அறைந்து கொல்லும்
பாதகர்க் காய் மன்றாடிப் பரிந்து வாக்கருளிச் சோரர்க்கு
ஆதரம் புரிந்து ஜீவ அரும்பலி அமலர்க்கு ஆக்கிப்
பூதலம் உய்யச் சமாதி பொருந்திய தேவே, போற்றி!

29 பொங்க நீர் உலகுக் கெல்லாம் புண்ணியம் பொலியப், பாவ
சங்கடம் தொலைய, தனியறம் தழைப்ப, வேத
மங்கல ஓசை மல்க, வானவர் மகிழ, மீட்டும்
இங்கு உயிர்த்தெழுந்து இரக்ஷை ஈட்டிய எந்தாய்—போற்றி

30 மல்கிய சீடரோடு வைகல்ஈர் இருபான் வைகி,
நலங்கிளர் வாக்குக் கூறி, நயந்தொரு முகில் மீதேகி,
இலங்கும் ஐங்காயம் காட்டி, எம்பிரான் திரு முன் என்றும்
வலங்கிளர் அணைமீது உற்ற மானுவேலரசே—போற்றி!

31 மூதுல கருக்கு ஜீவ முக்தி சாதனம் உண்டாகக்
கோதறு புனித ஆவிக் கொழுங் கதிர்ப் பிழம்பை நல்கிக்
காதலுற்று அடைந்தோர் தம்மைக் காப்பது கருதி என்றும்
தாதை பாற் பரிந்து பேசும் தயாபரா, போற்றி ! போற்றி!!

பரிசுத்தாவியின் பரம்

32 திரித்துவ பராபரத்தில் திகழ் அதி பரிசுத் தாத்ம
ஒருத்துவ அநாதி நித்ய உயர் மகத்துவமே—போற்றி
விரித்த முன்னீர் முகத்து விந்தையால் விளங்கி மேனாள்
திருத்தகு புவனம் பூத்த தெய்வமே, போற்றி ! போற்றி !

33 மறைவழிப் படரா மாந்தர் வன்மனம் தனிப் போராடி
இறைவழிப் படுத்தும் தூய எம்பெருமானே, போற்றி!
இறைவழிப் பட்டோர்க்கு உள்ளந் தெளிந்த நோவாவைக் கொண்டு
முறைவழிப் போதம் ஈந்த முக்தி ஆரணனே-போற்றி!

34 சுத்தமெய் விசுவாசத்தைத் துரிசு அற விளக்கித் தூய
பத்தன் ஆபிர(கா)மைப் பாதுகாத்து அளித்தாய்-போற்றி!
நித்திய ஜீவ மார்க்க நெறிகடைப் பிடித்து நின்ற
உத்தமர்க்கு யாண்டும் நீங்கா உறுதுணையானாய்ப்-போற்றி!

35 'வலிந்தெனை மருவுக' என்று மருட்டிய வனிதைக்கு உள்ளம்
மெலிந்து அழியாது முன்னோர் விடலையைக் காத்தாய்—போற்றி
மலிந்திடு ராஜ போகம் வரைந்து இனத்தோடு மோசே
நலிந்துறு நிந்தை நச்ச, நயந்து அருள் அளித்தாய் —போற்றி!

36 பரிசுத்தாவியானவரது ஏழு திருச் செயல்கள்.
கோட்டம் அற்று உளம் திருத்திக் (1) குலவுமெய்ப் பத்தி வித்தி (2)
நாட்டம் வைத்து அருள்நீர் பாய்ச்சி, (3) நலிவு எலாம் அகற்றி, (4) யாதும்
வாட்டம் இன்றாக ஓம்பி (5), வரகதி விளைவித்து (6) அன்பர்
ஈட்டம் ஆர்ந்து உய்யத் துய்ப்பிக்கும் (7) இதய நாயகனே போற்றி!

# III-1. விசுவாசப்பிரமாணம்

கிறிஸ்தவர்தம் வார வழிபாட்டு முறையில் நடுமையமாக நிற்பது விசுவாசப் பிரமாணம். அடியார் திருக்கூட்டம் இதைச் சொல்வதும், ஓதுவதும், பாடுவதும் செய்வர். இத்தகு வழிபாட்டில் கலந்து மகிழ்ந்து அனுபவித்த நம்மருட் கவிஞர் இதைக் கவிதை யாக எழுதி நமக்குப் பிதிரார்ச்சித சொத்தாக வைத்துப் போந்தார்.

இம் 36 செய்யுட்களையும் படித்தவர்கள், இவற்றிற்கும் கம்ப ராமாயணத்துக்கும் உள்ள தொடர்பு என்ன என்று ஐயுறுவர். கம்பருக்கும் கிருஷ்ணப்பிள்ளைக்கும் உள்ள தொடர்புண்மையையும் தொடர்பின்மையையும் ஒரு சிறிது காட்டுவோம்.

உலகம் யாவையும் உளவாக்கலும், நிலைபெறுத்தலும் நீக்கலும் என்ற இறைவனது முத்தொழில்களையும் பாடிய கம்பரைப் போன்று, கிருஷ்ணப்பிள்ளையும் ஆக்கவும், காக்கவும், போக்கவும் வல்லவன் நீ என்று முத்தொழிலோனைப் புகழ்ந்து பாடினர் என் பதை மேலே கண்டோம்.

பிறிதோரிடத்தில் :

'சிருஷ்டி ஸ்திதி ரக்ஷணிய செய்கையினில் மூவராய்ச்
சிந்தனையில் ஒருவராகி
இயல் உலகம் யாவும் படைத்து, அளித்து, ஆள்கின்ற
ஈசனே' என்றார் அவர்.

'போக்கல்' என்ற சொல்லை மாற்றி, ஆள்கின்ற'

என்ற சொல்லை இவ்விடத்தில் பொதிந்து வைத்தார் என்பதை உன்னுக.

Karl Barth என்பவருக்கு 50 ஆண்டுகளுக்கு, முன்னரே நம்மருட் கவிஞர் இவ்வாறு பாடிப் போந்தார்.

"Because God has resolved by his free love, before all time, by the exercise of grace, and in order to provide an object and recipient of his grace and a partner for himself, **he creates sustains and rules man and the world** for this reason alone, with this sole aim and for this purpose"

"The goal of creation, ... is to be the theatre of his glory. The meaning is that God is being glorified"

"The theatre of the glory of God" is a quotation from John Calvin. (Quoted from 96f. Heinz Zahrnt's book on "The Question of God.")

திரியேகக் கடவுள் என்ற கிறிஸ்தவக் கொள்கைக்கும் கம்பனது கொள்கைக்கும் வேறுபாடுகள் உள. பிதா, குமாரன், பரிசுத்தாவியானவர் என்ற கொள்கை கம்பரிடமில்லை என்பது கிருஷ்ணப் பிள்ளைக்குத் தெரியும்.

சிவன் உயர்ந்தவன் என்றும், உலகளந்த திருமால் உயர்ந்தவன் என்றும், ஒரு தன்மையராய அவ்விருவர்க்கும் ஏற்றந்தாழ்வுகள் கற்பித்து வாது செய்து திரியும் ஞானமில்லாதவர்க்குச் சென்று புகுவதற்கு அரிய பரகதியின் தன்மைபோல் யாரும் புகுதற்கரிய இயல்புடையது அருந்ததி மலை என்ற கம்பர் பாடிய செய்யுளைக் காண்க!

'அரன் அதிகன், உலகளந்த அரி அதிகன்''
  என்றுரைக்கும் அறிவு இலோர்க்குப்
பரகதிசென்று அடைவு அரிய பரிசே போல்
  புகல் அரிய பண்பிற்று ஆமால்.''
"அரியும் சிவனும் ஒண்ணு;
அதையறியார் வாயில் மண்ணு."

என்னும் பழமொழியை விளக்குவது இவ்வடிகளின் கருத்தென்றார் உரையாசிரியர். (A. Uni. Publication).

கம்பராமாயணத்தை அறியாத பேராசிரியர் R. C. ZAEHNER கூறுவதைக் காண்க.

"Brahmanism can absorb almost anything into itself, and so the rivalry between Siva and Vishnu was resolved by the creation of a largely artificial **Trimurthy** or 'One God in three forms", Brhama-Vishnu-Siva, a trinity in which Brhama is the creator Bishnu the preserver, and Siva the destroyer. This compromise, however, is without effect on popular religion, and Hindus are to this day predominantly worshippers of either Vishnu or Siva or Siva's **Sahkthi**, each of which their devotees regard as the Supreme Being." (R. C. Zaehner, Hinduism, P.113).

சீராமனை 'ஏகபத்தினி விரதன்' என்பார் பெரியோர். அதைப் போலவே, கம்பரும் 'ஏக தெய்வ விரதன்' என்றே கொள்ளப்பட வேண்டும். இவ்வுண்மைக்கு அவரது கடவுள் வாழ்த்துப் பாடலே சான்றாகும். 'அவர் தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே, என்றாரவர்.

விளையாட்டுடையாரை ஒருமையில் குறிப்பிட்டு, 'அன்னவர்க்கே' என்றதில் பிரிநிலை ஏகாரத்தைப் பயன்படுத்தியதைக் காண்க.

# III-2. கிருஷ்ணப்பிள்ளைக்கும் கம்பருக்கும் உள்ள ஒற்றுமை.

இவர்கள் இருவரும் மருத நன்னிலத்தில் தோன்றி, வளர்ந்தவர்கள். இருவரும் வேளாளர்கள். வேளாண்மைத் தொழிலின் நுட்பங்களை அறிந்தவர்கள். கடவுளின் தொழில்களை மக்களுக்கு எடுத்துக் காட்டுவான் வேண்டி, உழவுத் தொழிலை வைத்து அதைத் தத்தம் காப்பியத்தில் உருவகமாகப் பயன்படுத்தியவர்கள்.

இவ் உழவுத் தொழில் உருவகத்தை அவர்கள் பாடல்களில் படலங்களில் வைத்த வைப்பு முறையிலும் ஒற்றுமையைக் காணலாகும்.

முப்பத்தாறு போற்றித் திருவிருத்தங்களின் ஈற்றுச் செய்யுளில், கிருஷ்ணப்பிள்ளை இதை ஒரு முற்றுருவமாக வைத்துள்ளார். இவ்வாறே கம்பரும், பாலகாண்டம், அரசியற் படலத்தின் ஈற்றுச் செய்யுளில்

வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக்காத்து, இனிது அரசு செய்கிருன்'

தசரதன் என்ருர் கம்பர்.

நகரப் படலத்தின் ஈற்றுச் செய்யுளிலும் இவ்வாறே உழவுத் தொழிலை உருவகித்து, அதன் ஏழு பருவங்களை ஒன்றன்பின் ஒன்ருக வைத்துள்ள நயத்தைக் காண்க: 'ஏகம் முதல் கல்வி முளைத்து (1) எழுந்து (2) எண்ணில் கேள்வி ஆகும் முதல் திண்பணை போக்கி (3) அருந்தவத்தின் சாகம் தழைத்து (4) அன்பு அரும்பி (5) தருமம் மலர்ந்தது (6) போகங்கனி ஒன்று பழுத்தது (7) போலும் அன்றே."

கிருஷ்ணப்பிள்ளை பரிசுத்தாவியைப் பற்றிப் பாடிய ஐந்து செய்யுட்களில் உள்ளதோர் நுண்பொருளைக் காண்போம். செ. 32 அவர் திரித்துவத்தில் ஒருத்தர். உலகப்படைப்புக்குக் காரணர்.

செ. 33-இல் நோவாவையும், செ. 34-இல் ஆபிரகாமையும், செ. 35-இல் மோசேயையும் குறிப்பிட்டது, பரிசுத்தாவி மக்கள் சமூக வரலாற்றைத் (History of individual men, society and Israel) தொகுத்துக் கூறி, செ. 36-இல் தாவர வர்க்கத்தின் தோற்றம், வளர்ச்சி, ஈட்டம், தேட்டம், அறுப்பு முதலியவற்றை முற்றுருவகமாக்கிக் காட்டினுர்.

The poetic genius of Krishna Pillai has brought out the harmonious relation of the history of individuals and communities and the nation of Israel and the world of non-sentient things in the botanical world, and he has maintained that both these realms are created sustained or maintained and ruled by the Trinitarian God.

It is wonderful that in these verses there is a theological penetration into the biological phenomenon of life: life of the plant life and the human fife. The Nicene- Constantinople creed (of 325 and 381 A D (describes the Holy Spirit: "First as the giver of life, then the Spirit, unity with the Father and the Son expressed in several different ways ; finally we are told that the Spirit spoke through the prophets. The first of these definitions is the basic one: the Holy Spirit is the origin of life, and in fact the origin of all life" W. Pannenberg, The Apostles, Creed, P. 32

ஞானோபதேசச் சிற்றுரையை நாம் படிக்கும்போது, பரிசுத்தாவியின் திருச்செயல்கள் யாவை என்பது வெளிப்படும். (லுத்தர்)

1 நான் என் சுய புத்தியினாலாவது சக்தியினாலாவது (பத்தியினாலாவது) என் ஆண்டவர் இயேசுவை விசுவாசிக்கவும், அவரிடம் வந்து சேரவும் முடியவே முடியாது. (அறிவினர் அருளினர்'.)

"ஓசையால் உணர்வார்க்கு உணர்வு அரியவன்".

2. ஆகையால் பரிசுத்தாவியானவர் சுவிசேஷத்தைக் கொண்டு என்னை (1) வரவழைத்து (2) தம்முடைய வரங்களால் (ஏழுவரங்கள்) என்னைப் பிரகாசிப்பித்து ('ஒளிதந்து') (3) மெய் விசுவாசத்தில் என்னைப் பரிசுத்தனாக்கி ('வரகதி விளைவித்து') (4) காப்பாற்றி ('யாதும் வாட்டம் இன்றாக ஓம்பி') வருகிறாரென்று விசுவாசிக்கிறேன்.

3. இவ்வாறே அவர் பூமியில் உள்ள முழுத்திருச்சபையையும், (அடியசர் திருக்கூட்டத்தையும் (1) வரவழைத்து, (2) கூட்டிச் சேர்த்து ('அன்பர் ஈட்டம் ஆர்ந்துய்யத்துய்க்கும்'), (3) பிரகாசிப்பித்து (ஒளிதந்து, 'உள்ளொளி பெருக்கி'), (4) பரிசுத்தம் ஆக்கி ('சிவமாக்கி', 'வரகதி விளைவித்து' (5) ஒரே மெய்விசுவாசத்தில் ('in the unity of faith and the bond of peace') இயேசு கிறிஸ்துவினிடத்தில் ('உடல் இடமாகக் கொண்டவரிடத்தில்') காப்பாற்றி ('ஓம்பி') வருகிறார்.

4. அவர் இந்தத் திருச்சபையில் எனக்கும் திருஅடியார் கூட்டம் யாவர்க்கும், தினந்தோறும் எல்லாப் பாவங்களையும்

கிருபையாய் மன்னித்து ('சித்தமலம் அறிவித்து', 'மும்மை மலம் அறிவித்து') கடைசி நாளில் (ஊழியின் இறுதியில்) என்னையும் இறந்துபோன யாவரையும் எழுப்பி, எனக்கும் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிற யாவர்க்கும் நித்திய ஜீவனைக் கொடுப்பார்."

"இது உண்மையான வார்த்தை".

## உழவுத் தொழில் உருவகம்

பொன்னி வள நாட்டில் தோன்றிய கம்பருக்கும் தாமிரவரணி வளம்படுத்தும் திருநெல்வேலி நாட்டில் பிறந்து வளர்ந்த கிருஷ்ணப்பிள்ளைக்கும் உழவுத் தொழிலின் பல்வேறு தொழில் நுட்பங்கள் இயல்பாகவே தெரிந்துள்ளன என்பது தேற்றம். 'உழுதவன் கணக்குப் போட்டால் உழக்குக்கூடத் தேருது' என்ற பழமொழியும் அதன் பொருளும் அவர்கள் அறிந்திருந்தனர். நாடோடி வழக்கத்தின் பயனாக மட்டுமன்றி, இலக்கண நூலார் வகுத்த எண்வகைக் காரணங்களையும் புரிந்து கொண்டவர்கள் அவர்கள்.

உலகத்தொழில் நிகழ்ச்சிகளுக்கு இவ் எண்வகைக் காரணங் களாக இயைந்து விளங்குபவன் இறைவன் ஒருவனே என்ற கருத் துள்ள கம்பனது செய்யுளை கிருஷ்ணப்பிள்ளை அறிந்திருந்தார். அவ் எட்டாவன: இறைவன் முதற்காரணன். இனி, செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள், இன்னதற்கு இது பயன் என்னும் எட்டென்பார் இலக்கண நூலார். இக் கருத்துச் செறிந்த கம்பன் செய்யுளைக் கீழே காண்க.

காலமும் கருவியும் இடனும் ஆய், கடைப்
பால் அமை பயனும் ஆய், பயன் துய்ப்பவனுமாய்.
சீலமும் அவைதரும் திருவுமாய், உளன்...
ஆலமும் வித்தும் ஒத்து அடங்கும் ஆண்மையான்.(இரணி. பட)

கிருஷ்ணப்பிள்ளை, கம்பர் மொழிந்த பொருளேயன்றி, அவர் மொழியையும் பொன்னே போல் போற்றி, தம்மை இயக்கிய பரிசுத்தாவியின் தொழிலாகத் தம் போற்றித்திரு விருத்தங்களின் ஈற்றுச் செய்யுளில் அற்புதமாக அமைத்த திறன் என்னே என்று நாம் வியந்து மகிழ்வோமாக.

உழவுத்தொழிலை உருவகித்து, சொல்லேருழவன், வில்லே ருழவன், ஞான உழவன், தேசிக உழவன் என்றெல்லாம் கவிஞர்கள் பயன்படுத்தியுள்ளதைத் தெய்வத்தமிழ் இலக்கியத் திலும் விவிலியத்திலும், கம்பரிடத்திலும், கிருஷ்ணப்பிள்ளை யிடத்திலும் பரக்கக்காணலாம். இவ்வுண்மையைப் பிறிதோரிடத் தில் காண்க. (பக். 51-54).

தூயபவுலார் இவ்வுண்மையைக் கண்டுகாட்டியதை இவண் எடுத்துக்காட்டுவதோடு (I கொரிந்தியர் 3 : 5-9) இவ்வாராய்ச்சி உரையை இனிது முடிப்போம்.

*'நீங்கள் கடவுள் பண்படுத்கும் பண்ணை' என்று கொரிந்து பட்டணத்தில் வதிந்தும் வாழ்ந்தும் வந்த அடியார் திருக்கூட்டச் சிறப்பை விதந்தோதினர் திருப்பவுலார்.

---

இச் சுலோகம் கிரேக்கு மொழியிலிருந்து ஆங்கிலத்தில் கீழ்க் கண்டவாறு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

1 "you are God's husbandry". King James Version.
2 "you are God's garden". New English Version.
3 "you are God's farm". Jerusalem Bible.

Thereby God is 1. a husbandman, 2. a gardener 3. a farmer.

இச் சுலோகத்தைத் தமிழாக்கம் செய்த எல்லா மொழி பெயர்ப்பாளர்களும், நீங்கள் கடவுள் பண்படுத்தும் பண்ணை என்றே கூறியுள்ளனர் என்பது நம் மதிப்பிற்குரியது,

'பண்ணை' என்பதற்குக் கிரேக்க மூலச்சொல்: Georges' இதுவே ஆங்கிலத்தில் 'Georges' என்னப்படுகிறது. மலையாள மொழியில் 'கிருஷி' என்றும், இந்தியில் 'கிஸ்ஸான்' என்றும் சொல்லப்படுகிறது.

தூய பவுலார் இவ்வுண்மையைக் கண்டு காட்டியதை இவண் எடுத்துக்காட்டுவதோடு இக்கட்டுரையை இனிதே முடிப்போம்.

"நான் நட்டேன்,
அப்பொல்லோ நீர் பாய்ச்சினர்,
ஆனல், விளையச் செய்தவர் கடவுளே,
ஆகையால்,
நடுகிறவனுக்கும் பெருமை இல்லை,
நீர் பாய்ச்சுகிறவனுக்கும் பெருமை இல்லை,
விளையச் செய்கிற கடவுளுக்கே பெருமை
∴ ∴ ∴
நீங்கள் கடவுள் பண்படுத்தும் பண்ணை.
நாங்கள் கடவுட் சேவையில் உடன் ஊழியர்."
(I கொரிந்தியர் 3 : 5–9).

இக்கட்டுரையை எழுதிய எனக்கும் பெருமை இல்லை. கடவுட் பண்ணையில் நானோர் கூலியாள்.

விளையச் செய்கிற கடவுளுக்கே பெருமை !

S. W. சவரிமுத்து,
கொச்சி, 16-7-77,

# IV-1. "சொல்லொன்ருல்"

## திருவருட்பேற்றை வியந்த பாடல்கள்

விரிவுரைக்கென்று நாம் எடுத்துக்கொண்ட பத்துச் செய்யுள்களும் முதுபெரும்புலவர் கிருஷ்ணப்பிள்ளை அவர்கள் பாடிய 'இரட்சணிய யாத்திரிகம் என்ற பெருங்காப்பியத்தில், சுமை நீங்கு படலத்தின் ஒரு பகுதியாகும். இப்பகுதிக்கு முன் வந்துள்ள கதைத் தொடர்ச்சியை ஓரளவு சுருங்கக் கூறுவோம் :

வீடு பேற்றுக்கு அவாவிய மோட்சப் பிரயாணி ஒருவன் பாவச் சுமையைச் சுமந்து செல்கின்ருன். வழியில் ஒருமலை. மலையின் உச்சியில் ஒரு மரம். அதில் ஒருவர் தொங்குகிருர். அவர் யார்? ஏன் இவ்வாறு தொங்குகிருர்? என்றறியப் பிரயாணி மலைமீதேறு கிருன்; சிலுவைக் காட்சியைக் கண்ணுறுகின்ருன். அதைக் காணக் காண அவன் சுமந்த சுமை இலேசாகிறது; சுமை விழுந்து விடுகிறது. மலையின் உச்சியிலிருந்து கீழே புரண்டோடுகிறது. தன் நெஞ்சத்தை அழுத்தி அமுக்கியிருந்த பாவச் சுமை போன இடம் தெரியாமற் போய்விடுகிறது. பாவச் சுமை நீங்கவே மறைவாணன் நெஞ்சகம் குளிர்ச்சியும் மகிழ்ச்சியும் அடைகிறது. தளர்ந்த உடல் நிமிர்ந்து நிற்கிறது 'நின்மலக் கடவுளின் செல்வ மகன் ஈட்டிய புண்ணியத்தாலே உய்ந்தேன்!' என்ற அவன் மனம் உருகிற்று. அவன் வாய் திறந்து புண்ணியரின் அன்பை உணர்ந்து தெக்குருகிப் பாடிய பாடல்களே இப்பதிகமாகும்.

'சொல்லொன்ருல்' என்று முதற்செய்யுள் தொடங்கிய காரணத்தால் இப்பதிகத்திற்கு இச்சொற்களைக் கொண்டே இப் பெயரிட்டோம்.

இதே பதிகம், ஆசிரியரது 'இரட்சணிய மனோகரம்' என்ற தொகுப்பு நூலில் 14-ஆம் பகுதியாகக் காணப்படுகிறது. ஆங்கு இதன் பொருளைக் கீழ்க்கண்ட 'கொளு'வாக ஆசிரியர் பாடியுள்ளார்.

'பெற்றிடும் திருவருட் பெற்றியைப் புனைந்து, ஈது
எற்று?' என வியந்து உள்ளத்து ஏத்துச் சிறந்த இன்று!

தான் பெற்ற திருவருளின் பெருமையை வரைந்து 'இவ் வருள் எவ்வாறு?' என்று வியந்து உள்ளத்தில் போற்றிய சிறப்பை இப்பதிகம் காட்டிற்றென்ருர்.

### செய்யுள் 1—3

இறைவர் முத்தொழிலாற்ற வல்லவர். ஆக்கல், காத்தல் அழித்தல் என்பன இம்மூன்றும். இத்தகு வல்லவராகிய நீவிர்

இப்பொல்லாங்கு பொறுத்து முடி சாய்க்க வரும் திறன் என்னே என்று முதல் மூன்று செய்யுள்கள் வியந்து கூறுகின்றன.

1. சொல்ஒன்ருல் அனைத்துலகும் தோற்றுவித்தாய்; தோற்றியவை
எல்லாமிங் கொரு படித்தாய் இன்றளவும் நின்றியல
வல்லாய்நீ, ஓர் வரம்பு வைத்தாய்; உன் வல்லமையைப்
புல்லேனே சொல்லிப் புகழ்த்துரைக்கும் போதத்தேன்!

நீ உலகம் அனைத்தையும் ஒரு சொல்லால் தோற்றுவித்தாய் (படைத்தாய்); இவ்வாறு படைக்கப்பட்ட யாவும் உன் ஆணையின் படி இன்றளவும் நிற்கவும் இயங்கவும செய்ய வல்லவன் நீ. எனினும் உன் வல்லமைக்கோர் வரம்பு வைத்தாய்; இவ்வரம்பு வைத்ததும் நினது வல்லமையன்ரோ? இத்தகு வல்லமையைப் புகழ்ந்துரைக்கும் அறிவும் ஆற்றலும் புல்லனைய எனக்குண்டோ? என்று தம்மை இகழ்ந்தும் படைக்குங் கருத்தாவைப் புகழ்ந்தும் வியந்தும் பாடியுள்ளார் ஆசிரியர்.

'சொல்லொன்ருல் அனைத்துலகும் தோற்றுவித்தாய்'.

இதன் விளக்கத்தை ஆசிரியரே 'நினைத்தது முடிக்கின்ற' என்ற பாடலில், 'எப்பொருளும் இன்றியே சுத்த சூனியமாய் இருந்த அக்காலத்தில் அனைத்துலகும் விவித பேதங்களாய சர அரசங்களும் படைத்த முதலே' என்று குறித்துள்ளார். இதற்கு ஆதாரம். ஆதியாகமம் 1:2 (Creation out of nothing, Creatio ex nihilo).

"கடவுள் ஒளி உண்டாகக் கடவதென்ருர்; ஒளி உண்டாயிற்று," ஆதி. 1:3.

'வானுதி அண்ட பகிரண்டப் பரப்பெல்லாம் வாக்கொன்ருல் அமைத்தாய்'

தோற்றியவை யெல்லாம் இங்கு ஒரு படித்தாய் நின்று
இயல வல்லாய் நீ

சங்கீதம் 104: ஒளி, வானம், மேகம், நீர், காற்று, மலை, பனி, பள்ளத்தாக்கு, கடல், விலங்கு, பறவை, சூரியன், சந்திரன், இரவு, பகல், ஐம்பூதம், நிலம், நீர், நெருப்பு, உயிர் (காற்று), விசும்பு,

இவற்றை இயலச் செய்கின்ற, இயக்குகின்ற காரணத்தால் இவற்றை கடவுளுக்கு இயவுள்' என்பது ஒரு பெயர் என்க.

"உன் வல்லமைக்கு ஓர் வரம்பு வைத்தாய்"

முடிவிலாற்றல் என்பது இறைவனுடைய எண்குணங்களுள் ஒன்று, 'நினைத்தது முடிக்கின்ற சருவ சாமர்த்தியமுடையவர்,

என்று கிருஷ்ணப்பிள்ளை பாடியுள்ளார். (Almighty, Omnipotent) வரம்பிலாற்றலுடையவர் தம் வல்லமைக்கோர் வரம்பு வைத்தார். தாமே அவ்வரம்பைத் தமக்கு வைத்துக்கொண்டார். (God's self-limitation of his power). இது ஏன்? "செப்பரிய பெருந்துன்பம் உனைச் சேரும் திறன் என்னே!" என்றும் வினவி, விடையளிக்கின்றார் (செ. 3, 4) ஆசிரியர்.

'பேரருளுடைமை' என்பது இறைவனது எண்குணங்களுள் மற்றொன்றாகும். 'முடிவிலாற்றலுடைமைக்கும் பேரருளுடைமைக்கும் இடையே ஏற்பட்ட போராட்டமே சிலுவைப்பாடுகள்' என்றார் பிறிதோரிடத்தில் :

கறுத்திடில் உலகம் எல்லாம் கவிழ்ந்தழிந்து ஒழியுமேனும் பொறுத்தனர் இரிந்தார் தாம்சொல் புத்துரைக் கொருசான்றாக; ஒறுத்திடும் மதுகைமிக்க உரன்உடையாளன் உள்ளம்பொறுத்திடும் பொறையைஅன்றே பொறை என்பர் புலமை மிக்கோர் என்றார். ஈற்றடிகள் இரண்டின் கருத்தை நாலடியார் பாடலில் காண்க:

இளையான் அடக்கம் அடக்கம்; கிளைபொருள்
இல்லான் கொடைப்பயன் எல்லாம்
ஒறுக்கும் மதுகைமிக்க உரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை'

மதுகை உரன்-தவ வலிமையின் மிகுதி.

பேரருளுடைமை காரணமாகத் தமது வல்லமைக்கு ஒரு வரம்பு வைத்தவருடைய பேரருட்பெற்றியைப் புகழ்ந்து பாடிய பாடல்கள் இவை என்றறிக.

2. உருட்டுவாய் வையகத்தை; ஒருநொடியில் உலகினொடும்
சுருட்டுவாய் ககனத்தை; சூழ்சுடரை நிறுத்துவாய்;
திருட்டுவாய் மனத்தினரைத் திரையாழி இடைஅமிழ்த்தி;
தெருட்டுவாய் அடியரை; உன்திறன் செப்பற் பாலதோ?

வையகம் - உலகம்; ககனம் - ஆகாயம்; சூழ் சுடர் - சூரியன்; திரையாழி - செங்கடல்; தெருட்டுவாய் - அறிவுறுத்துவாய்; செப்பல் - சொல்லுதல்.

உலகத்தை உருட்டுவாய்; சுழன்று வரச் செய்வாய்; உலகத்தோடும் ஆகாயத்தை ஒரு நொடியில் சுருட்டுவாய்; சூரியனைத் தன் ஓட்டத்தினின்றும் நிறுத்துவாய்; திருட்டுவாயும் மனமுமுள்ள எகிப்தியப் பார்வோனையும் அவன் சேனையையும் செங்கடலில் அமிழ்த்துவாய்; உன்னடியார் இஸ்ரவேலரைக் கரை சேர்த்துக் காப்பாய். இத்தகு நின் திறமை செப்பற்பாலதோ?

சூழ்சுடரை நிறுத்துவாய் : நியாயாதிபதி 10:12
செங்கடல் வரலாறு: சங்கீதம் 106.8-12.

இயற்கைப் பொருள்களை இயக்க வல்ல இயவுள் அவர் என்பதை முதலிரண்டு அடிகளும் மனிதர் வரலாற்றை (Lord of Nature) இயக்க வல்லவரும் (Lord of history, Lord of saving history) குறிப்பிடுகின்றன அடைந்தாரைக் காப்பவரும் அல்லாதாரை அழிப்பவரும் அவரே என்பதை ஈற்றடிகள் இரண்டும் கூறுகின்றன.

3 ஆக்கவும்வல் லவனீ; இங்கு ஆக்குவித்து அனவரதம்
காக்கவும்வல் லவனீ; பின் கருதுங்கால் கணப்பொழுதில்
போக்கவும்வல் லவனீ;இப் பொல்லாங்கு பொறுத்துமுடி
சாய்க்கவருந் திறன் என்னே! தருமத்தின் தனிமூர்த்தி.

ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் செய்ய வல்லவர் கடவுள்.

ஆக்கல் - படைத்தல்; காத்தல் - இரட்சித்தல்; போக்கல் - அழித்தல்.

ஆக்கலும் அழித்தலும் கடவுளுக்கு எளியவை. சொல்லொன்றால் அனைத்துலகையும் தோற்றுவித்தார்; உலகத்தை ஒரு நொடியில் சுருட்டுவார்; கணப்பொழுதில் போக்குவார். ஆனால், காக்கும் தொழில் கடவுளுக்கு எளிதன்று. எனவே அப்பொல்லாங்கு பொறுத்து முடிசாய்க்க வருவதும் திறமையுடைய செயல், இது வியப்புக்குரிய செயல் என்பதால், 'என்னே' என்றார்.

'தருமத்தின் தனி மூர்த்தி'

இது அறத்தின் தனி உருவம். இவ்வுருவுக்கு ஒப்புமில்லை, உயர்வுமில்லை என்பதால் 'தனி மூர்த்தி' என்றார்.

'ஆக்குவை மாயை யாவும்; நொடியினில் அவற்றைமாள
நீக்குவை; நீக்கம் இல்லாத நினைப்பொடு மறப்பு மாற்றிப்
போக்கொடு வரவு மின்றிப் புனிதநல் லருள் ஆனந்தம்
தாக்கவும் செய்வாய் அன்றோ! சச்சிதா னந்த வாழ்வே!'

என்ற தாயுமானவர் பாடல் கிருஷ்ணப்பிள்ளையவர்களின் நினைவிலிருந்திருத்தல் கூடும்.

'ஆக்குபவை' என்றதனால் படைத்தலும், 'நீக்குபவை' என்றதனால் அழித்தலும், 'ஆனந்தம் தாக்குபவை' என்றதனால் அருளலும் இறைவன் செயல்களென்றார்.

'நொடியினில் அவற்றை மாள நீக்குவை' என்பதை 'ஒரு நொடியில் உலகினெடுங் ககனத்தைச் சுருட்டுவாய்' என்றும், 'பின் கருதுங்கால் கணப்பொழுதில் போக்கவும் வல்லவன் நீ' என்றும் கிருஷ்ணப்பிள்ளை இரண்டாம் மூன்றும் செய்யுள்களில் பாடியுள்ளார்.

4. எப்பொருட்கும் இறைநீ மகேசனும்நீ என்றிருக்கச்
செப்பரிய பெருந்துன்பம் உனைச்சேரும் திறன் என்னே!
ஒப்பரிய திரியேகத்து ஒருவா ! உன் உள்ளன்பின்
வெப்பமிகும் அனல் அன்றோ இவ்வாறு விளைத்ததுவே!

இறைவர் — எப்பொருளிலும் நீக்கமற நிறைந்துள்ளவர்; மகேசன் — மகா + ஈசன்; ஈசன் — ஐசுவரியம் உள்ளவர்; பெருஞ்செல்வர். திரியேகத்து ஒருவர் — தந்தை, சுதன், புனித ஆவி என்ற மூவருள் ஒருவராகிய இயேசுவே.

முந்திய செய்யுளில் 'பொல்லாங்கு பொறுத்து முடிசாய்க்கும் திறன் என்னே!' என்று வினவியவர், இச் செய்யுளில் 'செப்பரிய பெருந்துன்பம் உன்னைச் சேரும் திறன் என்னே!' என்று மீண்டும் வினவுகின்றனர் ஆசிரியப்பக்தர்.

'நீர் இறைவர், மகேசர், திரித்துவத்துள் ஒருவர். இவ்வாறெல்லாம் பொருள்சேர் புகழ்புரிந்து உள்ளனர் புலவர். அவ்வாறிருக்கச் சொல்லுதற்கரிய பெருந்துன்பம் உம்மை மட்டும் சேருவதற்குக் காரணந்தானென்ன' என்று வினவுகின்றார் முதலிரண்டு அடிகளில். இவ்வினவுக்கு விடையுமளிக்கின்றார் ஈற்றடிகள் இரண்டிலும் :

ஒப்பரிய திரியேகத் தொருவாவுன் னுள்ளன்பின்
வெப்பமிகும் கனல் அன்றோ இவ்வாறு விளைத்ததுவே

'உலக மக்கள் மீது நீவிர் வைத்துள்ள அன்பின் கனலன்றோ உம்மை இவ்வாறு பாடு படவும், செப்பரிய பெருந்துன்பம் அனுபவிக்கவும், பொல்லாங்கு பொறுத்து முடிசாய்க்கவும் செய்தது?' என்றார்.

'தண்ணளியின் தகைமை'

5 நீதியால் மனுநாசம் நேருமெனப் பிணை நின்று
சாதியால் எந்தாய்! உன் தண்ணளியின் தகையேதும்
ஆதியான் நீ படும்பாடு அத்தனையும் அறிந்துள்ளம்
பேதியாது உன்னை இங்ஙன் விடுத்ததுவே பெரிதம்மா!

எம் தந்தையீர்! உமதுமனித அவதாரத்தால்மனிதஇனத்துக்கு நீர் தந்தையானீர். ஆதியிலிருந்த காரணத்தால் நீர் ஆதிமூலம்

எனப்பட்டீர். கடவுளின் நீதியால் மனுக்குலம் நாசம் அடையும் என்று எண்ணி, மக்களுக்காகப் பிணை நின்றீர். நீர் படும் பாடுகள் அத்தனையையும் அறிந்திருந்தும் உள்ளம் சலியாமல் நீர் பாடு பட உம்மை விட்டுவிட்டது. இதற்கெல்லாம் உமது தண்ணளியின் தகைமையே காரணம். இது மிகப் பெரிது!' என்று அவரது கருணைப் பெருக்கை வியந்து பாடுகின்றார் ஆசிரியர்.

தண்ணளி—குளிர்ந்த கருணை.
அம்மா —வியப்பைக் குறிக்கும் இடைச் சொல்.

தாதை முறை வேந்தன் செங்கோல் முறை

6. வாழ்வாராம் நரப்புலையர்! வந்து நடுநின்றுஒருவர்
தாழ்வாராம் அவர்பொருட்டு! தாதை முறை தப்பாமல்
போழ்வாராம் பட்டயத்தால்! பொன்றியொரு பரமசுதன்
வீழ்வாராம்! ஈதென்னை வேந்தன் செங் கோன் முறைமை!

நரப்புலையர்-பாவத்தினால் தாழ்ந்து போன மனிதர். தாதை-தந்தை. வேந்தன் முறை-அரசன் செய்யும் நீதி முறை. தண்ணளியின் தகைமை-அருள் முறை. உள்ளம் பேதியாது-மனம் சலியாமல். போழ்தல்-பிளத்தல், ஊடுருவுதல், அழித்தல். போழ்வாராம்-அழிப்பாராம்.

நரப் புலையர் வாழ்வாராம்! - தங்கள் மறச் செயல்களால் மக்கள் புலையரானார்கள்; கடவுளது கோபத்திற்கு ஆளாகி அழிக்கப் படுவார்கள். கடவுளது நீதியால் மனுக்குலத்திற்கு அழிவு நேரும் என்று அவர்களுக்காகப் பிணை நின்றார் என்று மேம்பாட்டில் கூறிய கவினர், நரப்புலையர் அழிந்துபடாமல் வாழவேண்டுமென்று அவர் பொருட்டுக் கடவுள் அரசனின் தண்டனைக்கும் மக்களின் அழிவுக்கும் இடையில் வந்து நின்று அரசு தண்டனைக்குத் தாழ்ந்து போவாராம்! அழிக்கப்பட வேண்டிய மக்களைக் காக்க (இரட்சிக்க) வேண்டுமென்பது கடவுள் தந்தையின் கருணை முறை, தாதை முறை.

இத்தகு தந்தையின் கருணை முறைக்குத் தண்ணளியின் தகைமைக்கு வழுவேற்படாதவாறு மைந்தர் நடு நின்று அழிந்து படுவாராம்! பட்டயத்தால் வெட்டப்பட்டு அழிந்து வீழ்வாராம் பரமசுதர்! இதுதான் வேந்தன் செங்கோல் முறைமையோ?

"இது முறையோ, இது தகுமோ, இது தருமந்தானோ!" என்று வியந்து பாடுகின்றார் பத்தர் ராமலிங்கர்.

நடுநின்று: "கடவுள் ஒருவரே; கடவுளுக்கும் மக்களுக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே. இவர் மனிதனான இயேசு கிறிஸ்துவே."
(1 தீமோத்தேயு 2:5)

கடவுளுக்கு இரு லட்சணங்கள் உண்டு; அவர் தந்தையார்; அதே சமயத்தில் அவர் அரசர். அரசத்தந்தையார், இராஜபிதா (Royal Father, Fatherly King.)

அவர் அரசர் என்ற வகையில் நாம் குடிகள் (பிரஜைகள்); அவர் தந்தையார் என்ற வகையில் நாம் மக்கள் (பிள்ளைகள்). எனவே, தந்தையரசருக்கு, நாம் குடிமக்கள்; குடிகளும் மக்களு மானவர்கள்.

நாம் 'பரலோகத்திலிருக்கும் எங்கள் தந்தையே' என்றும் 'உமது அரசு வருக' என்றும் விண்ணப்பிக்கும்போது அவரைத் தந்தையாராகவும் அரசராகவும் கருதி அழைக்கிறோம்.

கடவுள் என்ற அரசத் தந்தையார் உள்ளத்தில் ஒரு பிரச்சினை தோன்றியது. தாம் படைத்த தம் மக்கள் தம்மை எதிர்த்து தாம் விதித்த அரசகட்டளைகளைக் கைக்கொள்ளாதுபோன காரணத்தால் அரச நீதியின்படி அவர்களைத் தண்டித்தல் வேண்டும். மறு பக்கத்தில், அதே சமயத்தில், குற்றஞ்செய்தவர் தாம் அன்பு கூறும் தம் மக்களேயாவர். மக்களைக் காப்பது தந்தையின் இன்பக் கடன். எனினும், குற்றஞ்செய்த மக்களைக் காப்பது துன்பக் கடன். துன்பமே ஆயினும், கடனாற்ற வேண்டும். இதற்குத் தந்தையாராகிய அரசர் ஒரு வழிகோலினர். அது அருள் வழி.

குற்றமொன்றும் செய்யாத தம் செல்வக் குமரர், குற்றம் செய்த மக்களின் பாவ நீக்கத்திற்கென்று தமக்கும் அவர்களுக்கும் இடையில் 'நடுநின்று', பிணைபட்டு, பாடுபட்டு, மரித்து, உயிர்த்தெழ வேண்டுமென்று திட்டமிட்டார் தந்தையார். இதுதான் தாதை முறை, தந்தை முறை, அருள்முறை. இத்தகு தாதைமுறை தப்பாமல், பிழையாமல், வழுவாமல், பரமசுதர் பட்டயத்தால் பொன்றிப் போழ்வாராம்; பட்டயம் அவர் நெஞ்சில் ஊடுருவிச் செல்ல அவர் வீழ்வாராம், உயிர் விடுவாராம். இதுதான் கடவுள் வேந்தனது செங்கோல் முறைமையோ என்று வியந்தார் பாவ நீக்கம் பெற்ற பத்தர்.

திருவருட்பேற்றைப் புனைந்து போற்றி இது எற்றுக்கு என்று வியந்தார் என்க.

'தாதை முறை, வேந்தன் செங்கோல் முறை'

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும்" குறள்.388

"தான் முறை செய்து பிறர் நலியாமல் காத்தலையும் செய்யும் அரசன், பிறப்பான் மகனே ஆயினும், செயலான் மக்கட்குக் கடவுள் என்று மக்களில் பிரித்து உயர்த்து வைக்கப்படும்." பரி. உரை.

காப்பாற்றும் - காப்பு ஆற்றும், காத்தல் தொழிலை ஆற்றும்.

முறை - அறநூலும் நீதி நூலும் சொல்லும் நெறி. Moral and judicial Codes.

குறளாசிரியர் உலக அரசனது பண்பைக் கூறினர். பிறவா யாக்கைப் பெரியோனாகிய கடவுளே அறநூலுக்கும் நீதிக்கும் ஊற்றும் உறைவிடமுமானவர். கிருஷ்ணப்பிள்ளை. வேந்தன் செங்கோல் முறைமையை உணர்ந்தவர். கடவுளின் தாதை முறையைக் கிறிஸ்தியேசு மூலமாகப் புதிதாக உணர்ந்தார். நீதி யால் மனு நாசம் அடையாமற் காத்தற்பொருட்டு எம்பெருமான் 'பிணை நின்று', 'நடு நின்று' பொல்லாங்கு பொறுத்தார். கடவுள் வேந்தர் கிறிஸ்துவைப் பணயம் வைத்த 'அருள் முறை' யைப் புகழ்ந்தும் வியந்தும் பாடுகின்றார் பத்தர்.

நின்னன்பு நிலை

7. வானாடு தொழுதிறைஞ்சு மகிமையெலாம் புறநிறுவி,
காடைு மலர்க்குழலோர் கன்னிகருப் பாசயத்துற்று
ஊனாடு உடல் எடுத்து, இங்குஉயிர்ப்பலிநேர்ந்து உதவினைநீ
ஆ, நாடற்கெளி தோநின் அன்புநிலை, அச்சோவே!

வானாடு—வான நாட்டிலுள்ள மக்கள், தெய்வ கணங்கள் (ஆகு பெயர்) புற நிறுவி—ஒரு புறத்தில் நிறுத்தி வைத்து விட்டு. கானாடு—கானகம் நிறைந்த நாடு, காட்டுப்புறம், பட்டிக் காடு — பெத்லகேம். கருப்பாசயம் — கருப்பை. உயிர்ப்பலி நேர்ந்து—உயிரைப் பலியாகக் கொடுத்து, அச்சோ—ஆச்சரியம்.

வான நாட்டினராகிய தெய்வ கணங்கள் உம்மைத் தொழுது கெஞ்சி மன்றாடுகின்ற மகிமை எல்லாவற்றையும் ஒரு புறத்தில் நிற்க வைத்து விட்டது ஒரு தியாகம், காட்டிலுள்ள கன்னியின் கருப்பைக்குள் புகுந்து ஊனுடல் எடுத்து இகலோகம் வந்தது ஒரு தியாகம். மக்கள் ஈடேற்றத்துக்கென்று உமதுயிரைக் கொடுத்து அவர்கள் உயிரைக் காத்தது ஒரு தியாகம். ஆ! நினது அன்பு நிலையை அறிவது எளிதோ? இது ஆச்சரியம் என்றவாறு.

'திருமேனி உதிரவெயர்வை உகுத்தது.'

8. மூன்றாய கவடுடைய முது மூலத் தனிப்பொருளே!
தேன் தோயும் மலர்ப் பொழில்வாய்த் திருவுள்ளம் துயர்மேவி
ஊன்தோயும் திருமேனி உதிரவியர் உகுத்ததும்போய்
ஆன்றோய்! இத் தனை துயரும் வேண்டுமோ, அச்சோவே!

'பரம தந்தை, திருமகன். புனித ஆவி என்ற மூன்று கவடுகளுள்ள ஆதிமூலத் தனிப்பொருளே! ஆன்றோய், தேன்

சிந்தும் மலர் நிறைந்த கெத்செமெனே என்றதோட்டத்தில், பெரிய வியாழனன்றிரவில் உமதுள்ளத்தில் துயர் மேவிற்று. ஊனோடு உடலெடுத்த உமது திருமேனியினின்று வெறும் வியர்வைத் துளிகளல்ல, இரத்த வியர்வைத் துளிகள் வெளி வந்தன. எம்மைக் காக்க இத்தனை துயரும் வேண்டியிருந்தனவோ?' என்று வினவி வியந்தார் என்றவாறு.

'அச்சோவே': திருவாசகம் 52-ஆம் அச்சோப்பதிகத்தின் ஈற்றுச்சொல்.

பாவி யான் வந்தடைந்தேன்

9. பாவிகளில் பிரதான பாவி, கொடும் பாவி, முழுப்
பாவி, துணி கரப்பாவி, பகுத்தறிவினின் மூடப்
பாவி, விசு வாசமிலாப் பாவி, அதிசண்டாளப்
பாவி, யான் வந்தடைந்தேன். குமரேச! பரிந்தருளே.

"பாவிகளைக் காக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார்" என்ற வார்த்தை உண்மையும் எல்லா அங்கீகரிப்புக்கும் தகுதி யுமானது; அவர்களில் பிரதான பாவி நான்" தீமோத்தேயு 1:15.

புனித பவுலாரின் பாவ அறிக்கையையும் விசுவாசத்தையும் மனத்தில் வைத்துக் கவிஞர் மேற்கண்ட பாடல்களையும், சிறப்பாக இப்பாடலையும் பாடினர் என்க.

தக்கணையாச் சமர்ப்பித்தேன்

10. கைம்மாறும் உளகொல்லோ! கணிப்பறுநின் பேருதவிக்கு,
எம்மாவி உடல்பொருள் மற்றி வையொருமூன் றையுமின்னே
தம்மான் நின் அருளுக்கே தக்கணையாச் சமர்ப்பித்தேன்.
வெம்மாய வினைதொலைத்துஉன் வீட்டுலகங் கூட்டுகவே,

'சிற்றுயிர்க்குற்ற துணையாய் நின்று நீவிர் செய்த பேருதவி களைக் கணக்கிடுதல் கூடுமோ? எம்மாவிக்குருகி உமது உடல் பொருள் ஆவி மூன்றையும் சிலுவையில் எழக்குக் கொடுத்தீரே! இதற்கு நான் செய்யக் கூடிய கைமாறும் உண்டோ? என் உடல் பொருள், ஆவி இம் மூன்றையும் எம்பெருமானாகிய உமதருளுக்கே தட்சணையாகச் சமர்ப்பித்தேன். அப்பா, என் வேண்டுதல் கேட்டு அருள் புரிதல் வேண்டும். என்னைப் பீடித்துள்ள வெம்பாவ வினை களைத் தொலைத்தருளுதல் வேண்டும். இப்பாவ நீக்கத்தோடு நீவிரும் உம் அடியவரும் சேர்ந்து இன்பமாக வாழும் உமது வீட்டுலகத்தில் என்னையும் கூட்டிச் சேர்த்து அருளுதல் வேண்டும் என்றார். பாவ நீக்கமும் அருட்பேறும் வேண்டினாரென்க.

# IV. 2 இயேசு நகர் நீங்கு காட்சி

இயேசு எருசலேம் நகரை விட்டு நீங்குகின்ற காட்சியை ஆசிரியர் கிருஷ்ணப்பிள்ளை அவலச்சுவை ததும்ப இருபத்தாறு செய்யுட்களில், இரக்ஷணிய சரிதப் படலம் 314—339-இல் உள்ளங்கனிந்து பாடுகிறார். அவற்றிற்கு லூக்கா சுவிசேஷம் 23-ஆம் அதிகாரம் 27 முதல் 31 வசனங்கள் வேத ஆதாரமாகும். இராமபிரான் அயோத்தி நகர் விட்டு நீங்கிக் காட்டுக்குச் செல்வதை கண்ட நகர மக்கள் எவ்வாறு புலம்பினார்கள் என்று நகர் நீங்கு காண்டத்தில் கம்பர் வருணிப்பதை மனத்தில் வைத்து இச்செய்யுட்களை இயற்றியுள்ளார் போலும் ஆசிரியர் கிருஷ்ணப்பிள்ளை.

கல்வாரி நோக்கினார் என்ற இதழில் இதன் முற்சரிதம் விரித்துரைக்கப் பட்டது.

1 கையயர்ந்து வாய்புலர்ந்து கண்ணிருண்டு காதடைத்து
வெய்யசி லுவைசு மந்தலசி மெய்வருந்தித
துய்யதி ருவடிகள் சோர்ந்து நடை தள்ளாடி
அய்யன் மறுகூடு வரக்கண்டா ரணிநகரார்.

மறுகு என்பது வீதி. எருசலேம் வீதி வழியே (Via Dolorosa) அய்யன் இயேசு வருவதை அழகு பொருந்திய நகர மக்கள் கண்டனர். அவர்களுக்கு இயேசு எத்தகைய காட்சியளித்தார் என்பதை இச்செய்யுள் காட்டுகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளும் தத்தம் செயலழிந்தன. வேறு வேறு காலங்களில் தனித்தனியே அநுபவிக்கப்படுவனவற்றை ஒரே காலத்தில் இயேசு அநுபவித்தார். மெய், வாய், கண், செவி, சொல்லப்பட்டன, மூக்கு இனம்பற்றி வருவிக்கப்பட்டது.

2 கல்லியல்வன் னெஞ்சவஞ்சக் கண்ணிலாப் பாதகராம்
புல்லியர்ர யன்றியிந்தப் பொல்லாங்கு போந்தமைகண்
டெல்லவ ருந்தத்த முயிர்க்கிறுதி யேய்ந்தனபோல்
அல்லலு ழந்தாக்கை நிலைதளர்ந்தார். 315

இந்தப் பொல்லாப்பு நிகழ்ந்ததைக் கண்டவரெல்லாரும் அல்லற்பட்டார், அலமந்தார், உடல்நிலை தளர்ந்தார். இயேசுவின் உயிர்க்கிறுதி வந்தது தம்முயிர்க்கிறுதி வந்ததுபோல் அல்லற்பட்டார். இது பிறன்கட்டோன்றிய இளிவரல்.

இவ்வுணர்ச்சி யில்லாதாரை முன்னிரண்டடிகள் காட்டா நின்றன. இந்தப் பொல்லாப்பைச் செய்தவர்களுடைய நெஞ்சம் கல்லின் தன்மைபோல் வன்மையுடையது. அவர்கள் வஞ்சகர்: கண்ணோட்டமில்லாத பாதகர், புல்லியர். இவர்கள் தவிர மற்றவரெல்லாரும் இந்தக் காட்சியைக் கண்டு துன்புற்றனர்.

3 மாதருக்கு ளாசிபெற்ற மங்கலையா மன்னைமரி
காதலனுக் கோவிக்க திநேர்ந்த தென்றுமன
வேதனைப் பட்டாற்ருது மேல்லியலார் தாங்குமுமி
வீதியிரு மருங்கு மொய்த்தார் வாய் விட்டழுது 316

மரிமகன் என்பதைக் கவி விரித்துக் காட்டுகிருர். கருவுற்ற மரியாளைக் கண்ணுற்ற எலிசபெத்துப் பரவசமடைந்து “பெண்களுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள், உன் கர்ப்பத்தின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்டது” என்று வாயார வாழ்த்தினுள். லூக்கா 1.42. அத்துணை ஆசிபெற்றவள் மகனுக்கோ இக்கதி வந்தது என்று எருசலேமிலுள்ள பெண்கள் மன வேதனைப் பட்டனர். இதனை ஆற்ருது வாய்விட்டழுதனர். மனம் நிறைந்தால் வாய் பேசும். மனம் உடைந்தால் வாய் அழும்.

இச் செய்யுளோடு கீழ்க்கண்ட கம்பராமாயணச் செய்யுளை ஒப்பு நோக்குக.

திருஅரை சுற்றிய சீரை யாடையன்
பொருவருந் துயரினன் தொடர்ந்து போகின்ருன்
இருவரைப் பயந்தவன் ஈன்ற கான் முனை
ஒருவனே இவற்கிவ்வூ ருறவென்ருர் சிலர்.

நகர் நீங்குபடலம், 193

இவ்வூரில் இலக்குமணன் ஒருவனே தானும் மரவுரி தரித்துப் பெருந் துயரத்தோடு இந்த இராமனைத் தொடர்ந்து செல்லுகின்ருன், இவனுக்கு இவ்வொருவன் தானே உற்ற உறவினன் என்று சிலர் வருந்தின ரென்க.

இராமனும் இலக்குமணனும் மரவுரியை ஆடையாக அணிந்து காட்டுக்குச் செல்லுகின்றனர். இயேசு சிலுவை சுமந்து கொலைக் களம் செல்லுகின்ருர். சுமித்திரை பெற்ற இலக்குமணன் என்று சொல்லாமல்; ‘இருவரை பயந்தவள் ஈன்ற கான்முனை ஒருவனே’ என்று விரித்துக் கூறுகிருர் கம்பர். மரிமகன் என்றது “மாதருக்குள் ஆசிபெற்ற மங்கலையாம் அன்னைமரி காதலனுக்கோ” என்ருர் கிருஷ்ணப்பிள்ளை.

4. காந்தண்ம லர்செங்க மலமல ரைப்புடைப்பப்
பூந்தண்க ருங்குவளைப் போதுநீர் முத்துகுப்பத்
தேந்தளவு தொக்கநறுஞ் சேதாம்ப லையலர்த்தி
மாந்தண்ட லைக்குயிலின் மென்மொழியார் மாழ்கினர்.317

இச்செய்யுள் முதற் பார்வையில் அறிதற்கெளிதன்று. பொருள் தெரிந்தால் செய்யுள் நயம் இன்பம் தரும், காந்தள் மலர்—கைகள், செங்கமல மலரைப்புடைப்ப—கண் மலரை அறைய, பூந்தண் கருங்குவளைப் போது—அழகிய குளிர்ந்த கருமையான குவளைப் பூ போன்ற கண்கள், நீர்முத்துகுப்ப—முத்துப்போன்ற கண்ணீர் சிந்த, தேந்தளவு தொக்கநறுஞ் சேதாம்பலையலர்த்தி—மணம் நிறைந்த முல்லைப் பூப் போன்ற வாயைத் திறந்து, குயில் போன்ற மென்மொழியுடைய மாதர் துக்கத்தில் மயங்கினர்.

கைகளால் கண்களை அறைந்து கண்ணீர் சிந்தி வாய்திறந்து மென்மொழியார் அழுதார். குயிலைக் காட்டிலும் மெல்லிய மொழியுடைய மாதர் இன்பமாய்ப் பாடாமல் வேதனைப்பட்டாற்ருது அழுதார்.

பின் வரும் கம்ப ராமாயணப் பாடலை ஒப்பு நோக்குக :

ஐயனைக்க ாண்டலு மணங்க னர்கள்தா
மொய்யி ளந் தளிர்களான் முளரி மேல்விழு
மையலின் மதுகரங் கடியு மாறெனக்
கைகளின் மதர் நெடுங் கண்க ளெற்றினர்

—நகர் நீங்குபடலம் 173

தாமரை மலரின் மேல் வந்து மொய்க்கின்ற மயக்கத்தையுடைய வண்டுகளை இளந்தளிர்களால் கடிந்து ஓட்டுந் தன்மை போல மாதர் தமது கைளால் களிப்பினையுடைய தமது நீண்ட கண்களை அறைந்தார்கள். கண்களாற் பார்க்க மனம் பொருமையால் மகளிர் இவ்வாறு செய்தனரென்க. தளிர் கைக்கும் முளரி முகத்திற்கும், மதுகரம் கண்களுக்கும் உவமை.

5. தீயடைந்த வல்லியெனத் தேம்பிச் செயலழிந்தும்
மாயும்பகை யின்ருய்ம றுகுற்றுயிர் பதைப்பப்
போயடைந்த தெம்மருங்கும் பொற்பெருச லேநகரத்
தாயிழையார் வாய்விட்ட மூதகு ரலோசை 318

அழகிய எருசலேம் நகரத்து மாதர் நெருப்புப் பற்றின வல்லிக் கொடி போலத் தேம்பினர், செயலற்றனர் : உயிர் வாழ

மனமற்றவர் என்னும் உயிர் நீக்குவகை யறியாமல் கலங்கினர், பதைத்தனர். அவர்கள் வாய்விட்டு அழுத குரலோசை எல்லாத் திசைகளிலும் போய்ச் சேர்ந்தது.

ஒத்துப்பார்க்க :

விழுந்தார் சிலர், சிலர் விம்மி விம்மி
எழுந்தார் சிலர், முகத் திழிகண் ணீரிடை
யழுந்தினர் சிலர், பதைத் தளக வல்லியின்
கொழுந்தெரி யுற்றெனத் துயரங் கூர்கின்ருர்.
—நகர் நீங்குபடலம் 17 5

விண்ணுற்ற தெம்மருங்கும் விட்டழுத குரலோசை
—நகர் நீங்குபடலம் 97.

6 கண்டார்ப தைத்தார்க லுழ்ந்தார்க ரைந்தழுதார்
கொண்டார்து ணுக்கங்கொ தித்தார்க டுவிடத்தை
உண்டார்போ லேங்கியு யங்கிநெ டிதுயிர்த்துத்
திண்டாடி நின்றினைய செப்புவா ராயினர்.

இயேசு நகர் நீங்கு காட்சியைக் கண்டார்கள், பதைத்தார்கள், அழுதார்கள், நடுக்கம் கொண்டார்கள். கொடிய விடத்தை அருந்தியவர்கள் போல் கொதித்தார்கள், ஏங்கி வருந்திப் பெருமூச்சு விட்டுத் திண்டாடிப் பின்வருமாறு சொல்லத் தொடங்கினுர்கள்.

லூக்கா சுவிசேஷம் 23. 27-இல் இயேசுவுக்காகப் பெண்கள் மாரடித்தனர், புலம்பினர், அழுதுகொண்டே அவர் பின் சென்றனர் என்று சொல்லியிருக்கிறது. அவர்கள் பேசினுர்கள் என்ரே, என்னென்ன சொல்லியழுதார்கள் என்ரே சொல்லப் படவில்லை. இரக்ஷணிய சரிதம் 320 முதல் 330 மட்டும் உள்ள கவிகளுக்கு நேரிட்ட வேத ஆதாரமில்லை. புலம்பல் என்பதை அழுகை கலந்த சொற்கள் எனப் பொருள் கொண்டு அவர்கள் கூறியவற்றைச் செய்யுட்களாகப் பாடினுரென்க. இவை ஒப்பாரியாகவல்ல, வரிப் பாட்டு வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

இப்பகுதியில் பாவிகம் என்னும் காவியப் பண்பு மிளிர்வதைக் கண்டு இன்புறுக. நல்லான் ஒருவனுக்கு நீதி வழங்காமல் நெறி கடந்தவற்றை வலியார் செய்யும்போது அதற்காற்ருமல் அல்லல் பட்டவர் வாய்விட்டுச் சொல்லும் சொற்கள் அவலம் நிறைந்தவை, கூரிய அரம் போல்வனவுமாகும்.

இத்தகைய கருத்துக்களும் மேற்பட்ட தமிழ் மக்கள் பண்புகளும் திருக்குறள், நல்வழி, நான்மணிக்கடிகை, மூதுரை, நன்

னெறி, வாக்குண்டாம் போன்ற நீதிநூல்களில் மலிந்து கிடக்கின்றன. அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் அகப்பை முகந்து பின்வரும் பாக்களில் நயம்பட ஆசிரியர் அமைத்திருப்பது இன்புறத் தக்கது. எருசலேம் மாதர் மட்டுமல்ல அயோத்தி மாதரும்கூட இவ்வாறு மனங்கொதித்தழுதார் என்றால் முழு உலகமும் இவ்வாற்றாமையில் மூழ்கித் தவிக்கிற தென்பதை ஆசிரியர் குறிப்பா லுணர்த்துகிறார்.

7 ஆ! ஆ! இ தென்ன? அறவும்அநி யாயமென்பார் *
சாவாஅ றமோத லேசாய்ந்தி றுவதென்பார்
மூவாமு தல்வன்மு னியாத தென்? என்பார்
ஓவாது ழலெம்மு யிர்க்கொழிவின் றோ? வென்பார். 320

இயேசுவைக் கொல்வது முழுவதும் அநியாயம். அழியாத அறமும் அழிந்து படுகிறதே. அழிந்து படாத கடவுள் இதைப் பார்த்துக் கோபங் கொள்ளாமலிருப்பதேன்? ஒழியாமல் உழன்று கொண்டிருக்கும் எம்முயிர்க்கு ஒழிவில்லையோ? இக்காட்சி கண்ட பின் நாம் ஏன் இன்னம் உயிரோடிருக்க வேண்டும் என்றார்.

—நகர் நீங்குபடலம்—See below*

8. இம்மைந்த னுவிக்கி றுதிவரக் கண்டுமரி
அம்மை யுயிர்வாழா ளவனிமி சையென்பார்
செம்மைதிறம் பாத்தூய தேவசி னந்திருகி
மும்மையு லகும்மு டியுங்க ணத்தென்பார். 321

தன் மைந்தன் உயிரிழக்கப் போகிறான் என்பதைக் கண்டு மரியாள் உலகத்தில் உயிர் வாழாள்-கடவுளுடைய பரிசுத்த கோபம் பொங்கி மூவுலகங்களையும் அழிக்கும் நேரம் வந்து விட்டது என்பார்.

9. மாண்டாரு யிரளிக்கு மாமருந்தை வேரோடு
கீண்டெறி வாரிந்தக் கெடுதோஷி களென்பார்
கீண்டெறி வாரிந்தக் கெடுதோஷி களெனினும்
மீண்டுமு ளைக்கவொரு வேளைவரா தோவென்பார். 322

இறந்தவருக்கு உயிரளிக்கும் அரிய மருந்துச் செடியை வேரோடு களைந்து எறிவார் இந்தக் கெடுதோஷிகள். இவர்கள் பிடுங்கி எறிந்தாலும் அச்செடி மீண்டும் முளைத்துத் தளிர்க்கும் காலம் வராதோ? என்பார்.

---

*நகர் நீங்கு படலம் 99.

ஆ! ஆ! அரசனருளிலனே யாமென்பார்
காவா வறத்தையினிக் கைவிடுவோம் யாமென்பார்.

1. செடியை வேரோடு பிடுங்குவது சிலுவை மரணத்தையும், அது மீண்டும் முளைப்பது உயிர்த்தெழுதலையும் குறிக்கும். ஓகாரம் ஐயத்தைக் குறிப்பினும் மீண்டு முளைத்தலும் கூடும் என்ற ஒரு நம்பிக்கையையும் அல்லது விருப்பத்தையும் குறிக்கலாம்.

2. "மாண்டாரு யிரளிக்கும் மா மருந்து" "உடன்பிறவா மாமலையிலுள்ள மருந்தே பிணி தீர்க்கும், அம்மருந்து போல் வாரு முண்டு" என்னும் வாக்குண்டாம் செய்யுளை நினைப்பூட்டுகிறது. கல்வாரி மலையில் சிலுவையிலறையுண்ட இயேசு என்னும் மருந்தே பாவப் பிணி தீர்க்கும் என்க.

3. மீண்டு முளைக்க வேளை வராதோ? ஞாயிறு காலையில் அவ்வேளை வந்தது என்ற விடை எருசலேம் மாதருக்கு வெள்ளிக் கிழமை தெரியாது.

10 புன்றொழிலர்க் கஞ்சிநடுப் போற்றுதுஊர் பொங்கியழ
மன்றோஞ் சொல்லியுயிர் வாழ்வதுவோ வாழ்வென் பார்
மன்றோரஞ் சொன்னேன்மனைபாழாய் வன்குடியும்
பொன்றிஎருக்கலரும் பொய்யாதிதுவென்பார். 323

நீதி விசாரணை செய்கிறவன் நடுநிலைமை வகித்து நீதிவழங்க வேண்டும். இதை உயர்வாகக் கருதாமல் இழிதொழில் செய்கிறவர்கள் மனம்போல் நடக்காவிட்டால் அவர்கள் தனக்கு இடையூறு செய்வாரென்று பயந்து நியாய சபையில் ஒரு பக்கம் சாய்ந்துவிட்டால் ஊர் மக்கள் கோபத்தினுல் பொங்கி, ஆற்றுமையினுல் அழுவர். இப்படிப் பிழைப்பதா வாழ்வு? அல்ல என்பர். அநியாயத் தீர்ப்பு சொன்னவன் அறிவது மட்டுமல்ல. அவன் வீட்டாரும் இனத்தாரும் பாழாவர். அவன் குடியிருந்த வீடு பாழ்மனை யாவதினுல் அங்கு எருக்கம் பூ பூக்கும் என்ற நல்வழிப் பாட்டின் கருத்துப் பொய்யாகாது என்பர்.

அந்தப்பாட்டு பின்வருமாறு:

வேதாளம் சேருமே, வெள்ளெருக்குப் பூக்குமே,
பாதாள மூலி படருமே- மூதேவி
சென்றிருந்து வாழ்வளே, சேடன் குடிபுகுமே,
மன்றோரஞ் சொன்னார் மனை. நல்வழி. 23.

இச்செய்யுளின் ஈற்றடியையும் முதலடியின் இரண்டாம் பகுதியையும் ஆசிரியர் தம் செய்யுளில் இருமுறை பயன்படுத்தியிருப்பதும் காண்க.

11 நள்ளி நர ஜீவரக்ஷை நல்கவரு ஞானகுரு
வள்ளலுக்கு வன் கொலையும் மாபாதகம் புரிந்த
கள்ளனுக்குக் காவல்வி டுதலையும் கட்டுரைத்து
விள்ளுவதோ நீதிபுரி வேந்தருக்குச் சீலமென்பார். 324

இச்செய்யுளும் இதற்கு முன்னும் பின்னுமுள்ள செய்யுட்களும் (10, 11, 12) ரோம நீதிபதி பொந்தியுபிலாத்து இயேசுவை விசாரணை செய்ததையும். அவன் பொது மக்கள் கூக்குரலுக்கு அஞ்சிக் கொலைபாதகத்தினிமித்தம் காவலில் வைக்கப்பட்டிருந்த பரபாசை விடுதலை செய்து இயேசுவை அவர்கள் இஷ்டத்துக்கு ஒப்புக்கொடுத்ததையும் கேட்டிருந்த எருசலேம் மாதர் கூறுவதாக ஆசிரியர் வரைகின்றார். லூக்கா. 23.13-25 பார்க்க.

மனுக்குலத்தின் பேரில் நட்பு கொண்டு அவர்களுக்கு உயிர்ப்பிச்சையளிக்க வேண்டுமென்ற ஞானகுரு வள்ளலுக்குக் கொடிய கொலைத் தீர்ப்பும், கொலை களவு காமம் முதலிய பெரும் பாதகம் புரிந்த பரபாசனென்னும் கள்ளனுக்கு விடுதலையும் என்ற அநியாயத் தீர்ப்புச் சொல்லுவதோ நீதி புரிய வேண்டிய வேந்தருக்குச் சீலம் என்று பெண்கள் ஓலமிட்டார். இது நீதியல்ல, அநீதி. இது சீலமல்ல அநியாயம் என்பார்.

12 கொல்லாது விட்டுவிடக் கொற்றவன்பல் கான்முயன்றும்
பொல்லாருக் கஞ்சிப்பு கன்றன்கொ லைஎன்பார்
பொல்லாருக் கஞ்சிப்பொ துநீதியைப் புரட்டி
அல்லாத செய்வார்க்க றங்கூற்றே யாமென்பார். 325

இயேசுவைக் கொல்லாது விட்டுவிட வேண்டுமென்று பொந்தியுபிலாத்து பன்முறை முயன்றும் பொல்லாத பொது மக்களுக் கஞ்சிக் கொலைத் தீர்ப்பளித்தான். இப்படி நன்றல்லாத, நீதியலலாத செயல் புரிவார்க்கு அறக் கடவுளே யமனுவான் என்பார்.

சிலப்பதிகாரம் - வழக்குரைகாதை - இறுதி வெண்பாவை ஒப்பு நோக்குக.

அல்லவை செய்தார்க் கறங்கூற்ற மாமென்றும்
பல்லவையோர் சொல்லும் பழுதன்றே-பொல்லா
வடுவினையேன் செய்தவய வேந்தன் தேவி
கடுவினையேன் செய்வதூ உங்காண்.

பாவச் செயல்களைச் செய்தவர்களுக்கு அறக்கடவுளே யமனாக இருந்து ஒறுக்கும் என்கிற பல அறிஞர்களின் கூற்றும் பயனிலதன்று.... அறங்கூற்றம், என்பது நான் மணிக்கடிகை 83-லும்

மூதுரை 27-லும் வாக்குண்டாம் 27-லும் வருவது ஈண்டு அறிதற் பாலன. இது கண்ணகி கூற்ருக அமைந்துள்ளது' என்று ந. மு. வெங்கடசாமி நாட்டார் எழுதியுள்ளார். ஆசிரியர் கிருஷ்ணப்பிள்ளையும் இதை எருசலேம் மாதர் கூறுவதாக அமைத் திருப்பது சிந்திக்கற் பாலது.

13 காட்டிக்கொ டுத்தோன்க ழுத்திலொரு கயிற்றைப்
பூட்டிமன வாதையினுற் பொன்றினனும் பொல்லாங்கு
சாட்டிக்கொலை புரிசண்டா ளர்மனச் சாக்ஷியுந்தம்
பாட்டிற்கி டப்பதென்ன பாவமதி பாவமென்பார். 326

யூதாசு என்னும் சீடன் தன் குரு தேவன் இயேசுவை முப்பது வெள்ளிக் காசுக்குக் காட்டிக் கொடுத்தான். தான் செய்தது தவறென்று உணர்ந்தான். அவன் மனம் அவனை வாதித் தது. அதன் பயனுகக் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டித் தூக்குப் போட்டுக் கொண்டிறந்தான். இயேசுவின்மேல் பொய்க் குற்றம் சாட்டி அவரைக் கொலைபுரிகின்ற சண்டாளருடைய மனச்சாக்ஷி யும் அவர்களுடைய குற்றத்தை அவர்களுக்கு இடித்துக் காட்டா மல் தம்பாட்டிற் கிடப்பதென்ன காரணம்? இது பாவம், அதிக பாவம் என்று ஓலமிட்டார்.

14 நிந்தனையாஞ் செந்நெருப்பு[1]"நெஞ்சைக்கொ ளுத்திடவும்
நொந்தொரு [2] சொற்சொல்லாத நோன்மை [3] நுனித் [துணரின்
மைந்தருக்கிச் சாந்தம் வருமோம கேசனெனுஞ் [4]
சிந்தை செறு நருக்குச் சேராத தென்னெனென்பார். 327

சிவந்த நெருப்பைப் போன்ற பகைவருடைய நிந்தனைச் சொல் இயேசுவின் நெஞ்சைக் கொளுத்துகிறது எனினும் தாம் நொந்து ஒரு சொல்கூட சொல்லாத அவருடைய தவப் பெருமையை ஆராய்ந்து பார்த்தால் இத்தகைய பொறுமைக் குணம் மக்களுக்கு வருதல் கூடுமோ என்றும், இவர் மனுமைந்தன் அல்ல மகேசன் என்னும் முடிவுக்கு வருதல் வேண்டுமே என்றும் இந்த எண்ணம் பகைவருக்கு வராமலிருப்பதற்குக் காரணம் என்ன என்றும் சொல்லியழுதார்.

1 தீயினுற் சுட்டபுண்ணுள்ளாறும் ஆருதே
நாவினுற் சுட்ட வடு.

தீயும் வெவ்வுரையும் சுடுதல் தொழிலால் ஒக்கும் என்ருர் பரிமேலழகர். நிந்தனைமொழி செந்நெருப்புப் போன்றது. அது கொழுந்து விட்டெரியும், நெஞ்சைக் . கொளுத்துமென்ருர் கிருஷ்ணப்பிள்ளை.

2 நொந்தொரு சொற்சொல்லாத: கீழ்வரும் குறள் நோக்குக:
திறனல்ல தற்பிறர் செய்யினு நொநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. குறள் 157.

3 நொங்தொரு சொற்சொல்லா நோன்மை-நோன்மை:
தவம் உண்ணுது நோற்பார் பெரியர் பிறர் சொல்லும்
இன்னுச்சொல் நோற்பாரிற் பின் —குறள் 160

4 மைந்தருக்கிச் சாந்தம் வருமோ மகேசன் எனும்
சிந்தை செறுநறுக்குச் சேராததென்? என்பர்.

மகா + ஈசன் = மகேசன். மக்கள் குலத்திற்கு இத்தகைய பொறுமை வருமோ? வராது. ஆகவே இவர் மகேசன் என்பது உண்மை. இவரே மகேசன் என்னும் எண்ணம் பகைவருக்குச் சேராதது என்ன காரணம்? என்பார்.

எம்பெருமான் கிறிஸ்துவே மகேசன் என்னும் தமதுதுணிவை எருசலேம் மாதர் கூறுவதாகச் சொல்வது பாவிகம் என்னும் காவியப் பண்பு. இதை நுனித்துணர்ந்து இன்புறுக.

15 செந்தாம ரைபோலதி கழுந்தி ருவதனம்
அந்தோ!வ தங்கிய ழகுகுடி போயதென்பார்,
நந்தாக்க ருணைநறு த்துளிக்குங் கண்மலர்கள்
சிந்தாகு லம்பொதிந்து தேசிழந்து விட்டதென்பர். 328

16 உன்னதமெய்ஞ் ஞானம் வந்துகுடி கொண்டதிருச்
சென்னிபுடை யுண்டிரத்தஞ் சிந்துவதோ செவ்வி தென்பார்
மன்னுதிரு மேனிமுற்றும் வாரடியாற் கன்றிநைந்து
சின்னமுற லாவது! ஓ! தெய்வமே! என்பார். 329

இவ்விரு செய்யுட்களிலும் ஆண்டவன் இயேசுவின் திரு வதனம், கண்மலர்கள், திருச்சென்னி, திருமேனி எந்நிலையிலிருந் தனவென்பதைக் கண்ட பெண்டிர் எவ்வாறு ஓலமிட்டனர் என் பதைக்கவிபக்தர் காட்டுகிருர்.

15. இயேசுவின் திருமுகம் செந்தாமரை மலர் போன்றது. இப்பொழுது அம்மலர் வாடி வதங்கி அதில் குடியேறியிருந்த அழகு வெளியேறிவிட்ட தென்பார். அவர் கண்மலர்கள் எஞ் ஞான்றும் கருணைத் தேன்சொட்டிக் கொண்டேயிருக்கும். அவை இப்பொழுது மனவேதனை நிறைந்து ஒளியிழந்துவிட்டன என்பார்.

16. அவருடைய திருச் சென்னியில் உன்னத மெய்ஞ் ஞானம் மகிழ்ந்து குடிகொண்டிருந்தது. இப்பொழுது பகைவர் அடித்தமையால் தலையிலிருந்து உதிரம் வடிகிறது. இதுவோ செவ்விதென்பார்.

திருமேனி முழுவதும் போர்ச்சேவகர் அடித்த வாரடியால் சன்றி, நைந்து சின்னப்பட்டுப் போயிற்று. இதுவோ செவ்வி தென்பார். தெய்வமே! ஓ! ஓ! என்பார்.

இந்தச் செய்யுட்களோடு பவுல் கேரார்ட்டு என்ற ஜெர்மன் கவிராயர் பாடிய "இரத்தங்காயம் குத்தும் நிறைந்து" என்ற பாடலை ஒப்பிட்டுப் பார்க்க. இது பப்ரீசியு ஞானப்பாட்டுக்களில் 52-வது பாடலாக உள்ளது.

1 இரத்தங்காயம் குத்தும் நிறைந்து நிந்தைக்கே
முள் கிரீடத்தாலே சுற்றும் சூடுண்ட சிரசே.
முன் கன மேன்மை கொண்ட இலச்சை காண்பானேன்,
அந்தோ! வதைந்து நொந்த உன்முன் பணிகிறேன்.

2 பூலோகமும் பணியும் முகத்தின் மேனியே,
ஏன் உன்னைத் தான் உமியும் தீட்பாயிற்றந்தமே.
ஐயோ நீ வேறுபட்டாய் பர வெளிச்சமாம்
கண்ஜோதி மா இக்கட்டாய் இருண்டு மங்கலாம்.

3 அன்புள்ள கன்ன ரூபும் உதட்டு வர்ணமும்
வெட்டுண்ட புல்லும் பூவும் படும்போல் உலரும்.
மா கர்த்தரே, நீர்தானே மடிய வேண்டுமோ?
அழிக்கப்பட நானே நேரஸ்தன் அல்லவோ?

10 என் மூச்சொடுங்கும் அந்தக் கடை இக்கட்டிலும்
நீர் எனக்காக இறந்த ரூபாகக் காண்பியும்.
அப்போ நான் உம்மை பார்த்துக் கண்ணேக்கி நெஞ்சிலே
அணைத்துக் கொண்டு காத்து தூங்கட்டும். இயேசுவே.

இனி ஏசாயா தீர்க்கதரிசியின் பாடலையும் (53:1-5) பார்க்க:
அவருக்கழகுமில்லை, சௌந்தரியமு மில்லை;
அவரைப் பார்த்தபோது விரும்ப தக்க ரூபம் அவருக்கில்லை

17 பெண்ணீர்மை குன்ருத பெய்வளையா ரிவ்வண்ணம்
புண்ணிருந் தீயிற்பு கைந்தாருயிர் பொடிப்பப்
கண்ணீரின் துன்பக்க டற்கெல்லை காணுராய்
எண்ணீர ராய்ச்செல்லு மெம்பெருமான் பின்சென்ருர்.
330

பெண் தன்மையில் ஒன்றும் குறையாத பெண்கள் (1) புண்ணில் தீ நுழைந்தாற்போல் புகைந்து அரிய உயிர் தவித்தார்.

(2) கடலுக்கெல்லை காண முடியாது. இவர்கள் துன்பத்தினால் விட்ட கண்ணீர்க் கடலுக்கும் எல்லையில்லை. (3) காக்கை கடனை எவ்வாறு நிறைவேற்றுவதென்ற எண்ணத்தோடு சிலுவை சுமந்து செல்லும் எமது பெருமானைப் பின்சென்றனர்.

நகர் நீங்குபடலம். செ. 97

1 புண்ணுற்ற தீயிற் புகையினுரை படைப்ப
மண்ணுற்ற யர்ந்து மருகிற்று உடம்பெல்லாம்

2 கண்ணுற்ற வாரி கடலுற்ற அங்கிலையே
விண்ணுற்ற தெம்மருங்கும் விட்டமுதகு ரலோசை.

3 எண்ணீரராய்ச் செல்லுமெம்பெருமான்: இரட். சரிதம். 308-314

18 "எருசலேம் புத்திரிகாள்! என்பொருட்டுக் கலுழாதே
துரிகிறமற்றும் பொருட்டுஞ் சுதர்பொருட்டுங்
கலுழ்ந்திடுமின்!
வரிசைபெறு மகப்பெறும லடிகள் பாக்கியரென்ற
உரைசெறியத் தகுநாளிங் குளதாமென் பதையுணர்ந்தே
332

19 அன்றுபுக லிடமரிதா யவரவரே துயர்விஞ்சிக்
குன்றுகளே! மலைக்குலமே! யெமைமூடிக் கொள்ளுதிரால்
என்றுரைப்பர்; பசுமரத்துக் கிதுசெய்வா ரெனில்,
அந்தோ!
தொன்றுலர்ந்து படுமரத்துக் கெதுசெய்யார்
துணிவொன்றி? 333

இவ்விரு செய்யுட்களுக்கும் லூக்கா 23 : 28-31 வசனங்கள் ஆதாரமாகும். அவை பின்வருமாறு:

வச. 28 "இயேசுவோ அவர் முகமாய்த் திரும்பி, எருசலேமின் குமாரத்திகளே, நீங்கள் என்னிமித்தம் அழாமல், உங்கள் நிமித்தமும் உங்கள் பிள்ளைகள் நிமித்தமும் அழுங்கள். [29]மலடிகள் பாக்கியவதிகள் என்றும், பிள்ளை பெருத கர்ப்பங்களும் பால் கொடாத மார்களும் பாக்கியமுள்ளவைகள் என்றும் சொல்லப்படும் நாட்கள் வரும். [30]அப்பொழுது மலைகளை நோக்கி: எங்கள்மேல் விழுங்களென்றும் குன்றுகளை நோக்கி: எங்களை மறையுங்களென்றும் சொல்லத் தொடங்குவார்கள். [31]பச்சை மரத்துக்கு இவைகளைச் செய்தால் பட்ட மரத்துக்கு என்ன செய்யப்படும் என்றார்."

நான்கு சுவிசேஷங்களில் லூக்கா சுவிசேஷத்தில் மட்டுமே இயேசுவின் இந்த வாசகம் சொல்லப்பட்டுள்ளது. இந்த வாசகத்தோடு பழைய ஏற்பாட்டுத் தீர்க்கதரிசிகள் வாக்குகளை ஒப்பிடுக. சகரியா 12:10-14; ஓகியா 10:8; எசேக்கியேல் 20:45-49.

28. "என் நிமித்தம் அழாமல், உங்கள் நிமித்தமும் உங்கள் பிள்ளைகள் நிமித்தமும் அழுங்கள்." ஏன்? இதன் உரைகாண வேண்டுமானால், "நாட்கள் வரும்" என்பதை அறிதல் வேண்டும். பழைய ஏற்பாட்டில் இச்சொற்றொடருக்கு ஒரு தனிப் பொருளுண்டு. கடவுள் வேந்தன் உலகத்திற்குத் ''துஷ்ட நிக்ரகனாக'' "சம்ஹார கர்த்தாவாக" வந்து. தீயோரை யழித்து. "சிஷ்டபரிபாலனம்'' செய்வார் என்ற உறுதிப்பாடிருந்தது. இதைப் பல தீர்க்கதரிசிகள் பல துறைகளில் வருணித்துள்ளார். தெய்வ கோபத்தினால் வரும் தெய்வ தண்டனை நிறைவேற்றப்படும் "நாட்கள் வரும்'' (29) இன்று நீங்கள் காணும் காட்சி அந்த நாளின் முற்பகுதி. அந்த நாளில் தன்னைக் காப்பதே யரிது. தான் பெற்ற மக்களைக் காப்பது அதனினு மரிது. மக்கட்பேறு என்ற பாக்கியம் அந்நாளில் துர்ப்பாக்கியமாய் முடியும். மக்களைப் பெறாத பெண்களே புண்ணியசாலிகள் என்று சொல்லப்படும் நாட்கள் வரும்.

30 அந்த நாளின் பயங்கரத்திற்குத் தப்பப் புகலிடம் தேடுவார்கள். Air-raid-Shelters. மலைகள் குன்றுகள் போன்ற எளிதில் தாக்க முடியாத வலிய புகலிடம் தேவை யாகும்.
இங்கு செய்யுள் மரபு அறிவது நலம்

மலைகளை நோக்கி: எங்கள் மேல் விழுங்கள் என்றும்,
குன்றுகளை நோக்கி: எங்களை மறையுங்கள் என்றும்...

ஒரே கருத்தை இரண்டடிகளில் திருப்பித் திருப்பிச் சொல்வது எபிரேயச் செய்யுள் மரபு. (Paralelism)

நமது தமிழ்ப் புலவர் இவ்விரண்டடிகளையும் ஒரே அடியில் அடக்கிவிட்டார்:

"குன்றுகளே, மலைக்குலமே, எமை மூடிக்கொள்ளுதிர் ஆல்''
இது தமிழ் மரபு.

வசனம் 31 பசுமரம். படுமரம்.

c. f. எசேக். 20;47 "நான் உன்னில் அக்கினியைக் கொளுத்துவேன், அது உன்னிலுள்ள பச்சையான சகல மரங்களையும் பட்டுப்போன சகல மரங்களையும் பட்சிக்கும்.'' 45 முதல் 49 வசனங்களையும் வாசிக்கவும்.

பசுமரம் இயேசு; தொன்றுலர்ந்த படுமரம் யூதகுலம். ஒரு காட்டில் தீப்பிடித்தால் அது முதலில் பட்ட மரத்தைக் கொளுத்திப் பின்னர் பச்சை மரத்தைக் கொளுத்தும். எசேக்கியேல் முனிவர் வாக்குப்படி தெய்வ கோப அக்கினி பச்சை மரங்களையும் பட்டுப்போன மரங்களையும் ஏக சமயத்தில் பட்சிக்கும். ஆனால் இயேசுவின் சொற்படி முதலில் பச்சை மரமும் அடுத்தபடியாக பட்ட மரமும் பட்சிக்கப்படும். இயேசுவின் சொல்லையும் அச் சொல்லைக் கொண்டு அவர் வாழ்க்கையின் நுட்பத்தையும் அறிந்த பரி. பேதுரு பின்வருமாறு எழுதுகிறார்: "நியாயத் தீர்ப்பு கடவுளின் வீட்டிலிருந்தே துவங்கும் காலம் இது; முதல் முதல் நம்மிடமிருந்து அது துவங்கினால் கடவுளின் சுவிசேஷத்திற்குக் கீழ்ப் படியாதவர்களின் முடிவு என்னவாகும். நீதிமானே இரட்சிக்கப் படுவது அரிதானால் பக்தியில்லாதவனுக்கும் பாவிக்கும் கதி என்னவாகும்?" 1 பேது. 4:17.

20 என்றுதுய ருறுமடவார்க் கிரங்கியிருந் துயரோடு
நன்று மொழிந்தடர் சுமையானலிவெய்தித் தளர்ந்தேகத்
துன் றுசிலு வையையாங்கோர் வழிபோக்கன்
[ரெடுத்தேந்தி
ஒன்றிவரு கெனக்கொலைஞ ருத்தமரை கொடுபோனர். 334

இவ்வாறெல்லாந் துயரப்பட்ட பெண்களுக் கிரங்கி வருத்தத்தோடு நன்மொழி பகர்ந்தார். பெரிய சுமை தாங்குவதால் களைப் படைந்து தளர்ந்து நடந்தார். அது சமயம் அங்கு வந்த வழிப் போக்கன் ஒருவனைப் பிடித்து அந்தச் சிலுவையைத் தூக்கச் சொல்லிக் கொலையாளிகள், புருஷோத்தமனாகிய இயேசுவைக் கொலைக் களத்திற்குக் கொண்டு போனார்கள். லூக்கா. 23:26.

இனிவரும் ஐந்து பாடல்கள் கவிக்கூற்று. பல பாட்டுக்கள் ஒரு வினை கொண்டால் அது குளகமெனப்படும், எருசலேம் நகர் நீங்கிக் கொலைக் களம் செல்லும் இயேசுவை மனக் கண்ணால் கண்டு செய்யுள் மூலம் நமக்குக் காட்டும் ஆசிரியர் இக்காட்சியின் நுண் பொருளை நுனித் துணர்ந்து பாடுகிறார்.

21 பெண்டிரெலா மழுதரற்றப் பிள்ளைகளெ லாங்கதறக்
கண்டுகேட்டவரிரங்கிக் கரைந்துருகிக் கருத்தழிய
மண்டுதுய ரெனுந்தீயால் வயிறெரியக் கடிநகரம்
பண்டெரிவீழ்ந்தழிசோதோம் பதிபோலப் பதைத்தேங்க'

22 பொருவரிய பரலோகப் புத்தேளிர் புதுமையிதின்
மருவுவதெம் முடிவோவென்றையுற்று மறுக்கமுறப்
பருவரல்கொண் டைம்பூத பௌதிகமாத் திரையாய
சருவசிருட் டியுந்திகைத்துத் தமைமறந்து நிலைகுலைய,

23 குழனூலிற் பிரியாத குருத்துவமா ரருட்சீடர்
அழலனைய துயர்நலிய அழுதுகரந் துடன் செல்லப்
பழுதறுமெய்ப் பரம்பொருளை மகவாக்கொள் பசுந்
[தோகை
தழலிடுபூங் கொடியேபோற் சாம்பியுயிர் தயர்ந்தேக,

24 எண்ணிலா மறவோர்தம் இகல்னெஞ்சு பறையறைய
உண்ணிலவு விசுவாசத் துரவோர் நெஞ் சுள்ளழியப்
புண்ணியருக் குறுங்கொலையின் புணர்ப்புன்னிப்
(பொருமியழ
கண்ணீரும் பெருமுச்சுங் ககனதுருத் தியிலடைய

25 இப்பரிசு பெருந்துக்கக் குறிமல்கி யெவ்வுயிருஞ்
செப்பரிய துயருழப்பச் செருசலையைப் புறம்போக்கி
ஒப்பரிய முது மூலத் தொருபொருளைக் கொண்டுய்த்தார்
மைப்படுவன் மனக்கொலைஞர் வதைபுரிவான் கொலைக்
(களத்தில்)

21. பெண்கள் அழுதனர்; அரற்றினர்; பிள்ளைகள் கத்தினர்கள். இக்காட்சியைக் கண்டவர்களும் கேட்டவர்களும் கரைந்தார்கள், உருகினர்கள், கருத்தழித்தார்கள். துயரம் என்னும் தீ மண்டியதால் வயிறெரிந்தார்கள். பண்டைய காலத்தில் சோதோம் கொமாரு என்னும் பட்டிணங்கள் தீப்பற்றி எரிந்து அழிந்தன போல் அழகிய எருசலேம் நகரம் இப்பொழுது பதைத்து ஏங்கி நின்றது. நகரம்—நகர மக்கள் ஆகு பெயர். See ஆதியாகமம் 19:23—28.

22. பொருவரிய = ஒப்பரிய; புத்தேளிர் = தேவதூதன். பருவரல்= துன்பம்.

ஒப்பரிய பரலோகவாசிகளான தேவதூதர் இந்தப்புதுமையின் முடிவு எதுவோ என்று ஐயங்கொண்டு மனங் குழம்பினர்கள். பஞ்ச பூதங்களாகிய, பிருத்துவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்களினலாக்கப்பட்ட சருவ சிருஷ்டியும் துன்பம் நிறைந்து, திகைத்து, தம்மையே மறந்து தமது நிலைகுலைந்தன.

எல்லவருந்தத்தம் முயிர்க்கிறுதி யேய்ந்தனபோல்
அல்லல் உழந்து அலமந்து ஆக்கை நிலைதளர்ந்தார்.

பரலோகப் புத்தேளிர் மறுக்கமுற: சருவ சிருஷ்டியுந் திகைத்து = The Death of Jesus has a Cosmic Significance. இயேசுவின் மரணம் மூன்று உலகங்களையும் சருவ சிருஷ்டியையும் பாதிக்கிறது.

23. ஊசியும் நூலும்போல் இணையருத சீடரும் தீப்போன்ற துன்பத்தால் வாடி, அழுது, ஒளிந்து குருநாதன் உடன் செல்லுகிருர்கள். அன்னை மரியும் கூடச் செல்லுகிருள். ஈற்றடிகள் இரண்டும் நுனித் துணர்ந்து இன்புறுத்தகுவன.

பழுதறுமெய்ப் பரம்பொருளை மகவாக்கொள் பசுந்தோகை
அழலிடுபூங் கொடியேபோற் சாம்பியுயிர் தளர்ந்தேக.

பசுந் தோகையாகிய அன்னை மரியின் மகன் யார்? பழுதற்ற மெய்ப் பரம்பொருள். இவரை மகனுகக் கொண்டவள் இப்பொழுது தீயிலிட்ட பூங்கொடிபோல் வெம்பி வெதும்பி உயிர் தளர்ந்து மகன் பின்னே கொலைக்களம் செல்லுகின்ருள் என்ருல் இதைக் காட்டிலும் அவலம் வேறெதுவாகும்? இது முரண் தொடை. A Paradox.

24. மறவோர் = கொலை வீரர். உரவோர் = அறிஞர், முனிவர். இகல்நெஞ்சு = பகையுள்ளம்; ககனம் = உலகம்.

கணக்கற்ற கொலைஞருடைய பகை நிறைந்த உள்ளத்தில் அவர்கள் செய்யும் குற்றத்தை மனச்சாட்சி பறையறைந்தாற்போல் எடுத்துக் காட்டுகிறது. உள்ளத்தில் நிலவிக் கொண்டிருக்கும் விசுவாச ஞானம் நிறைந்தவர்கள் தங்கள் உள்ளத்தினுள்ளே கலங்கி நிற்கிருர்கள். பாவமற்ற புண்ணியருக்கேற்பட்ட கொலையின் சூழ்ச்சியைச் சிந்தித்துப் பொருமி அழுகிருர்கள். இவர்கள் சிந்தும் கண்ணீரையும் விடும் பெருமூச்சையும் பிடித்து வைக்க இந்த உலகமே ஒரு துருத்தியாக நிற்கிறது. The World is the reservoir containing the tears and deep sighs of the believers.

26 இப்பரிசு பெறுந்துக்கக் குறிமல்கி எவ்வுயிரும்
செப்பரிய துயருழப்பச் செருசலையைப் புறம்போக்கி
ஒப்பரிய முதுமூலத் தொருபொருளைக் கொண்டுய்த்தார்
மைப்படுவன் மனக்கொலைஞர் வதை புரிவான் கொலைக்
[களத்தில். 339

இவ்வாறு பெரிய துக்கக் குறிகள் பெருகி எல்லாவுயிர்களும் சொல்லுதற்கரிய துன்பத்தில் வருந்தும்படி கடி நகராகிய எருச

லேமை விட்டு வெளியேறி, இருளும் வலிமையுமுள்ள மனமுடைய கொலையாளிகள் இயேசுவைக் கொலைக்களம் கொண்டுபோய்ச் சேர்த்தனர். ஒப்பரிய முதுமூலத் தொருபொருளைக் கொலைக் களத்தில் கொண்டுய்த்தார். இதுவும் மேற் செய்யுளிற் போல ஒரு முரண்தொடை, A strange Paradox. ஒப்பாரும் மிக்காரு மில்லாத பொருள், ஆதிமூலமான பொருள். ஒரு தனிப்பொருள். ஊனுடல் சுமந்த அப்பொருளைக் கொலைக்களத்தில் கொண்டு போய்ச் சேர்த்தார் என்று அவலமும் மருட்கையும் (வியப்பும்) ஒருங்குசேர ஆசிரியர் அமைத்துள்ளார் என்பதை உன்னுக.

### செருசலையைப் புறம்போக்கி

இந்தச் சொற்கள் எபிரேய நிருபாசிரியர் எழுதியவற்றை (13 : 10-13) நமக்கு ஞாபகமூட்டுகின்றன. இயேசுவும் தமது சொந்த இரத்தத்தினல் ஜனத்தைப் பரிசுத்தம் செய்யும்படி நகர வாசலுக்குப் புறம்பே பாடுபட்டார் (12). சிலுவை ஒரு பலி பீடம். பீடத்தில் பலி கொடுக்கப்படும் ஆடு மாசற்ற ஆட்டுக் குட்டியாகிய இயேசு. எருசலேம் நகர வாசலுக்குப் புறம்பேயுள்ள கல்வாரி மலையில் மாசற்றுப் போகும்படி மரித்தார். ஒப்பரிய முது மூலத்தொரு பொருளை மைப்படு வன்மனக் கொலைஞர் கொலைக் களத்தில் கொண்டுய்த்தார் — ஏன்? வதைபுரிவான் கொண் டுய்த்தார். இந்தக் கொலையாளிகள் இவரைக் கொலை செய்கிறோம் என்பதன்றிப் "பூரணமா ரட்சணிய புண்ணியங்கை கூடுதற்குக் காரணமாம் செய்கை முற்ற"க் கூட்டாளிகளாயிருந்தனர் என்பதறியார். இங்கு இயேசு எருசலேம் நகர் நீங்கு காட்சி தொடங்குகின்றது. அதை "பிதாவே இவர்களுக்கு மன்னியும்" என்ற எமது நூலிற் காண்க.

# IV-3. 'அன்பு மயமாம் திருமேனி'

"கடவுளை யாரும் என்றுங் கண்டதில்லை. திருத்தந்தையாரின் அரவணைப்பிலுள்ள அவருடைய செல்வ மைந்தரே அவரை நமக்கு வெளிப்படுத்தினர். கடவுளுடைய அருளும் உண்மையும் இயேசு கிறிஸ்து வழியாக வந்தன".

"ஆதிமுதல் இருந்ததை,
நாங்கள் கேட்டவற்றை,
கண்ணால் பார்த்ததை,
உங்களுக்கு அறிவிக்கிறோம்.
அதை நாங்கள் நோக்கினோம்,
கையால் தொட்டுணர்ந்தோம்.
நாங்கள் அறிவிப்பது
உயிரின் வார்த்தையைப் பற்றியது"

என்று சொல்லால் பொருளால் பழுதில்லாச் சுருதி மொழி கூறுகின்றது.

அச்சுருதி மொழியைக் கேட்டு, சிந்தித்து, தெளிந்து அனுபவித்தவர்களுள் ஒருவர் மகாவித்துவான் கிருஷ்ணப்பிள்ளையவர்கள். அன்பும் அருளும் எழிலும் வாய்ந்த கிறிஸ்து பெருமானது திருமேனியையும், திருநயனத்தையும் திருவாக்கையும் வியந்து புகழ்ந்து, 'அவருடைய திருத்தாள் தொழுமின்' என்று அன்பு ததும்ப உலகிலுள்ளவர்களை அழைக்கின்றார் அவர். அவர் பாடிய பாடல்கள் பலவற்றுள் ஒன்றைக் காண்போம்:

அன்பு மயமாந் திருமேனி,
அருளுக் குறையுள் திருநயனம்,
இன்பு தரும்மெய்ச் சஞ்சீவி
எழில்வாய் கனியும் திருவாக்கு,
மன்பூ வுலகுக் கஞ்சலென
வழங்கும் அபய வரதாஸ்தம்
துன்பேன் உமக்கிவ் வெம்பெருமான்
துணைத்தாள் தொழுமின் செகத்தீரே!

உறையுள் - இருப்பிடம்; நயனம் - கண்; சஞ்சீவி - அழியா உயிரளிக்கும் மருந்து; எழில்வாய் - அழகான வாய்; மன் பூ உலகு-நிலைபெற்ற பூவுலகமக்கள்; ஆகு பெயர்.

"அபய வரதாஸ்தம்: இருகரங்களுள் இடக்கரம் தாழ்ந்தும் வலக்கரம் உயர்த்தும் நிற்பது. இடக்கை தாளே வணங்கினுர்க்கு அபயம் அளிப்பதையும், வலக்கை அவர்கட்கு வேண்டும் வரமளித் தலேயும் இறைநிலேச் சிற்பங்களில் காணும் அறிகுறிகளாம்" Symbolic representations. இவ்விளக்கம் மகாவித்வான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளேயவர்களுடையது. *

பொழிப்புரை : எம்பெருமான் கிறிஸ்து இயேசுவின் திரு மேனி அன்பு மயமானது. அவருடைய திருக்கண்கள் அவருடைய அருளுக்கு இருப்பிடமாகும். திருவாக்கு; அழகிய வாயிலிருந்து கனிந்தொழுகும் இன்சொற்கள். அவை இன்பந்தரும் மெய்யான சஞ்சீவி போன்றவை. அவருடைய கை, உலக மக்களே அஞ்ச வேண்டா என்று உயர்த்திக் காட்டி அடைக்கலம் வழங்கும் திருக் கரமாகும். இத்தகு பெருமான் நமக்கிருக்கும்போது உமக்குத் துன்பமெதற்கு? இப்பெருமானுடைய இணேயடிகளேத் தொழு வீராக, செகத்தீரே.

விரிவுரை : எம்பெருமான் இயேசுவின் கருணே வடிவை விளக்க எழுந்தது இப்பாடல். திருமேனியை முதலில் கூறி அவருடைய உடல் உறுப்புகளுள் நான்கைத் தனித்தனியாகச் சித்திரிக்கின்ருர் ஆசிரியர்.

இயேசுவின் திருமேனி முழுமையும் அன்பு மயமானது' அவருடைய திருநயனம் அருளுக்கு இருப்பிடமானது. எனவே' அவரது பார்வை, அருட்பார்வை, அருணேக்கம், கண்ணேட்டம் எனப்படும். இவ்வன்பும் அருளும் அவரது அழகிய வாயில் கனிந்து திருவாக்காகப் பொழிந்து வழிகின்றது. அவரது திரு வாக்கைக் கேட்டவர்கள் புத்துயிர் பெற்று இன்புறுவர். அவர் தம் திருக்கரத்தை உயர்த்திக் காட்டி அஞ்சல் என்று உலகமக்களுக்கு அடைக்கலம் அருளுகின்ருர்.

எம் பெருமானின் திருமேனியைப் பரிசித்து, திருக்கண் களேக் கண்டு, திருவாக்கைக் கேட்டு, திருக்கரத்தின் கீழ்ப்பட்டவர் களுக்கு இனித் துன்பமில்லே துயரமுமில்லே. எனவே எம்பெருமா னுடைய திருவடி மலர்களேப் பணிந்து குனிந்து தொழுவதற்கு வாருங்கள் என்றழைக்கின்ருர் ஆசிரியா.

குரு—சீடர் தொடர்பு

நம் நாட்டில் குரு சீடர்களுக்குத் தீட்சை செய்து அவர் களேப் பக்குவப் படுத்துவார். தீட்சை என்பது சைவ சமயச் சடங்கு

---

* அபய வரத அஸ்தம் - அஞ்சாதே என்று வரமளிக்கும் கை அஸ்தம்-வடசொல்-கை, செகத்தீரே-உலகவரே.

(Diksha is an act of intitiation of a disciple into the mysteries of the Saiva religion). தீட்சை பலவிதம்: நயன தீட்சை, பரிச தீட்சை, மானச தீட்சை, வாசக தீட்சை, சாத்திர தீட்சை, யோக தீட்சை, ஔத்திரி தீட்சை என்ற ஏழுவகையான சைவ சமயச் சடங்குகள் வேறு பல தீட்சைகளும் சொல்லப்படும்.*

இவற்றிற்குப் பிரமாணத்தை, 'ஒழிவிலொடுக்கம்' என்ற நூலிற் காணலாம்.

"பரிசித்தும்[1] சிந்தித்தித்தும்[2] பார்த்தும்[3] மலமாயை
கருமத்தை எல்லாம் சுழற்றிச் - சரியாதி
வாதனையாம் போத மயக்கத்தை[4] வாக்காலே
போதைசெய்து போக்கவிடப்போம்."

1. பரிசித்து என்பது பரிச தீட்டை — தொடுதல்
2. சிந்தித்து என்பது மானச தீட்சை — நினைத்தல்
3. பார்த்து என்பது நயன தீட்சை — காண்டல்
4. வாக்காலே என்பது வாசக தீட்சை — சொல்லுதல்

இங்ஙனம் குரு சீடனுக்குச் செய்யும் தீட்சைகள் வகுக்கப் பட்டுள்ளன. சீடனின் பக்குவ நிலைக்கேற்ப ஒரு தீட்சையோ, பல தீட்சைகளோ குருவால் பயன் படுத்தப்படும்.

இத்தகு தீட்சைகள் தமக்குச் செய்தருளல் வேண்டுமென்று திரு இராமலிங்க அடிகள் இறைவனை வேண்டுகின்ற பாடல் ஒன்றினைக் காட்டுதும்.

"கருணைநிறைந் தகம்புறமும் துளும்பிவழிந்
துயிர்க்கெல்லாம் களைகண் ஆகித்
தெருள்நிறைந்த இன்பநிலை வளர்கின்ற
கண்ணுடை யோய்! சிதையா ஞானப்
பொருள் நிறைந்த மறையமுதம் பொழிகின்ற
மலர்வாயோய்! பொய்ய னேன்றன்
மருள் நிறைந்த மனக்கருங்கற் பாறையுமுள்
கசிந்துருக்கும் வடிவத் தோயே!

என்று கடவுளின் கருணை வடிவைச் சுவைப்பட வடித்துக் காட்டுகின்றார் வடலூர் வள்ளலார். "கருணைபொழியும் கண்களையும் வாசக

* சமய தீட்சை, விசேட தீட்சை, நிருவாண தீட்சை.

மழை பொழியும் திருவாயையும், புனித இன்ப மழை பொழியப் பரிசம் அருள்கின்ற தெய்வக் குருவின் திருமேனியையும் மகா தேவ மாலைக்குக் காப்பாக வைத்தபடி", என்று உரை கூறியுள்ளார் குகத் இரசபதி அடிகள்.

"உருமேனி தரித்துக் கொண்ட
தென்றலும், உருவி யந்த
அருமேனி அதுவும் கண்டோம்;
அருவுரு வான போது
திருமேனி உறப் பெற்றோம்;
செப்பிய மூன்றும் நந்தம்
கருமேனி கழிக்க வந்த
கருணையின் வடிவு தானே"

என்பது சிவஞானசித்தியாரில் வரும் செய்யுள் (1:2-74).

கருணையின் வடிவு மூவகைப்பட்டது, 1. உருவம், 2, அருவம் 3. அருவுருவம். இங்குக் கடவுளின் உருவத்திருமேனியை மட்டும் எடுத்துக்கொள்வோம். ஒலி உருவாய் இருந்த கடவுள் இயேசு கிறிஸ்துவில் உருவத்திருமேனியை எடுத்துக்கொண்டார்.

இயேசு பெருமானுடைய திருவாக்கும் திருநோக்கும் அபய வரதாஸ்தமும் அவருடைய அன்பு மயமான திருமேனியின் பல கூறுகள் என்பதை இனிக் காண்போம்,

நம் நாட்டிலுள்ள அருட் குரவர்கள் தங்கள் சீடர்களைத் தனியே வைத்து, மறைவில் அவர்களுக்கு ஞானதீட்சை அளிப்பது வழக்கம். மாணவர்களின் பக்குவ நிலைக்கேற்ப, படிப்படியாக அவர்களுக்குத் தீட்சை செய்யப்படும்.

இயேசுவின் திருமேனி, அன்பு திகழும் பொன்மேனி. நெஞ்சில் நிறைந்த கருணை அவருடைய கண்களில் நிறைந்து வெளிப்படுகின்றது; அகமும் புறமும் துளும்பி வழிகின்றது. அவரை அடைந்த ஆன்ம கோடிகளுக்கெல்லாம் அவர் களை கண்ணாயினர், பற்றுக்கோடாயினர்.

ஆண்டவருடைய அருட்செயல்களையெல்லாம் தீட்சை முறையில் வைத்துக் காண்பது அவசியமில்லை. எனினும், இது ஒரு நல்ல முறை என்று கொண்டு மத்தேயு சுவிசேடம் எட்டாம் ஒன்பதாம்

அதிகாரங்களில் உரைக்கப்பெற்ற இயேசு பெருமானின் அருட் செயல்களை ஒரு சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

மத்தேயு, இயேசு மலைமீதமர்ந்து மக்களுக்கருளிய அருளுரை களை ஐந்தாம் ஆறும் ஏழாம் அதிகாரங்களில் எழில்வாய் கனியும் திருவாக்காகக் காட்டியுள்ளார். இவற்றைப் படிக்கும் போது, மேலே காட்டியுள்ள ஒழிவிலொடுக்கத்தின் இலக்கணத்தை நினைவுக்குக் கொணர்வோம்.

"சரியாதி வாதனையாம் போத மயக்கத்தை வாக்காலே போதை செய்து போக்கிவிடப் போம்,"

சரியாதி - சரியா + ஆதி - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற ஏணிப்படிகள் போன்ற சோபான முறைகள்.

பழைய அறிவு எல்லாம் வாதனை தரும் போதனை. இந்த மயக்கத்தை, வாசக தீட்சையாலும் சாத்திர தீட்சையாலும் போதனை செய்து போக்கிவிடச் செய்வார்.

தீட்சை முறைகள் பல வகைப்படுமென்பதை மேலே கண்டோம். அவற்றுள் நான்கை மீண்டும் காண்போம்.

| 1. காண்டல் | 2. கருதல் | 3. தீண்டல் | 4. உரைத்தல் |
|---|---|---|---|
| நோக்குதல் | பாவனை | தொடுதல் | உபதேசம் |
| பார்த்தல் | மானசம் | பரிசம் | வாசகம் |
| நயனம் | மானசம் | ஸ்பரிசம் | வாக்கு |
| கண் | மனம் | மெய்-கை, கால் | வாய் |

## இயேசுவின் அருட்செயல்கள்

மேற்கூறியவற்றை மனதில் கொண்டு இயேசுவின் அருட் செயல்களை ஆராய்வோம். மத்தேயு 8-ஆம் 9-ஆம் அதிகாரங் களில் ஈரைந்து அற்புதச் செயல்கள் விவரிக்கப்பட்டுள்ளன. எட்டாம் அதிகாரத்தில் ஐந்தும் ஒன்பதாம் அதிகாரத்தில் ஐந்தும் வருவதைக் காண்க.

8-ஆம் அதிகாரம் (பக். 66, செ. 20, 21, 22)

1, தொழு நோயாளியைத் தொட்டு சுகமாக்கியது.

2, முடவனை நடக்கச் செய்தது.

3. பேதுருவின் மாமியாரைத் தொட்டுச் சுகமாக்கியது.
4. பேய்களைச் 'சொல்லொன்றால்' ஓட்டியது.
5. புயலை அடக்கியது.

9-ஆம் அதிகாரம்:

1. முடவனை மன்னித்து நடக்கச் செய்தது.
2. சிறுமியை உயிர் பெறச் செய்தது.
3. பெரும்பாடுள்ள பெண்ணைச் சுகப்படுத்தியது.
4. குருடர் கண்களைத் திறந்தது.
5. பேய்களை ஓட்டியது.

1. தொழுநோயாளியைக் குணமாக்குதல்:

எம்பெருமான் இயேசு மலைமீதமர்ந்து சொற்பெருக்காற்றிய பின்னர் மலையடிவாரத்திற்கு இறங்கிய பொழுது பெருங் கூட்டம் அவரைச் சூழ்ந்து வந்தது. அக்கூட்டத்துள் ஒருவன் தொழுநோய் (குட்ட நோய்) பிடித்தவன். அவன் வந்து இயேசுவைப் பணிந்து, 'ஆண்டவரே, நீர் விரும்பினால் என்னைக் குணமாக்க உம்மால் கூடும்' என்றான். இயேசு தமது திருக்கையை நீட்டி, 'விரும்புகிறேன், குணமாகு' என்று சொல்லி அவனைத் தொட்டார். உடனே அவன் தொழுநோய் குணமாயிற்று.

இந்த நிகழ்ச்சியில் இயேசு அவனைப் பார்த்தது, நயன தீட்சை; குணமாகு என்று சொல்லியது, வாசக தீட்சை; அவனைத் தொட்டது, பரிச தீட்சை; விரும்புகிறேன் என்றது, மானச தீட்சை என்று வகைப்படுத்தலாம்.

2. நூற்றுவர் தலைவனுடைய வேலைக்காரனைச் சுகமாக்கியது

ஆண்டவரது அருட்சொல்லாற்றல்
தலைவனது மகா விசுவாசம்.

தமது சொந்த ஊராகிய கப்பர்நகூமுக்குள் இயேசு நுழைந்தபோது, ராணுவத்தில் நூற்றுவருக்குத் தலைவன் ஒருவன் அவரிடம் வந்து, 'என் வேலைக்காரன் திமிர்வாதத்தால் வீட்டில்

கிடந்து வேதனைப்படுகின்றான், என்று வேண்டிக்கொண்டான், இயேசு அவனை நோக்கி, 'நான் வந்து அவனைக் குணமாக்குவேன். என்றார். 'ஆண்டவரே, நீர் என் இல்லத்துள் நுழைய நான் எள்ள ளவும் தகுதியற்றவன். நீங்கள் ஒரு வார்த்தை சொன்னால்போதும். என் வேலைக்காரன் குணமடைவான். அதிகாரம் என்பது என்ன என்று எனக்குத் தெரியும். நான் அதிகாரத்துக்குப்பட்டவன். எனினும் எனக்குக்கீழும் படைவீரர் உள்ளனர். ஒருவனை நோக்கி 'போ' என்றால் போகின்றான். வேறொருவனைநோக்கி 'வா' என்றால், வருகிறான். என் வேலைக்காரனைப் பார்த்து 'இதைச் செய்' என்றால் செய்கிறான்' என்று தாழ்ந்து பணிந்து மொழிந்தான்.

இதைக் கேட்ட இயேசு வியந்தார், மகிழ்ந்தார். தம்மைப் பின் தொடர்ந்தவர்களை நோக்கி 'இஸ்ரவேலில்' யாரிடமும் இத் துணை விசுவாசத்தைக் கண்டதில்லை என்று உறுதியாகச் சொல்லு கிறேன் என்றார். பின்னர், இயேசு தலைவனை நோக்கி, நீ போக லாம். நீ விசுவாசித்தபடியே உனக்கு ஆகட்டும் என்று சொன்னார். சொன்ன அந்நேரமே வேலைக்காரன் குணமடைந்தான்.

அந்த நூற்றுவர் தலைவன் மகா விசுவாசமுடையவன். வேறு வார்த்தையில் சொன்னால், அவன் அதிதீவிர பக்குவமுடையவன். எம்பெருமான் 'அவனுடைய விசுவாசத்தை வியந்ததின் காரணத் தைக் காண்டல் எளிது. இயேசு அவனுடைய வீட்டுக்குள் நுழைந்து, அவனுடைய வேலைக்காரனைக் கண்டு நயன தீட்சை செய்து, கையால் தொட்டுப் பரிச தீட்சை செய்து, வாயால் பேசி வாசக தீட்சை செய்த பின்னரே தன் வேலைக்காரனை இயேசு குண மாக்குதல் கூடும் என்று நூற்றுவர் தலைவன் எண்ணவில்லை; நீங்கள் இருந்த இடத்தில் இருந்துகொண்டே, 'ஒருவார்த்தை 'சொன்னால் போதும். என் வேலைக்காரன் குணமடைவான்' என்றார். இம்மொழியில் இயேசுவின் சொல்லாற்றலில் அவனுக்கி ருந்த விசுவாசம், உறுதிப்பாடு ததும்பி வழிகின்றது. அதுமட்டு மன்று. இராணுவத்தில், மேலதிகாரிக்குக் கீழ்ப்பட்டவன் முழுவதும் கீழ்ப்படிய வேண்டும், உடனே செய்தல் வேண்டும். மறுவார்த்தை பேசாது செய்தல் வேண்டும், என்பதை அறிந்து நடந்தவன் நூற்று வர் தலைவன். 'நினைத்தது முடிக்கின்ற சருவ சாமர்த்தியம், இவ்வெம் பெருமானுக்குண்டு எனவறிந்து அவர்பால் பரிபூரண நமபிக்கை கொண்டவன் அவன். இதை உற்றுணர்ந்த ஆண்டவர், 'இஸ்ர வேலர் யாரிடத்திலும் இத்துணை பெரிய விசுவாசத்தை நான் கண்ட தில்லை என்று உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்' என்று வியந்து, மகிழ்ந்து பாராட்டினார்.

"போகலாம், நீ விசுவாசித்தபடியே உனக்கு ஆகட்டும்" என்றார். அந்நேரமே அவர் வேலைக்காரன் சுகமடைந்தான் என்பது வரலாறு. அவர் சொல்ல ஆகும். அவர் கட்டளையிட நிற்கும். இயேசுவின் எழில்வாய் கனியும் திருவாக்கு, நூற்றுவர் தலைவனுடைய வேலைக்காரனுக்கு இன்பம் தரும் மெய்ச்சஞ்சீவி யாயிற்று என்பதை அறிந்து இன்புறுக.

3. பேதுருவின் மாமி குணமாக்கப்பட்டது

இயேசு பேதுருவின் வீட்டுக்கு வந்து அவருடைய மாமி காய்ச்சலாகக் கிடப்பதைக் கண்டார். அவர் அவ்வம்மையின் கையைத் தொடவே, காய்ச்சல் நீங்கியது. 'என் கடன் பணி செய்து கிடப்பது' என்ற முறையில், அவள் எழுந்து அவருக்குப் பணி செய்தாள் என்பது வரலாறு.

இந்நிகழ்ச்சியில் நயன தீட்சையும் பரிச தீட்சையும் நிகழ்ந்தன. பிணி முற்றும் நீங்கிய காரணத்தால், அவர் படுக்கையை விட்டெழுந்து அவருக்குப் பணி புரியக் கூடியவளானாள்.

4. பேய்களை ஓட்டியது

மாலையானதும் பேய் பிடித்த பலரை அவரிடம் கொண்டு வந்தனர். அவர் பேய்களை ஒரு வார்த்தையால் ஓட்டினார்,

இந்நிகழ்ச்சியில் அவரது திருவாக்கின் ஆற்றல் தோன்றிற்று

5. கடலைக் கடிந்து பேரமைதி உண்டாக்கியது

கலிலேயா நாட்டில் சிறுகடல் ஒன்றுண்டு. அதிலுள்ள படகில் இயேசு ஏறினார். அவர் சீடரும் அதில் ஏறிக்கொண்டனர். திடீரென்று கடலில் மாபெருங் கொந்தளிப்பு உண்டாகி, படகுக்கு மேல் அலைகள் எழுந்தன. இயேசுவோ, தூங்கிக் கொண்டிருந்தார். 'இது அறிதுயில் எனப்படும்'. சீடர் அவரிடம் வந்து அவரை எழுப்பி, "ஆண்டவரே, எங்களைக் காப்பாற்றும் (இரட்சியும்), நாங்கள் மடிந்துபோகிறோம்" என்று கூக்குரலிட்டனர். இயேசு அவர்களை நோக்கி, "குறைவான விசுவாசம் உள்ளவர்களே, ஏன் இவ்வளவு பயம்?" என்று சொல்லி எழுந்து, காற்றையும் கடலையும் கடிந்தார். கடியவே, பேரமைதி நிலவியது. அங்கிருந்தவர்கள் வியந்து, "காற்றும் கடலும் இவருக்குக் கீழ்படிகின்றனவே! இவர் யார்?" என்று சொல்லிப் பெருமிதங் கொண்டார்.

மக்களின் கூக்குரலைக் கேட்ட எம்பெருமான், 'சொல்லொன்றால் உலகனைத்தும் தோன்றச் செய்தவர்." எனவே, கடுஞ்சொல்லொன்றால் காற்றையும் கடலையும் கடிந்துரைத்துப் பேரமைதி நிலவச் செய்தார். கொந்தளித்த கடலிலும் கொந்தளித்த உள்ளங்களிலும் பேரமைதி நிலவியது.

காற்றையும் கடலையும் மட்டும் கடிந்துரையாமல், தம் சீடரையும் கடிந்துரைத்தார் ஆண்டவர். நூற்றுவர் தலைவருடைய விசுவாசத்தின் நிறைவை வியந்து உரைத்தவர் சீடருடைய விசுவாசத்தின் குறைவைக் கடிந்து உரைத்தார். தலைவருக்குக் கிடைத்த வாசக தீட்சை, எழில்வாய் கனியும் திருவாக்கு. சீடருக்குக் கிடைத்த வாசக தீட்சை, எழில் வாய் முனியும் திருவாக்கு.

'ஏன் இவ்வளவு பயம்?" என்று சொல்லிக் காற்றையும் கடலையும் அதட்டின போது, இயேசு தமது கையை உயர்த்திக் காட்டி இருத்தல் கூடும். அஞ்சேல் என்று சொல்லித் தம் 'அபயவரதாஸ்தத்தைக்' காட்டியிருப்பார். அவர் சொல்லைக் கேட்டும், அவர் கையைக் கண்டும் சீடர் பயம் நீங்கினர். இக் கருத்துப்பட,

'மன் பூ உலகுக்கு அஞ்சல் என
வழங்கும் அபய வரதாஸ்தம்;
துன்பேன் உமக்கு? இவ் வெம் பெருமான்
துணைத்தாள் தொழுமின், செகத்தீரே'

என்றழைக்கின்றார் கவிஞர் பெருமான்.

6. முடவனைக் குணமாக்கியது.

இயேசு தமது சொந்த ஊருக்கு வந்த போது முடவன் (திமிர்வாதக்காரன்) ஒருவனைக் கட்டிலில் கிடத்திச் சிலர் அவரிடம் கொண்டு வந்தனர். "கொண்டு வந்தவர்களுடைய விசுவாசத்தை இயேசு கண்டு, முடவனை நோக்கி, "மகனே, தைரியமாயிரு. உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன' என்றார். அது அவர் எழில் வாய் கனியும் திருவாக்கு. பின்னர் முடவனை நோக்கி, 'எழுந்து உன் கட்டிலைத் தூக்கிக்கொண்டு வீட்டுக்குப் போ' என்று சொன்னார். சொன்னவாறே முடவன் எழுந்து கட்டிலைத் தூக்கிக்கொண்டு தன் வீட்டுக்குச் சென்றான். அவருடைய சொல்லாற்றல் அவனுக்கு வாசக தீட்சையாயிற்று.

இது மக்கள் கண்ட காட்சி. அச்சம் அவர்கள் உணர்ந்த உணர்ச்சி. கடவுளுக்கு அவர்கள் மகிமை செலுத்தியதன் காரணம் அவர்களுடைய மகிழ்ச்சி. மகிழ்ச்சியின் பயன் அவர்கள் தெய்வத்தைப் புகழ்ந்த புகழ்ச்சி. மறுபக்கத்தில், மறைநூல் வல்லுநர் சினந்தனர்; உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்றதைத் தெய்வ நிந்தனை எனக் கருதினர்.

இந்த அருட்—செயல், தெய்வத்தை இகழ்ந்த இகழ்ச்சி யன்று. இது திருவருட்செயல் என்று அறிய அவர்களுகடு ஆற்றலில்லை, பக்குவமில்லை.

## 7. சிறுமி உயிர் பெற்று எழுந்தது

தலைவன் ஒருவன் இயேசுவை அணுகி அவரைப் பணிந்து, 'என் மகள் இப்பொழுதுதான் இறந்தாள்; ஆயினும் நீர் வந்து அவள் மீது கையை வையும்; அவள் உயிர் பெறுவாள்' என்றான். இயேசு எழுந்து தம் சீடர்களோடு அவன் பின்னே சென்றார். அவர் தலைவன் வீட்டுக்கு வந்த போது, தாரை ஊதுவோரையும் ஒப்பாரி வைத்துச் சந்தடி செய்வோரையுங் கண்டு, 'விலகிப் போங்கள். சிறுமி சாகவில்லை; தூங்குகிறாள்' என்றார். அவர்களோ, அவரை ஏளனம் செய்தார்கள். கும்பலை வெளியேற்றிவிட்டு, அவர் உள்ளே சென்று, அவள் கையைப் பிடிக்கவே, சிறுமி எழுந்தாள். இச்செய்தி நாடெங்கும் பரவிற்று.

கையைப் பிடித்த காரணத்தால் இது பரிச தீட்சையாயிற் றெனலாம்.

## 8. பெரும்பாடுற்ற பெண்ணைச் சுகப்படுத்தியது

மேற்சொன்ன சாவு வீட்டுக்கு இயேசு போய்க் கொண்டிருந்த வழியில், பன்னிரு ஆண்டுகளாகப் பெரும்பாட்டி னால் வருந்திய ஒருத்தி, இயேசுவின் பின் புறத்தில் வந்து, அவர் போர்வையின் விளிம்பை மெல்லத் தொட்டாள். "நான் அவருடைய போர்வையின் விளிம்பைத் தொட்டாலே சுகமாவேன்" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டாள். இயேசு திரும்பி அவளைப் பார்த்து, 'மகளே, தைரியமாயிரு; உன் விசுவாசம் உன்னைக் குணமாக்கிற்று' என்றார். அந்நேரமுதல் அவள் சுகமாயிருந்தாள்.

இந்த நிகழ்ச்சியில் மேற்சொல்லப்பட்ட எந்த தீட்சையும் செய்யப்படவில்லை. ஆண்டவர் அவளைத் தொடவில்லை, பார்க்க வில்லை. அவளோடு பேசவுமில்லை. அவ்ளும் அவரைத் தொட வில்லை. அவருடைய போர்வையை, போர்வையின் ஓரத்தை

மட்டும் தொட்டாள். 'தொட்டாலே போதும், சுகமாவேன்' என்ற அவளுடைய திண்ணிய விசுவாசம் அவளுக்குச் சுகத்தை அளித்தது என்று அவளுடைய விசுவாசத்தைப் பாராட்டினார் ஆண்டவர்.

கருணை நிறைந்து அகம் புறமும் துளும்பி வழிந்து, உயிர்க்கெல்லாம் களைகண்ணாகி, நாடு நகரமெங்கும் இன்ப நிலை வளர்க்கின்ற அருளுக்கு எடுத்துக்காட்டாக மேற்கூறிய அருட்செயல்கள் மிளிர்கின்றன.

9. குருடர் இருவருக்குப் பார்வை அளித்தது.

எம்பெருமான் ஓரிடத்திலிருந்து வேறு ஓரிடத்திற்குப் போகையில், குருடர் இருவர் அவரைப் பின்தொடர்ந்து, 'தாவீதின் மைந்தரே, எங்கள்மேல் இரக்கம் வையும்' என்று கூவினர். அவர் வீடு சேர்ந்ததும் குருடர் அவரை அணுகினர். இயேசு அவர்களைப் பார்த்து, 'நான் உங்களுக்குப் பார்வை அளிக்க என்னால் முடியுமென்று விசுவாசிக்கிறீர்களா?' என்று வினவினார். அவர்கள் 'ஆம், ஆண்டவரே' என்றார்கள். அவர் அவர்கள் கண்களைத் தொட்டு 'உங்கள் விசுவாசத்தின்படியே உங்களுக்கு ஆகட்டும்' என்றார். அவர்களுடைய கண்கள் திறந்தன.

அவர்கள் கண் பார்வையற்ற குருடர்களாயிருந்தமையால் அவர்களுக்கு நயன தீட்சை செய்வதில் பயனில்லை. எனவே அவர்களோடு பேசி, நீறு பூத்த நெருப்புப் போலிருந்த அவர்கள் விசுவாசத்தைத் தூண்டிவிட்டார். தமது வினாவினால். பின்னர் அவர்களைத் தொட்டார். இது பரிச தீட்சையாயிற்று. அவர்களைத் தீண்டித் தமது கருணையுள்ளத்தை அவர்கள் தீண்டக் கூடியதாக்கினார்.

இயேசு அவர்களோடு தொடர்பு கொள்ளும் முன்னரே குருடருக்கு அவர்பால் ஓரளவு விசுவாசம் இருந்த காரணத்தால் அவர்கள் அவரை, 'தாவீதின் மைந்தரே' என்று பெயர் சொல்லி அழைத்தார்கள். அவர்களுடைய அகக்கண் ஏற்கெனவே திறந்திருந்தது. இயேசு தமது வாசக தீட்சையாலும் பரிச தீட்சையாலும் அவர்களுடைய புறக்கண்களையும் திறந்தார்.

தாம் அவர்களுக்குச் செய்த உதவி கைம்மாறு கருதாத கருணையாதலின், 'இது யாருக்கும் தெரியாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்' என்று அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்டளையிட்டார். ஆனால், கண் பெற்றவர்கள் வெளியே போய் அவரைப்பற்றிப் பிரசாரம் செய்யலானார்கள்.

ஆண்டவரது கருணையுள்ளத்திற்கேற்ப அவர்களது நன்றியுள்ளமும் இருந்தது. தினைத்துணையாக நன்றி செய்யினும் பனைத் துணையாகக் கொள்வர் பயன் தெரிந்தவர். பனையளவு நன்மை பெற்றவர் பலர் அறியச் சொல்வதும் அவர்கள் இன்பக் கடனன்றோ!

10. கண்பார்வை பெற்றவர்கள் சென்றபின்னர், பேய் பிடித்த ஊமையன் ஒருவனை இயேசுவிடம் கொண்டு வந்தனர். அவர் பேயை ஓட்டவே, ஊமையன் பேசினன். மக்கட்கூட்டம் வியப்புற்று,இப்படி ஒருகாலும் இஸ்ரவேலில் கண்டதில்லை!' என்று சொல்லிப் பெருமிதங் கொண்டது. பரிசேயரோடு, இவன் பேய்களின் தலைவனைக் கொண்டே பேய்களை ஓட்டுகிறான்' என்றனர்.

இந்த நிழ்ச்சியில் தீட்சையொன்றும் குறிப்பிடப்படவில்லை, மேலே, 'அவர் பேய்களை ஒரு வார்த்தையால் ஓட்டினர்' என்றதனுல், இங்கும் அவ்வாறு செய்திருப்பார் என்று கொள்வது பொருந்தும்.

இயேசுவின் அன்பும் அருளும் திருவாக்கும் வெளிப்பட்ட நல்லதொரு நிகழ்ச்சியைக் காட்டி இக்கட்டுரையை முடிப்போம்.

குழந்தைகளைத் தொட வேண்டுமென்று தாய்மார் இயேசுவிடம் அவர்களைக் கொண்டு வந்தனர். அவர்களைச் சீடர் அதட்டினர். இயேசு அதைக் கண்டு சினந்து, சீடர்களை நோக்கி, 'குழந்தைகளை என்னிடம் வரவிடுங்கள், தடுக்க வேண்டா. ஏனெனில் கடவுளினரசு இத்தகையோரதே. உறுதியாக உங்களுக்குச் சொல்கிறேன்: கடவுளின் அரசைக் குழந்தை போல ஏற்றுக் கொள்ளாத எவனும் அதனுள் நுழையவே முடியாது, என்ருர். பின்பு அவர் அவர்களை அரவணைத்து, கைகளை அவர்கள் தலைமேல் வைத்து ஆசீர்வதித்தார், (மாற்கு 10:13-16).

மேலே காட்டிய பத்து நிகழ்ச்சிகளுக்கும் மேம்பட்டது இவ்வருட்செயல். அன்பு மயமாகிய தமது திருமேனியோடு சேர்த்துக் குழந்தைகளை அரவணைத்தார்; சீடர் தம் தாய்மார்களை அதட்டுகின்ருர்களே என்று வெருண்ட குழந்தைகளுக்காகப் பரிந்து பேசி, அவர்களை அஞ்ச வேண்டா என்று அபயங் கொடுத்தார். தம் கரங்களை அவர்கள்மேல் வைத்தார்; உச்சிமோந்திருப்பார்; அருளுக்குறையுளாகிய தமது திரு நயனத்தை அவர்கள்மேல் திருப்பினுர்; எழில் வாய் கனியும் திருவாக்கினுல் அவர்களை ஆசீர்வதித்தார்.

எனவே, மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகள் வாயிலாகத் தம் உள்ளத்திலே நிறைந்த கருணை புறத்திலும் ததும்பி வழிந்து யாவர்க்கும் எளிதில் புலனுகுமாறு உயிர்க்கெல்லாம் பற்றுக்கோடாகி அவர்களை இன்ப நிலையிற்கொணர்ந்து அவர்களை வளர்க்கின்ருர் என்பதைக் கண்டு நாமும் இன்புறுவோமாக!

இதுகாறும் கடவுளின் தனிப்பெருங்கருணை இயேசுவின் திருமேனியின் வாயிலாக வழிந்து வந்ததைக் கருதி வந்தோம். இனி நாம் செய்ய வேண்டுவது யாது? கருணையால் கொடுக்க நீட்டிய கரத்திலுள்ளதை நாம் நமது கையை நீட்டிப் பெற்றுக் கொள்ள வேண்டும். இதை விசுவாசம் என்பார் பெரியோர். விசுவாசமிருந்த இருந்த இடத்தில் இயேசு எளிதில் அருள்பாலித்தார். குறைந்த விசுவாசமிருந்தவர்களிடத்தில் அதைத் தூண்டி நிறைவாக்கினுர், விசுவாசமில்லாதவர்களிடத்தில் அவரது கருணை வெள்ளம் பாயவில்லை. இந்த நிலையைப் 'பொய்' என்றும், 'மருள் நிறைந்த மனம்' என்றும், 'கருங்கற்பாறை' என்றும் கூறினர் பெரியோர்.

இத்தகுக் கருங்கற்பாறையையும் கசிந்துருக்கும் கருணை இறைவருக்குண்டு. நமது நெஞ்சம் இரும்பாக, கருங்கற்பாறையாக இருப்பினும் அதையும் கருணகரக்கடவுள் இளக வைக்க வேண்டும் என்பது நமது விண்ணப்பமாகட்டும்.

அழிவில்லாப் பெருவாழ்வின் வழியில் வந்து சேருங்கள் என்று ஆண்டவர் நம்மை விரும்பியழைத்து வருகின்ருர். நாம் விரைந்து சென்று அவரை வணங்குவோமாக.

"பொய்ய னேன்றன்.
மருள்நிறைந்த மனக்கருங்கற் பாயையுமுள்
கசிந்துருக்கும் வடிவத் தோயே!"

என்று வடலூர் வள்ளலார் தமது மகாதேவமாலைக் காப்புச் செய்யுளில் விண்ணப்பித்தார்.

'இரும்போ நெஞ்சம் இன்னந்தான்
இளக விலையோ? ஈண்டு சற்றே
திரும்பிப் பாரும், உமக்காக
ஜீவன் கொடுத்த தியாகேசன்
பெரும்பா தையைவிட்டு இடுக்கவழி
பிரவே சியுங்கள் பிழைப்பீரென
விரும்பி யழைத்து வருகின்ருர்,
விரைந்து வணங்கும் செகத்தீரே!

என்றழைக்கின்ருர் கவிஞர்பெருமான்.

# KRISHNA PILLAI and KAMBAR

By the Rev. S. W. SAVARIMUTHU



## மறைத்திரு. சவரிமுத்து அடிகள்

"கிறிஸ்தவ மத குருவான இவர் ஓர் உண்மையான கிறிஸ்து அடியார். மொழிப்பற்றும், நாட்டுப்பற்றும் மிக்கவர். திருவாசகம் போன்ற தோத்திர நூல்களிலும் கம்பன் அருளிய இராமாவதாரம் போன்ற காப்பிய நூல்களிலும் ஈடுபாடுள்ளவர்; கம்பனின் கவியாற்றலிலும் கற்பனைத் திறத்திலும் சமரச நோக்கிலும் திளைத்து மகிழ்பவர். ஏசு பெருமானின் அருள் மொழியுடன் கம்பனின் கருத்துமணிகளை ஒப்பீடு செய்து கொண்டிருக்கும் இவர் உண்மையிலேயே சமயப்பணியும் ஆற்றுபவர் ஆவார். இவர் தற்பொழுது மேற்கொண்டிருக்கும் இப் புனிதப்பணி இதுவரை எவருமே மேற்கொள்ளாத பணியாகும்."

கம்பன் விழா மலர்-1977

கம்பன் கழகம்—புதுச்சேரி